(தரங்கன்பாடி) புத்தகங்களைக் கண்டு, பிச்சைக்காரனுக்கு அநேக நாள் சாப்பாடு போட்டு, ஒரு தலைப்பாகையையும் இனுமாகக் கொடுத்து, அந்தப் புத்தகத்தை இரவலாக வாங்கி ஆவலாய்ப் படித்தார். முதல் துவக்கி லூக்கா சுவிசேஷத்தின் பாதிமட்டும் ஓலையில் பிரதியும் பண்ணினார். வாசித்த வசனம் அவர் விசுவாசத்திற்கு எண்ணெய் போலாகி, அதை அதிக மதிகமாய்ப் பிரகாசிக்கச் செய்தது. 1726–ஆம் ௵ அவர் தரங்கைக்குச் சமீபமான திருக்கடையூருக்கு வந்தபோது ஒரு பிச்சைக்காரனிடம் தரங்கையில் பிரசுரமான ஒரு நிருபத்தைக் கண்டு, அதுவும் வேறு பல புத்தகங்களும் தரங்கை குருமாரில் ஒருவரால் கொடுக்கப்பட்டதென அறிந்து, அவற்றையும் அதிகப் பிரியமாய் வாசித்து, பிறகு தன் சகோதரரோடு தரங்கன்பாடிக்குப் போய் ஐயர்மாரைச் சந்தித்து, சுத்த சுவிசேஷ போதகங்களைக் கேட்டறிந்தார். ஆறுமாதக் காலம் ஆராய்ச்சி செய்து, தஞ்சாவூருக்குத் திரும்பிப்போய், விசுவாசத்தில் பலப்பட்டு, ரோமான் மார்க்கக் குருட்டாட்டத்தை ஒழித்து, 1728–ஆம் ௵ தரங்கன்பாடிக்குத் திரும்பி வந்து, சுவிசேஷ லுத்தரன் சபையில் சேர்ந்தார். இவரது உண்மையையும் சுறுசுறுப்பையும் கண்ட ஐயர்மார் 1729–ஆம் ௵ இவருக்கு உபதேசியார் ஊழியங்கொடுத்தார்கள். அவருடைய கேட்டுக் கொள்ளுதலுக்கிணங்கியே வால்தரையர் திருச்சபைச் சரித்திரமென்ற சிறந்த நூலை எழுதினார். இராயல் நாயக்கன் உபதேசியார் 40 வருஷகாலம் கர்த்தருக்கு உண்மையாய் ஊழியஞ் செய்து, தஞ்சை முதலிய அநேக இடங்களில் இரட்சணிய மூர்த்தி நாமத்தைப் பிரஸ்தாபித்து, 1771-ஆம் ௵ கர்த்தராகிய இயேசுவே, என் ஆவியை ஏற்றுக்கொள்ளுமென்று ஸ்தேவானைப்போல ஜெபித்து மரித்தார்.

இந்த இராயல் நாயக்கன் உபதேசியாராலும் சத்தியநாத உபதேசியாராலும் சில ஆண்டுகளில் அநேகர் கிறிஸ்தவர்களாவதற்குக் கர்த்தர் கிருபை செய்தார். இதைக் கேள்விப்பட்டவர்களும் கண்ணாற் கண்டவர்களுமான ரோமானித்தார் இராயல் நாயக்கருக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் காட்டிய பகையும் விரோதமும் கொஞ்சமல்ல. ஏலாகுறிச்சியிலிருந்த வீரமாமுனிவரும் ஜனங்களை மூட்டிவிட்டுச் செய்த கொடுமைகள் அநேகம். மேற்கூறின உபதேசிமாரோ கர்த்தருடைய பலத்தால் துன்பங்களைச் சாந்தத்தோடு சகித்து, தங்களைப் பகைத்தவர்களில் அநேகரையும் சபையிற் சேர்க்கக்

கூடியவர்களானார்கள். அவர்கள் வேலைகளைக் கர்த்தர் ஆசீர்வதித்ததால் 1731-ஆம் ௵ இருந்த வெளிச்சபையார் தொகை 414: தஞ்சாவூர் வட்டத்தில் 99, மாதேவிப்பட்டண வட்டத்தில் 116, மாயூர வட்டத்தில் 177. மறவர் நாட்டில் 22. (1730-ஆம் ௵ இராமநாதபுரம் சேதுபதியாகிய காத்ததேவன் ஐயர்மாரைக் கேட்டுக்கொண்டதினால் தியோகு உபதேசியார் மறவர் நாட்டுக்குப்போய், சுவிசேஷம் பிரசங்கித்தார்)

ஐரோப்பிய குருமாரில் முதல் முதல் தஞ்சை அரசனின் பேட்டி பெற்றவர் பிரசீர் ஐயர். இவரை துளாப்சிங் அரசர் ஆரோன் உபதேசியார் மூலமாய் அழைப்பித்தபோது அந்த ஐயர் 1728-ஆம் ௵ பெபுருவரி மீ வைத்தீஸ்வரன் கோயிலில் அரசனைச் சந்தித்து, தம்மைப் பட்சமாயேற்றுக்கொண்ட அவருக்கும் அவருடைய பெரிய மனுஷருக்கும் சுவிசேஷ செய்தியைத் தெரிவித்தார். அப்படியே அரசன் அவரைத் தமது மகன் கலியாணத்திற்கு அழைத்தபோதும் செய்தார். ஆகிலும், தெருக்களில் அவர் பிரசங்கித்தபோது, அநேக ஜனங்கள், முக்கியமாய் முகமதியர் அவரைத் தடுத்தார்கள். இராஜா அவரை மிக வருத்தத்தோடு முகமதியர் கைக்குத் தப்புவித்து, தமது சுய வாகனத்தில் அவரை அனுப்புவித்தார்.

Pressier.

பிரெசீர் ஐயர் தஞ்சாவூருக்குப் போய் வந்தபின் 25 வருஷ காலம் ஒரு ஐரோப்பிய மிசியோனரியாவது அவ்வூருக்குப் போகக்கூடாதிருந்தது. 1753-ஆம் ௵ தரங்கை தென்மார்க்குத் துரைத்தனத்தாரால் அனுப்பப்பட்டுத் தஞ்சைக்குப் போன (Captain Sivers என்ற) ஒரு துரையோடு வீதெபுரோக் ஐயர் துபாஷியாகப் போய், இராசாவைக் கண்டு, அவரிடம் மிசியோன் காரியங்களைக் குறித்துப் பேசினார். பின் வருஷங்களில் தஞ்சாவூரில் வசித்த கர்மானியராகிய பெர்க் (Berg) துரைமூலமாய் தரங்கை ஐயர்மார் தஞ்சாவூருக்கும், இராஜ அரண்மனைக்கும் தாராளமாய்ச் செல்லக் கூடியதாயிற்று. அத்துரையின் மனைவியும் தரங்கன்பாடிப் பெண்ணாயிருந்ததால் பரிசுத்த இராப்போசனம் வாங்கத் தரங்கன்பாடிக்குப் போக்குவரத்தாயிருந்ததுமன்றி, அவ்விருவர் பொருட்டு ஐயர்மார் பலமுறையும் தஞ்சாவூருக்குப் போய்வர நேரிட்டது. இந்தப் போக்குவரத்தால் அந்தச் சமஸ்தானத்து நாட்டுச் சபைகளுக்கு

Wideorock.

மிகுந்த ஆசீர்வாதமுண்டாயிற்று. ஆயினும், 1756-ஆம் ஹு தஞ்சாவூர் இராஜாவுக்கும் தரங்கை தென்மார்க்குத் துரைத் தனத்தாருக்கும் யுத்தமுண்டானதால், ஐயர்மார் போக்கு வரத்துத் தடைபட்டது. தரங்கைக்குச் சமீபமாய்ப் பாளையம் போட்ட இராசாவின் சேவகரால் ஏழைக் கிறிஸ்தவர்களுக்கு மிகுந்த நஷ்டமுண்டானதுமன்றி, பிறையாற்றுக் கோவி லுக்கும் சேதமுண்டாயிற்று. போர் முடிந்தபின் 1757-ஆம் ஹு கோலோப் ஐயரும், 1761—ஆம் ஹு தாமே (Dame) ஐயரும் தஞ்சாவூருக்கும் திருச்சினாப்பள்ளிக்கும் போய் வந்தார்கள்.

இப்படியிருந்தும், சுவார்ச்சையரே முதல் முதல் தஞ் சையில் வசித்துச் சபைகளை ஒழுங்காக்கவும், பெருகப் பண்ணவும் அவசியமான வேலைகளையெல்லாம் செய்தபடியால் அவரையே தஞ்சைச் சபையின் ஆதி குரு என்னலாம். திருச்சினாப்பள்ளி மிசியோனை ஸ்தாபித்தவரும் அவரேயென்று பார்த் தோம்.

Schwartz.

1762-ஆம் ஹு அவரும் கிளான் ஐயரும் கால் நடையாகப் பயணஞ் செய்து, வழி நெடுக இந்துக்களுக்குப் பிரசங்கித்துக் கொண்டும், கிறிஸ்தவர்களுக்குப் புத்திமதி சொல்லிக்கொண்டும் தஞ்சாவூருக்குப் போனார்கள். அங்கே மேற்கூறிய பெர்க் துரை கட்டியிருந்த ஜெபவீட்டில் கிறிஸ்த வர்களைச் சேர்த்து, அவர்கள் விசுவாசத்தை உறுதிப்படுத்தி னார்கள். பிறகு கிளான் ஐயர் தரங்கைக்குத் திரும்பிவிடவே சுவார்ச்சையர் திருச்சினாப்பள்ளிக்குப் போய், (திருச்சி மிசியோனைப்பற்றிய அத்தியாயம் பார்க்க.) அதைத் தமக்கு வாசஸ்தலமாகத் தெரிந்துகொண்டு, அங்கிருந்து பல இடங் களுக்கும் சென்று மிசியோன் வேலையை நடத்தினார்.

அவர் திருச்சியிலிருக்கையில் பலமுறையும் தஞ்சாவூருக்கு வந்து கிறிஸ்தவர்களைச் சந்தித்துப் போனதுண்டு. அவர் 1769-ஆம் ஹு தஞ்சைக்குப் போயிருந்தபோது துளசி மகா ராஜாவைச் சந்தித்து, மார்க்க விஷயங் களைக் குறித்து அவரோடு சம்பாஷித்து, ராஜா கேட்ட பல கேள்விகளுக்கும் விடை பகர்ந்தார். அவருக்குப் பலகார பட்சணம் கொடுத்தபோது, அவர் ஜெபஞ் செய்து சாப்பிட்டார். கிறிஸ்தவர்கள் பாடுகிற ஒரு பாட்டைப் பாடும்படி ராஜா கேட்க, ஐயர்:

Schwartz & the Rajah.

"என் நெஞ்சை சுவாமி உமக்கே" என்று துவக்கும் ஞானப் பாட்டைப் பாடினர். 1772-ஆம் வரு இராஜா அவரை அழைப்பித்து, அவரோடு நெடுநேரம் சம்பாஷித்தார். பிறகு மேற்குறித்த பெர்க் துரை மகருக்கும் ஒரு ஐரோப்பிய துரைக்கும் இராஜ சமுகத்தில் சுவார்ச்சையரால் விவாகம் நிறைவேற்றப்பட்டது. அதுமுதல் ஐயர் இராஜாவைக் கண்டு பேச அதிக சமயம் அவருக்குக் கிடைத்தது. தஞ்சாவூர் ராஜா பகுதி கட்டத் தவறினபடியால் 1773-ஆம் வரு ஆர்க்காட்டு நவாபு தஞ்சாவூரைப் பிடித்து, அரண்மனைப் பொக்கிஷங்களை எடுத்துக்கொண்டான். அத்தருணத்தில் தஞ்சாவூரில் கட்டியிருந்த ஜெப வீடும் இடிக்கப்பட்டது. சுவார்ச்சையர் நவாபைக் கொஞ்ச நிலங் கேட்டும் அவன் கொடுக்கவில்லை. சண்டையும் பஞ்சமும் ஏழை ஜனங்களை வருத்தினபடியால், தயாள புருஷனாகிய சுவார்ச்சையரிடம் அநேகர் வந்து சேர்ந்து ஞானஸ்நானம் பெற்றார்கள். அவர்கள் வயிற்றுப் பசியால் வந்தாலும், சுவார்ச்சையர் முந்தி அவர்களைப் போதித்து, பின்பு சபையில் சேர்த்துக்கொண்டார். சில நாளுக்குப்பின் தஞ்சாவூர் சமஸ்தானம் நவாபின் வசத்தினின்று விடுதலையாகி, துளசி மகா ராஜாவுக்குக் கொடுக்கப்பட்டது. இச் சமயத்தில் இராஜா சென்னை கவர்னருக்கு எழுதியிருந்த வர்தனப் பத்திரத்தை சுவார்ச்சையர் இங்கிலீஷில் மொழி பெயர்த்தார். அதில் "ராமசுவாமி கடாட்சத்தினால்" தனக்கு அனுகூலங் கிடைத்ததென்று எழுதியிருந்ததை ஐயர் வாசித்து, விசனமுற்று: இது என்ன, தனக்குத்தானே ஒத்தாசை செய்து கொள்ளக் கூடாத ராமன் உங்களுக்கு உதவி செய்திருக்கக் கூடுமா என்று சொல்ல, அரசர்: மெய்யான கடவுள் இதைச் செய்தார் என எழுதுங்கள் என்றார். ஆயினும், சமஸ்தான மீட்புக்காக இந்துக் கோயில்களில் உற்சவங்கள் நடத்தப்பட்டன. என்றாலும், சுவார்ச்சையர் சிலுவையிலறையுண்ட கிறிஸ்துவைக் குறித்து அடிக்கடி ராஜாவுக்குச் சொல்லி வந்ததால் அவர் மனத்தில் அசைவுண்டாயிற்றென்று எண்ண ஏதுவுண்டு. ஐயர் சில வருஷங்களுக்கு முன் தமிழில் இயற்றியிருந்த "விக்கிரகப் பத்திக்காரனுக்கும் கிறிஸ்தவனுக்கும் நடந்த சம்பாஷணை" என்ற நூலை மகாராஷ்டிர பாஷையில் மொழிபெயர்த்துக் கொடுக்கும்படி அரசன் அவரைக் கேட்டுக்கொண்டார். கேட்டுக்கொண்டபடி செய்ததில் விளைந்த பயன் வெளியாகவில்லை.

1777-ஆம் வருஷக் கடைசியில் போலே ஐயர் சுவார்ச்சை யருக்கு உதவியாகத் திருச்சிக்கு மாற்றப்பட்டார். அடுத்த வருஷம் (1778) அந்தப் புதிய ஐயர் தமிழ்ப் பாஷையைக் கற்றுக் கொண்டாரென்று கண்டபின் சுவார்ச்சையர் திருச்சினாப் பள்ளிச் சபையை அவரிடம் ஒப்புவித்துத் தஞ்சாவூருக்கு வந்து, அதைத் தமக்கு வாசஸ்தலமாக்கினார்.

Sch. removed to Tanjore.

அவர் காலை மாலை ஜெபத்தில் வேதாகம விஸ்தரிப்பு செய்து, கிறிஸ்தவர்களுக்கும் புறமதஸ்தருக்கும் புத்திப் பிரசங்கம் செய்வது வழக்கம். இதனால் கிறிஸ்தவர்கள் விசுவாசத்தில் அதிகரிக்கவும், அநேக இந்துக்கள் சத்தியத்தின் அறிவுக்கு வந்து, ஞானஸ்நானம் பெறவும் இடமுண்டாயிற்று. அநேகர் விக்கிரகாராதனை பாவமென்பதை அறிந்து அறிக்கை யிட்டும், ஜாதி ஜனங்களுக்குப் பயந்து, திருச்சபையில் சேரா திருந்தார்கள்.

சுவார்ச்சையர் முகமதியர்களுக்கும் இந்துக்களுக்கும் பிர சங்கம் செய்த சமயங்களில் அவர்கள் கேட்ட கேள்விகளுக்குத் திட்டமும் தெளிவுமாக உத்தரவு சொன்னார். ஒரு சமயத்தில் ஒரு முகமதியர்: உம்முடைய ஜாதியென்னவென்று அவரைக் கேட்க, அவர் : உன்னைப்போல் நானும் ஒரு பாவி, ஆகையால் நீ ஜாதியைப் பற்றிக் கேள்வி கேட்பதைப் பார்க்கிலும், நாம் பாவ விமோசனமடையும் வழியைக் குறித்து விஜாரிப்பது அதிக உத்தமம் என்றார். அவர் திருச்சியிலிருந்து தஞ்சாவூருக் குப்போகையில் ஒருநாள், பிராமணனொருவன், அவர் என்ன வேலையாய்ப் போகிறார் என்று விசாரிக்க, அவர் : கிறிஸ்தவர் களுக்குப் புத்தி சொல்லப் போகிறேன் என்றார் ; அதற்கவன் : அவர்களுக்கு அது எற்கனவே தெரியாதா என்று வினவ, அவர்: நட்ட மரத்திற்குத் திரும்பத் திரும்பத் தண்ணீர் வார்க்க வேண்டியதென்ன என்றார். அரண்மனையில் அவரோடு பேசிக் கொண்டிருந்த ஒரு பிராமணன்: ஒரு இழிகுலத்தானை தொடுவது தீட்டென்று நினைக்கிறீரா என்று கேட்டான். அவர் : நிச்சயமாகவே தீட்டுத்தானென்றார். அவனோ : யார் இழிகுலத்தான் என்றுகேட்க, அவர்: திருடன், பொய்யன், அவதூறு பேசுகிறவன், குடியன், விபசாரக்காரன், மமதை யுள்ளவன், இவனெல்லாம் இழிகுலத்தான் என்றார்.

ஐயையோ, அப்படியானால் நாங்களெல்லாரும் இழிகுலத்தார் தான் என்று சொல்லிக்கொண்டு பிராமணன் போய் விட்டான்.

1779-ஆம் ௵ சுவார்ச்சையர் தஞ்சாவூர்க்கோட்டையிலே இங்கிலீஷ் போர்ச் சேவகருக்காக ஒரு தெய்வாலயங் கட்டத் தொடங்கி, அதற்குப் பொருளுதவி செய்யும்படி சென்னை கவர்னர் துரையைக் கேட்டுக்கொண்டார். கவர்னர் இதற்கு அனுகூலமாகத் தஞ்சை வாசியாகிய ஒரு துரைக்கு எழுதின கடிதத்தில் சுவார்ச்சையரைத் துரிதமாய்ப் பட்டணத்திற்கு அனுப்புவிக்கக் கோரினார். கோரிக்கைப்படி ஐயர் சென்னைக்குப் போனபொழுது, கவர்னர் அவரை நோக்கி: ஹைதர் அலி எங்களோடு போர்புரிய எத்தனிப்பதைக் குறித்து விசனப் படுகிறோம்; நீர் இந்துஸ்தானி பாஷையைச் செம்மையாய் அறிந்திருப்பதால் ஹைதர் அலியோடு நேரே சம்பாஷிக்கக் கூடியவரும், பண ஆசையற்றவரும், கூலிக்கு வேலை செய்யாத வருமாயிருப்பதை முன்னிட்டு உம்மை மைசூருக்கு அவனிடம் அனுப்பப் பிரியப்படுகிறேன் என்றார். ஐயர் சில நாள் தவணை கேட்டு, தமக்குப் போர்ந்த ஞானத்தை அருளும்படி கர்த்தரை நோக்கி ஜெபித்து, தமது பிரயாணத்தால் மிருதியான உயிர்ச் சேதம் விலக்கப்படவும் அநேக புறமதஸ்தருக்குச் சுவிசேஷம் பிரசங்கிப்பதற்கு சமயங் கிடைக்கவும் கூடுமென்றறிந்து, மைசூருக்குப் போக உடன்பட்டார். அவர் முந்தத் தஞ்சா வூருக்குப் போய் சபையைக் குறித்துச் செய்யவேண்டிய ஒழுங்குகளைச் செய்தபின் சத்தியநாத உபதேசியாரைக் கூட்டிக்கொண்டு சீரங்க பட்டணத்திற்குப் போய், ஹைதர் அலியிடம் சமாதானப் பத்திரம் பெற்றுக்கொண்டு திரும்பினார். அவர் தூதுபோயிருந்த காலத்திலும் இடத்திலும் கிறிஸ்துவைக் குறித்து வெளியரங்கமாய்ப் பிரசங்கிக்சப் பயந்ததில்லை. ஹைதர் மகனாகிய திப்பு சுல்தான் தன் குருமார்கள் வித்வான்களின் முன்னிலையில் சுவார்ச்சையரை வரவழைத்து: எங்கள் முகமது நபி பெரியவரோ, உங்கள் ஏசா நபி பெரியவரோ என்று கேட்க, அவர் பதஷ்டமாய் இன்னார் பெரியவரென்று சொல்லாமல், இருவருடைய சரித்திரத்தையும் யாவரும் ஒத்துக்கொள்ளத் தக்க விதமாக விபரமாய்ச் சொல்லிக்காட்டி, இவ்விருவரில் இன்னார் பெரியவர் என்று விவேகிகளாகிய நீங்களே நிதானித்து அறிந்துகொள்ளுங்கள் என்றார். எல்லாரும்

Sch. & Hyder Ali.

அவருடைய சாமர்த்தியத்தையும் விவேகத்தையும் புகழ்ந்து கொண்டார்கள். ஹைதர் அவரோடு பட்சமாய்ச் சம்பாஷித்து, கடைசியாகத் தன்னோடு பெர்சிய பாஷையில் பேசக் கேட்டுக் கொண்டான். ஐயர் அவனிஷ்டப்படி செய்து: நான் தங்களிடம் தூது வந்ததனால் இந்தத் தேசத்திற்கும், அதன் குடிகளுக்கும் க்ஷேமகரம் உண்டாவதாக என்று சொன்னார். ஹைதர் அவரை இதற்காகப் புகழ்ந்து, அவருக்குப் பிரயாணச் செலவுங் கொடுத்தனுப்பினான். இத்தொகையைக் கொண்டு ஐயர் பிற்காலத்தில் தஞ்சாவூரிலே தர்மப் பள்ளிக்கூடமொன்றைக் கட்டினார். அப்படியே இங்கிலீஷ் கம்பெனியார் கொடுத்ததையும் தாம் வாங்கிக்கொள்ளாமல், அதைத் திருச்சினாப்பள்ளியிலிருந்த போலே ஐயருக்குக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டார். அவர் விருப்பத்திற்கிசைந்து, போலே ஐயருக்கு வருஷாந்தரம் 300 வராகன் கொடுத்து வந்தார்கள். மேலும், தஞ்சாவூரிலிருந்த இங்கிலீஷ் பட்டாளத்தாருக்குக் குருவாயிருந்ததற்காகத் தமக்குக் கிடைத்த பதினாயிரம் ரூபாயையும் சுவார்ச்சையர் தமக்கென்று எடுத்துக்கொள்ளாமல், அதில் பாதியைத் தமது சீஷனாகிய யோவான் கஸ்பார் கோலோப்புக்குக் கொடுத்துவிட்டு, மறு பாதியை ஐந்து உபதேசிமாரின் சம்பளத்துக்காக வைத்து வைத்தார்.

அவர் கோட்டையில் கட்டத்தொடங்கின கோயில் வேலை முடிந்தபின் கோட்டைக்கு வெளியே தமக்கு ராஜா கொடுத்த விஸ்தாரமான பூமியில் தமிழ்ச் சபையாருக்காக மற்றொரு கோயிலைக் கட்டி, அதை அந்த வருஷத்துக் கிறிஸ்து பிறப்பின் பண்டிகையில் பிரதிஷ்டை செய்தார் (1780). அவர் ஞாயிற்றுக்கிழமையிலே கோட்டைக் கோயிலில் இங்கிலீஷ் ஆராதனை செய்தபின் வெளிக்கோயிலில் தமிழ் ஆராதனை நடத்திவந்தார்.

Church building.

ஹைதர் தான் கொடுத்த வார்த்தைப்பாட்டை மீறி, 1780-ஆம் ௵ இங்கிலீஷ்காரரோடு போர்தொடுத்துத் தேசத்தைப் பாழாக்கி வந்தான். அவன் இங்கிலீஷ்காரரைக் கடும் பகையாய்ப் பகைத்தும், சுவார்ச்சையரை மிகவும் மதித்து, அவர் போக விரும்பும் எவ்விடத்திற்கும் அவரைத் தடையின்றி விடும்படி தன்னுடைய உத்தியோகஸ்தருக்கும் சேனைவீரருக்கும் உத்தரவு பண்ணினான். இதனால் யுத்தகாலத்திலும் ஐயர்

எங்கும் பயணஞ்செய்து, சுவிசேஷம் பிரசங்கிக்கக் கூடியவரா யிருந்தார். 1782-ஆம் வருஷத்தில் ஹைதர் இறந்த பின்னும் திப்புசுல்தான் 1783-ஆம் வருஷ முடிவு மட்டும் யுத்தத்தைத் தொடர்ந்து செய்தான். அவன் அநேக ஊர்களைப் பிடித்து, விக்கிரகங்களை நிர்மூலமாக்கி, வீடுகளைக் கொளுத்தி, இந்துக் களிலே ஆண் பிள்ளைகளைச் சிறைபிடித்து அநேகருக்குச் சுன்னத்துப் பண்ணுவித்தான். மூன்று வருஷகாலமாகச் சண்டையும் பஞ்சமும் பெருத்தபடியால், சுவார்ச்சையர் எற்கனவே யோசனைசெய்து, வேண்டிய தானியத்தை முன்னடியே சேகரம்பண்ணி, கிறிஸ்தவர்களும் இந்துக்களு மான அநேக ஏழைகளைப் பராமரித்தார். இராஜாவாவது கம்பெனியாராவது தானியஞ் சம்பாதிக்கக் கூடாதிருந்த பொழுது, அவர்கள் சுவார்ச்சையரைக் கேட்டுக்கொண்டு, அவர் மூலமாய்த் தானியத்தைப் பெற்றுக்கொண்டார்கள். குடிகளுக்குச் சுவார்ச்சையரிடத்திலிருந்த விசுவாசம் ராஜா வினிடத்திலாவது கம்பெனியாரிடத்திலாவது இருந்ததில்லை. தெய்வ கிருபையால் யுத்தகாலம் முடிந்து, திப்புவுக்கும் கம்பெனியாருக்கும் சமாதானமாயிற்று.

இதற்குப் பின்னும் தஞ்சை சமஸ்தானம் சீரடைந்த தில்லை. துளசி மகாராஜா, தமது மகனும் பேரனும் இறந்து போனதினால் மிக மனமடிவாகி, ஜனங்களுக்குக் கொடுமை பண்ண ஆரம்பித்தார். புக்கினு என்பவருக்குப் பின்பு வந்த பாபு என்கிற மந்திரியும் கொடியவனுயிருந்து ஜனங்களை மிகவும் ஒடுக்கினான். இதனால் அநேக பிரஜைகள் திருச்சினப் பள்ளிக்கும் காரைக்கால் முதலிய இடங்களுக்கும் வலசை வாங்கினார்கள். இவ்விஷயங்களை விசாரணைசெய்து, தஞ்சா வூரைச் சீர்படுத்தி, பிரஜைகளுக்கு நன்மை செய்யும்படி சென்னை துரைத்தனத்தார் சில துரைமாரை ஒரு கமிட்டி யாராக ஏற்படுத்தி, சுவார்ச்சையரை அவர்களுக்கு ஆலோ சனைக்காரராயிருக்கும்படி கேட்டுக்கொண்டார்கள் (1786). அந்தக் கமிட்டியார் சமஸ்தானத்தை அரசனை விட்டு எடுத்துப் போடுவது உசிதமென்று நினைத்தும், சுவார்ச்சையர் இராஜா வுக்காகப் பரிந்துபேசி, இராஜாவுக்குப் புத்தி சொன்ன தினால் சமஸ்தானத்தை ஒழுங்குக்குக் கொண்டுவந்தார். தமது சமஸ்தானத்தைவிட்டு வலசை வாங்கினவர்கள் திரும்பி வந்தால் அவர்களைத் தாம் பட்சமாய் நடத்துவதாகத் தெரி விக்கும்படி இராஜா ஐயரைக் கேட்டுக்கொண்டார். ஜனங்கள்

இராஜாவின் வாக்கை நம்பாதிருந்தும், ஐயர் முகத்துக்காகத் திரும்பி வந்தார்கள். அந்த வருஷத்திலே அவர்கள் காலந் தப்பிப் பயிரிட்டும், முந்தின வருஷங்களிலும் பதின்மடங்கான பலனை அடைந்தார்கள்.

சுவார்ச்சையர் 1778-ஆம் வருஷத்திலும் 1785-ஆம் வருஷத்திலும், ஆக இருமுறை பாளையங்கோட்டைக்குப் போயிருந்தார். (விபரம் திருநெல்வேலி மிசியோனைப் பற்றிய அத்தியாயத்தில் சொல்லப்படும்). அவர் இரண்டாம் முறை போய்த் திரும்பும்பொழுது தம்மோடு அழைத்துவந்த 'வேதநாயகம்' என்ற வாலிபன் கர்த்தருடைய இராச்சியத்தில் மிகப் பயனுற உழைத்த கவிராயனானதால், பூர்வ மிசியோனின் நற்பலனை விளங்கின அவருடைய சரித்திரத்தையும் இங்கே சுருக்கிச் சொல்வது நலமாம்.

Poet Vedanayagam.

திருநெல்வேலி தேவசகாயம் பிள்ளை குமாரன் வேதநாயகம் என்பவர் பிறந்தது 1774-ஆம் ௵ செப்டெம்பர் ௴ 7-ஆம் ௳. இவருக்கு ரோமான் சபையில் ஞானஸ்நானத்தில் கொடுக்கப்பட்ட நாமம் வேதபோதகம் என்பது. தகப்பனார் தன் குருவின் நாமத்தைச் சொல்லக்கூடாதென்று தன் மகனை வேதநாயகமென்று அழைத்து வந்தார். தகப்பன் சுவார்ச்சையர் தேவசகாயம் பிள்ளையைச் சுவிசேஷ சபையில் சேர்த்தபின் பாளையங்கோட்டைக்குப் போயிருந்த சமயத்தில் வேதநாயகமென்ற சிறுவன்மேல் பிரியமாகி, அவரைத் தம்மோடு தஞ்சைக்கு அழைத்து வந்தார். அப்போது அவருக்கு வயது பன்னிரண்டு.

வேதநாயகம் என்பவர் சுவார்ச்சையரிடத்தில் இரண்டு மூன்று வருஷகாலமாகப் பிரயோசனமான பல காரியங்களைப் படித்து வந்தபின், 1789-ஆம் ௵ தரங்கைக்கு அனுப்பப்பட்டார். அங்கே பள்ளிக்கூடம் நடத்திவந்தவர் டாக்டர் யோனையர். இவரிடத்தில் நாலு வருஷகாலமாக வேதசாஸ்திரம் முதலியவற்றைச் சுறுசுறுப்பாய்க் கற்று வந்ததுமன்றி கொஞ்சம் இங்கிலீஷ், கொஞ்சம் ஜெர்மன் வாசிக்கவும் படித்துக்கொண்டார். பிறகு தஞ்சை சுவார்ச்சையரிடம் வந்துசேர்ந்து, தமது பத்தொன்பதாம் வயதில் தலைமை உபாத்தியாரின் உத்தியோகம் பெற்றார். இவரிடத்தில் அநேக பிள்ளைகள் படித்து முன்னுக்கு வந்தார்கள்.

அவர் தமக்குக் கொடுக்கப்பட்ட வரங்களைக் கர்த்தருடைய மகிமைக்கென்றே கையாடிவந்தார் என்பதற்கு அவர் தமது இருபதாம் வயது முதல் சபைகளுக்கும் பள்ளிக்கூடங்களுக்கும் உபயோகமாக உண்டுபண்ணியிருக்கிற பாடல்களும் நூல்களும் அடங்கிய சிறிதும் பெரிதுமான 120 புத்தகங்கள் சாட்சியாம். அவர் பாடல்களை உண்டுபண்ணுவதுடன் அவற்றைச் சகல மதத்தினருக்கு முன்னும் வெளியரங்கமாய்ப் பாடிப் பிரசங்கித்து, கிறிஸ்துவைத் தைரியமாய் அறிக்கையிட்டு வந்தார். அவர் ஐம்பது வருஷ காலமாய்த் தபசுகாலமாகிய நாற்பது நாட்களில் தமது வீட்டின் முகப்பில் கிறிஸ்துவைச் சிலுவையில் அறையுண்டவராகத் தவறாமல் பிரசங்கிக்கிற வழக்கமுடையவராக இருந்தார். அவருடைய பாடல்களையும் பிரசங்கங்களையும் கேட்டு மகிழ்ந்த தஞ்சைச் சபையாரும் அப்படியே தரங்கை, சென்னை, திருச்சி முதலிய சபையாரும் அவரைக் கவிச் சக்கிரவர்த்தியாக அங்கிகாரம் செய்து, அவருக்குச் சுவிசேட கவிராயப் பட்டஞ் சூட்டினார்கள்.

தஞ்சை சர்போஜி ராஜா அவரை மிகவும் கனப்படுத்தி மாதச் சம்பளமும் கொடுத்து வந்தார். அவர் ராஜ உபகாரம் பெறுகிறவராயிருந்தும், அந்த இந்து அரசன் ஒரு சமயத்தில் விக்னேசுரன் பேரில் ஒரு பாடல் செய்யச் சாஸ்திரியாரைக் கேட்டுக்கொண்டும், இவர் அதற்குக் கொஞ்சமும் உடன்படாமல், அவர் கேட்டுக்கொள்ளுதலை அல்லத்தட்டி விட்டார்.

கிறிஸ்தவர்களுக்குள் நடமாடும் அவபக்தியான சடங்குகள் அவருக்கு மெத்தப் பகை. இவைகளுக்கு விரோதமாய் அவர் சாஸ்திரக் கும்மியென்ற சிறந்த நூலை இயற்றி இருக்கிறார்.

அவர் தமது ஆயுள் காலமெல்லாம் ஜெபவீரனாக விளங்கினார். அவர் வீட்டில் அந்தி சந்தி ஆராதனை தவறின நாள் இல்லை. தமது வாழ்விலும் தாழ்விலும் தேவ வசனமும் ஜெபமுமே அவர் கையாடிவந்த விசேஷித்த எத்தனங்கள்.

அவர் தமது முழுமனதினாலும் சேவித்துவந்த பரமராசாவின் சந்நிதானம் போய்ச் சேர ஆயத்தமுள்ளவராயிருந்து, 1864-ஆம் வரு ஜனுவரி மீ 24-ஆம் உ காலை குடும்ப ஆராதனையில் ஆசீர்வாதங்கூறி, அன்று மாலையில் கர்த்தருக்குள் நித்திரையடைந்து, மறுதினத்திலே தஞ்சைக் கிறிஸ்தவ குருமார் சபையாரால் வெகு சிறப்பாய் அடக்கஞ் செய்யப்பட்டார்.

வேதநாயக சாஸ்திரியாரைப்போல் தகப்பன் சுவார்ச்சை யரால் முன்னுக்கு வந்த பலருள் முன்சீப் பாக்கியநாதபிள்ளை ஒருவர். இவர் லௌகீக உத்தியோகம் பார்த்தும், தமது இரட்சகருக்கு மகிமையும், அநேக ஏழைக் கிறிஸ்தவர்களுக்குப் பிரயோசனமுமாய்ப் பிழைத்தார்.

அப்படியே சர்போஜி ராஜா ராஜ பதவிக்கு வந்ததும் சுவார்ச்சையரின் முயற்சியால் என்பது பின்வரும் சங்கதிகளால் தெளிவாம். துளசி மகாராஜாவுக்குப்பின் பட்டத்திற்கு வரப் பிள்ளை இல்லாமையால், அவர் ஒன்பது வயதுள்ள சரபோஜி என்கிற பிள்ளையைத் தத்தெடுத்துக்கொண்டு அந்தப் பிள்ளையாண்டானை சுவார்ச்சையர் விசாரணைக்கு ஒப்புவித்தார். ஐயரோ இதற்கு உடன்படாமல், இராஜாவின் சகோதரனாகிய அமர்சிங்கிடம் அவரை ஒப்புவிக்க யோசனை சொன்னார். இராஜா அதற்குச் சம்மதித்துப் பிள்ளையைத் தமது சகோதரனிடம் ஒப்புவித்த மூன்று தினங்களுக்குப்பின் மரித்தார். சென்னை கவர்னரோ துளசி ராஜாவின் சுவிகார ஏற்பாட்டை அங்கிகரியாமல், மேற்கூறிய அமர்சிங்கை ராஜாவாக்கினார். அமர்சிங்கு பட்டத்துக்கு வந்தவுடனே மிசியோன் பள்ளிக்கூடமொன்றின் சம்ரட்சணைக்காக வருஷவாரி ஆயிரம் ரூபாய் வரும்படியுள்ள ஒரு கிராமத்தை இனாமாகக் கொடுத்தார்.

Serfojee Rajah.

1787-ஆம் வருஷம் சுவார்ச்சையருக்கு விசேஷித்த சந்தோஷத்தைக் கொடுத்த ஒரு சம்பவம் நடந்தது. அந்த வருஷம் ஜனுவரி மீ 23-ஆம் வ (எட்டுவயதுப் பிள்ளையாகத் தாம் சுவிகாரமெடுத்து வளர்த்த) யோவான் கஸ்பார் கோலோப் ஐயருக்குத் தரங்கன் பாடியில் அவர் குருப்பட்டங் கொடுத்ததே அச்சம்பவம். பட்டம் பெற்றவரின் தகப்பனாராகிய பல்தாசார் கோலோப் ஐயர் ஐம்பது வருஷங்களுக்குமுன் அதே தேதியிலே தரங்கன்பாடித் துறைமுகத்தில் இறங்கின ஜூபிலி சந்தோஷத்தோடு தெய்வாலயத்தில் வீற்றிருந்து கர்த்தரை ஸ்தோத்திரித்தார். அச்சமயத்தில் சுவார்ச்சையர்: என் குமாரனே, நீ கிறிஸ்து இயேசுவிலுள்ள கிருபையிலே பலத்துக் கொண்டிரு (2 தீமோ. 2, 1) என்ற வாக்கியத்தின்பேரில் பிரசங்கித்து, குருப்பட்டம் தரிப்பித்தார்.

J. Caspar Kohlhoff.

பின்பு அவ்வாலிப குரு பிரசங்கத் தொட்டியிலேறி, கேட்டயாவரும் வியக்கத்தக்க எழுப்புதலான பிரசங்கஞ் செய்தார். அதுமுதல் அவர் கர்த்தருக்குப் பிரியமான ஊழியனும், சுவார்ச்சையரின் தள்ளாமையில் அவருக்குத் தகுந்த உதவியுமாயிருந்தார். அவர் 57 வருஷ காலம் கர்த்தருக்கு உண்மையாய் உழைத்தார்.

அமர்சிங்கு ராஜா தன் சகோதரனுடைய தத்துப் பிள்ளையாகிய சர்போஜியை மிகக் கொடுமையாய் நடத்தி வருவதாக சென்னைக் கவர்னர் கேள்விப்பட்டதனால், அந்த ராஜகுமாரனையும் அவன் சுவிகாரத் தாய்மாராகிய இராணிகளையும் பட்டணத்திற்கு அழைப்பித்து, அங்கே சுவார்ச்சையரின் விசாரணைக்குள்ளாக வைக்கத் தீர்மானித்தார். சுவார்ச்சையரோ 1793-ஆம் வருஷம் அவர்களோடு சென்னைக்குப் போய்ச் சில காலம் அங்கிருந்து, இராஜகுமாரனைத் தமது நண்பராகிய கேரிக்கே ஐயரின் விசாரணைக்கு ஒப்புவித்துத் திரும்பினார். சர்போஜி என்ற இராஜ குமாரனுக்கு ஐயர் எழுதின கடிதமொன்றில் அவருடைய ஆத்ம நன்மைகளையுங் கருதினவராய் பின்வருமாறு எழுதினார்: நீர் எல்லாவற்றிற்கு முந்தி ஒன்றான மெய்க் கடவுளின் தயவைத் தேடப் பிரயாசப்படுவீராக. அவருக்குச் சிநேகிதரானால் உமது காரியமெல்லாம் சித்தியாகும். நீர் அவரைவிட்டு விலகி, அவரைக் கோபப்படுத்தினால் எல்லாந் தீங்காய் முடியும். நீர் அவரை நோக்கி ஒவ்வொரு நாளும் ஜெபியும். அவர் உமது ஜெபத்தைக்கேட்டு உதவிசெய்வார். கடவுள் உம்மைத் தமது பரிசுத்த ஆவியைக்கொண்டு பலப்படுத்தி ஆசீர்வதிப்பாராக என்று எழுதினார். சுவார்ச்சையர் கோரிக்கைப்படி சர்போஜி பட்டத்துக்கு வந்தபின் அவர் கிறிஸ்தவனாகாதிருந்தும், கிறிஸ்தவர்களுக்கு வெகுவான நன்மை செய்தார். அவர் எப்பொழுதும் சுவார்ச்சையரைத் தமது தகப்பனாகவே மதித்துக் கனப்படுத்திச் சிநேகித்து வந்தார்.

சுவார்ச்சையர் நாளுக்குநாள் பலவீனப்படுகிறவராயிருந்தும், தளரா முயற்சியோடு தமது ஊழியத்தை நிறைவேற்றி வந்தார். அக்காலத்தில் ஜர்மானியாவில் பரம்பின அவிசுவாசத்திற்காக அவர் மிகுந்த விசனமடைந்தும், தமது திட விசுவாசத்தால் ஆறுதலடைந்து கொண்டார். அவர் 1795-ஆம் வரு எழுதின கடிதமொன்றில்: நமது விஷயங்கள் சங்கடமாயினும்

The last days of Sch.

கர்த்தர் அதற்கான வாருவழிகளை அறிவார். அவர் தமது திவிதிராட்சத் தோட்டத்திற்குத் தருந்த ஆட்களையனுப்பக் கூடியவர். ஐயோ, உண்மையுள்ள வேலையாட்கள் எவ்வளவு சிலர். கர்மானியா தேச சபையின் நிலைமை யதார்த்தமாகவே பரிதாபமானது. அப்போஸ்தலனாகிய பவுலும் மற்ற அப்போஸ்தலரும் பிரசங்கியாத சுவிசேஷமொன்றை அவர்கள் நூதனமாய்க் கண்டு பிடித்தார்கள். அநேகர் கிறிஸ்து சம்பாதித்த இரட்சிப்பையும் பரிசுத்த ஆவி பாவிகளைப் பரிசுத்தமாக்குதலையும் பற்றிய உபதேசங்களை மறுக்கிறார்கள். எனக்கிப்போது எழுபது வயது. கர்த்தர் இதுவரைக்கும் என்னைக் காப்பாற்றிச் சகல அபாயங்களிலுமிருந்தும் தற்காத்தார். இப்போதோ நான் புறமதஸ்தினருக்குப் பிரசங்கிக்கத் தொலைதூரம் பயணம்போகக் கூடாதவனானேன். ஆயினும், நான் என் சாதாரண வேலைகளைக் கோயிலிலும் பள்ளிக்கூடத்திலும் செய்துவருகிறேன். நான் தஞ்சாவூருக்கருகில் பல பக்கங்களிலும் சிதறியிருக்கிற கிறிஸ்தவர்களைப் பார்க்கக் கூடியவனாயிருக்கிறதற்காகப் பராபரனை ஸ்தோத்திரிக்கிறேன். நாளது தேதி வரைக்கும் ஞானஸ்நானம் பெற்ற அல்லது இராப்போஜனம் வாங்கப் படித்து வருகிற ஆயத்தக்காரருக்கு நானே உபதேசிக்கிறேன். நான் எதுவரைக்கும் இவ்வேலையைச் செய்து வருவேனென்பது தேவனுக்குத்தான் தெரியும். என் ஆயுள் அவர் கரத்தில் இருக்கிறது. நான் என் முதிர் வயதில் அபிரயோசகனாகாதபடி அவர் என் ஜெபத்தைக் கேட்டார். நான் அவர் நாமத்தைக் கிறிஸ்தவர்களுக்கும் புறமதஸ்தினருக்கும் அறிவிக்க அவர் என்னைப் பலப்படுத்தி வருகிறது பெரிய உபகாரம். சில மாதங்களுக்குமுன் எனக்கு மாரடைப்புக் கண்டது. நான் அதினால் மரணத்தருவாயி லிருக்கிறதாக நினைத்தேன். கர்த்தரின் வருகைக்கு அச்சமின்றிக் காத்திருக்க அவர் அதினால் எச்சரித்தார் என்றெழுதியிருந்தார்.

அவர் உடன்வேலையாளாகிய கோலோப் ஐயர் 1797-ஆம் ௵ அவருக்குச் சம்பவித்ததைக் குறித்து, அவர் மரணத்திற்குப் பின் எழுதியது: சுவார்ச்சையர் தமது வயோதிக தசையைச் சட்டை பண்ணாமல் 1797-ஆம் ௵ ஜனுவரி ௴ ஆரம்ப முதல் அக்டோபர் ௴ வரைக்கும் தமது தெய்வ ஊழியத்தைச் செய்து, தமது வாசிப்பில் சளையா முயற்சியாயிருந்தார். அவர் ஞாயிறுதோறும் இங்கிலீஷிலும் தமிழிலும் ஆராதனை நடத்தி,

புதன் கிழமை போர்த்துகீசியருக்கும் இவ்விடத்திலுள்ள 51-ஆம் பட்டாளத்தைச் சேர்ந்த ஜர்மானிய யுத்த வீரருக்கும் பிரசங்கித்து வந்தார். அவர் அநேகவிசை திருச்சிறாப்பள்ளிக்குப் போனதுமன்றி தஞ்சாவூருக்கு ஆறு மைல் தூரத்திலுள்ள வல்லத்திற்கும் அடிக்கடி பயணம் போய், அவ்விடத்திலுள்ள பட்டாளத்தின் ஒருபகுதியாருக்கும் புறமதத்தினருக்கும் சுவிசேஷத்தை அறிவித்து வந்தார். அவர் காலை மாலை ஆராதனைகளில் ஒரு ஞானப்பாட்டில் சில கவிகளைப் பாடிச் சுவிசேஷத்தை விஸ்தரித்து, ஆரம்பம்போல் அதை முடிப்பது வழக்கம். அவர் தமிழ்ப் பிள்ளைகளுக்கு பிரதி தினம் ஒருமணி நேரம் கிறிஸ்து மார்க்க உபதேசங்களைப் புகட்டிவந்தார். கிறிஸ்தவர்கள் பிள்ளைகளும் விசேஷமாய் அவர் தெய்வ ஊழியத்துக்காளாக்கினவர்களும் அறிவிலும் தெய்வ பக்தியிலும் விர்த்தியடைய அவர் அதிக ஆவலுடையவராயிருந்து, தமது ஜீவியகாலக் கடைசியில் இவர்கள் உபயோகத்திற்காகக் கிறிஸ்து மார்க்கப் பிரதம விஸ்தரிப்பென்னும் ஓர் நூலை வரைந்தார். வயது முதிர்ச்சியால் அவர் சக்தி குன்றிப் பெலன் குறைந்தாலும் தமது சபையார் மெய்வேத அறிவில் தேர்ச்சியடைவதற்குச் செய்யவேண்டிய சகல முயற்சிகளையுந் தளரா ஊக்கத்தோடு செய்து வந்தார். அவர் தமது சபையாரைச் சந்திப்பதில் அதிக விருப்பமாயிருந்து, அவர்கள் நித்திய நன்மையைக் குறித்து அவர்களிடத்திற் பேசி, அவர்களிடத்திற் காணப்பட்ட பொல்லாப்புகளுக்காக அவர்களைக் கண்டித்து, கிறிஸ்து மார்க்கத்துக்கிசைய நடக்க அவர்களுக்குப் புத்தி சொன்னார். நல்ல தாய் தகப்பன்மார் தங்கள் அருமைப் பிள்ளைகளை விட்டுச் சிலகாலம் எங்கேயாவது போயிருந்து வீட்டிற்கு வந்தால், அப்பிள்ளைகள் அவர்களைச் சூழ்ந்துகொள்ளும் வண்ணமாய்க் கிறிஸ்தவர்களின் பிள்ளைகள் சுவார்ச்சையரைக் கண்டவுடன் அவரைச் சூழ்ந்து கொள்ளுவார்கள். அவர் அவர்களுக்குக் கடவுளைப் பற்றியும் தங்கள் பெற்றாருக்குச் செய்யவேண்டிய கடமையைப்பற்றியும் போதிப்பது விநோத காட்சியாயிருக்கும்.

உபதேசிமார் ஒவ்வொரு நாளும் தாங்கள் கிறிஸ்தவர்கள் ரோமான் மார்க்கத்தார் புறமதத்தினரிடத்திற் செய்த வேலையைப்பற்றியும் அதனாலுண்டான பிரயோசனத்தைக் குறித்தும் அவருக்கு ரிப்போர்ட்டு செய்வார்கள். சுவார்ச்சையரோ அவர்கள் தங்கள் வேலையைப் புத்தியோடும் உண்மையோடுஞ் செய்வதற்கான ஏற்பாடுகளை அவர்களுக்குத் தெரிவிப்பார்.

அவர் ஜீவியத்தின் கடைசி மாதங்களில் அவர் பலம் குறைந்து போயிற்று. அவர் அந்நாட்களில் நாம் எதிர்பார்த்திருந்த நித்திய பாக்கியத்தைக் குறித்துச் சந்தோஷமாகப் பேசுவார். அவருக்கு 1797-ஆம் வருஷம் அக்டோபர் மீ 17-ஆம் வ சண்ட தொண்டைக் கம்மலும் சளிப்பும் அவர் வியாதிக்கு ஆரம்பம். எத்தனையோ வைத்தியம் பார்த்தும் அவருடைய சுகம் திரும்பி வரவில்லை. அவர் தமக்கு வேதனையிருந்த வேளைகளில் முறையிட்டவரல்ல. எப்போதும் பொறுமையும் அமைதலுமாய்த் தமது நோவைச் சகித்தார். அவருக்கு மிகுந்த வேதனையுண்டாயிருந்த ஒருநாள்: கர்த்தர் என்னைத் தம்மிடம் அழைத்துக்கொள்ளச் சித்தமானால் நலம், அவருக்கு என்றென்றைக்கும் துதியுண்டாவதாக என்றார். அவர் தமது வியாதி காலத்திலும் காலை மாலை ஜெபத்தைத் தாமே நடத்தி, வேத விஸ்தரிப்புச் செய்யத் தவறாதிருந்தார். தம்மைப் பார்க்க வந்த பேர்களோடு அவர் செய்த சம்பாஷணை அவருடைய விசுவாசத்தையும் பக்தி வைராக்கியத்தையும் விளங்கப்பண்ணிற்று. நவம்பர் மீ 23-ஆம் வ சர்போஜி ராஜா (சென்னையில் படித்துக்கொண்டிருந்த சர்போஜி தஞ்சைக்குத் திரும்பி வந்து மிசியோன் கம்பவுண்டுக்குச் சமீபமான ஒரு பங்களாவில் வாசஞ் செய்து, சுவார்ச்சு, கோலோப் என்ற ஐயர்மாரிடத்தில் படித்துக்கொண்டிருந்தார். அமர்சிங்கு ராஜா பல மோச தந்திரங்களினால் அபகரித்துக்கொண்ட பட்டத்திற்கு சர்போஜியே சரியான பாத்தியஸ்தர் என்கிற தீர்ப்பும் வந்துவிட்டது. சுவார்ச்சையர் மரித்த மூன்று மாதங்களுக்குப்பின் அத்தீர்ப்பு நிறைவேற்றப்பட்டது.) அவரைப் பார்க்க வந்தபோது, ஐயர் அவரை மிக்க உவப்போடு ஏற்றுக்கொண்டு, அவருக்குச் சொன்ன தென்னவெனில்:

நான் உமக்காக அதிகப் பிரயாசப்பட்டேன்; என்னைக் கடவுள் எடுத்துக்கொண்ட பிறகு நீர் வேடிக்கை விநோதங்களிலும், ஆடம்பரத்திலும் உமது காலத்தைக் கழிக்காதேயும். என் மரணத்திற்குப் பிறகும் நீர் கிறிஸ்தவர்களைச் சிநேகியும். அவர்கள் தீமை செய்தால் தண்டியும், அவர்கள் நன்மை செய்தால், அவர்கள் தகப்பனும் உபகாரியுமாயிரும். தன் இராச்சியத்தின் விர்த்தியையும் தன் பிரஜைகளின் க்ஷேமத்தையும் கோரி நீதி நியாயஞ் செய்வது அரசன் கடமை. நீர் விக்கிரகாராதனையை விட்டு, மெய்யான கடவுளை வணங்க

அவர் உமக்குப் பலம் கொடுப்பாராக. நீர் வேத புத்தகத்தை வாசிக்கிறீரா? நீர் உமது அழியாத ஆத்துமத்தைக் குறித்துக் கவலையுள்ளவராயிரும் என்பதே.

சுவார்ச் ஐயர் நோய்வாய்ப்பட்டிருந்த காலத்தில் அவரோடு இராப் பகலாயிருந்தவர்கள் கோலோப் ஐயரும் ஜேனிக்கே ஐயருந்தான். ஐயர் விரும்பினபடி டிசம்பர் மீ 23-ஆம் உ ஜேனிக்கே ஐயர் அவருக்குப் பரிசுத்த இராப்போஜனங் கொடுத்தார். மறு வருஷம் பெப்ருவரி மீ சுவார்ச்சையரின் இடது காலில் வெடிசூலை யென்னும் இரணமுண்டாகி அதனால் மிகவும் வேதனைப்பட்டார். அவர் காலங் குறுகிற்றென்று கேள்விப்பட்டு தரங்கன்பாடி கெமரர் ஐயர், சென்னை கேரிக்கே ஐயர், திருச்சி போலே ஐயர் முதலியவர்கள் அவரைப் பார்க்க வந்து அவருடைய சம்பாஷணைகளால் மிக்க எழுப்புதல் அடைந்தார்கள். கேரிக்கே ஐயர் அவரை நோக்கி: கர்த்தருடைய இராச்சியம் இத்தேசத்தில் பரிபாலனமாகுமா என்று கேட்டதற்கு அவர்: மிகுந்த உபத்திரவத்தினாலும் பிரயாசையினாலும் ஆகும் என்றார். தஞ்சாவூர் சபையைக் குறித்துக் கேட்டதற்கு: அவர்களெல்லாரும் கரையேறும்படி நீங்கள் பிரயாசப்படுங்கள் என்றார்.

1798-ஆம் வருஷம் பெப்ருவரி மீ 13-ஆம் உ அவர் அதிக பலவீனப்பட்டிருந்தும், தம்மைப் பார்க்க வந்து தம்மைச் சூழ்ந்திருந்த ஐயர்மார் உபாத்திமார்களோடு 'என் ஜீவன் கிறிஸ்து தாமே' என்ற ஞானப்பாட்டைப் பாடி, தம்மைத் தாழ்த்தித் தமது மீட்பரை உயர்த்திப் பேசி: அவர் என்னை இப்பூமியில் இன்னும் சிலகாலம் வைத்திருக்கச் சித்தமானால், நான் சந்தோஷமாய் ஏழைகள் நோயாளிகளுக்குக் கர்த்தருடைய வசனத்தைச் சொல்லுவேன். ஆகிலும் அவர் சித்தத்தின்படி ஆகக்கடவது. அவர் என்னைத் தமது கிருபையின்படி ஏற்றுக்கொள்வாராக. சத்தியபரனாகிய கர்த்தாவே, தேவரீர் என்னை மீட்டு விட்டீர், உமது கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன் என்றார்.

பிறகு யாவரும் 'இரத்தங் காயங் குத்தும்' என்ற ஞானப்பாட்டைப் பாடினபோது அவரும் சேர்ந்து பாடி, சற்றுநேரம் இளைப்பாறி, தம்மைத் தூக்கச் சொல்லி, தமது வாயைத் திறந்து ஆவியை விட்டு, நாலு மணிக்குப் பரகதி அடைந்தார்.

அப்பொழுது அவருக்கு வயது 72. அவர் தமது ஆயுள் காலமெல்லாம் விவாகமில்லாதிருந்து, 48 வருஷ காலம் மிசியோனரியாக உழைத்தார். இதில் 20 வருஷ காலம் தஞ்சாவூரில் வேலைசெய்து, 'ராஜ குரு' வென்றும், 'தகப்பன்' என்றும் 'மா முனிவர்' என்றும் பெயர் பெற்று, ஏறக்குறைய 300 பேருள்ள ஒரு மந்தையை அங்கே சேர்த்தார். இவரைப்போல் கீர்த்திபெற்ற குருமார் வெகு சிலர். அவர் மரித்த மறு தினத்தில் அவருடைய உடல் அவர் கட்டிய மிசியோன் ஆலயத்தில் சர்போஜி ராஜனும், அவர் பிரஜைகளான திரள் கூட்டமும் பார்க்க, அடக்கம் பண்ணப்பட்டது. அன்று சாயங்காலம் கோயிலில் கூடிவந்த சபையாருக்கு கேரிக்கே ஐயர்: இதோ நான் மரணமடைகிறேன்; ஆனால் பராபரன் உங்களோடிருப்பார் என்று யாக்கோபு என்ற கோத்திர பிதா தன் குமாரன் யோசேப்புக்குச் சொன்ன வார்த்தையின் பேரில் வெகு உருக்கமான துக்கப் பிரசங்கம் செய்தார்.

**Death of Schwartz.**

அவருக்கு ஞாபக சின்னமாக சென்னை துரைத்தனத்தார் சென்னை மாநகர் கோட்டைக் கோயிலில் விநோதமாய்ச் சித்திரித்த ஒரு வெள்ளைச் சலவைக்கற் சாசனத்தை வைத்தார்கள். சர்போஜி ராஜாவும் தமக்குச் சுவார்ச்சையர் செய்த உபகாரங்களுக்காக நன்றியறிதலைக் காண்பிக்கும் பொருட்டு வெகு அலங்காரமான சித்திர வேலை தீர்ந்த வெள்ளைக்கல் ஞாபக சின்னமொன்றைத் தஞ்சைக் கோட்டைக் கோயிலில் ஏற்படுத்தி வைத்தார்.

சுவார்ச்சையரோடு தஞ்சாவூர் சபையின் சிறப்புக்கும் செழிப்புக்கும் முடிவு வந்தது. இவருக்குப்பின் அச்சபையை விசாரித்து நடத்தினவர் யோ. கா. கோலோப் ஐயர்.

---

## 5. திருநெல்வேலி மிசியோன்.

பாளையங்கோட்டையிலிருந்த ஒரு ஆங்கிலேய சத்திகட்டி துரையினிடத்தில் இந்து கணக்கப்பிள்ளை ஒருவன் இருந்தான். இவன் திருச்சினாப்பள்ளிக்கு வந்திருந்த ஒரு சமயத்தில் சுவார்ச்சையர் பிரசங்கத்தைக் கேட்டு, கிறிஸ்து மார்க்கத்தில் சேர விருப்பங்கொண்டிருந்தான். ஆயினும், அவன் அங்கே

தரித்திருந்து உபதேசம் பெருமல், பாளையங்கோட்டைக்குத் திரும்பிப் போய்விட்டான். அங்கே அவன் நமது ஞானோப தேசத்தின் ஐந்து ஆதி நியாயங்களைக் கற்றுக்கொண்டு தன் விருப்பத்தைத் தன் எஜமானுக்குத் தெரிவித்து, அந்தத் துரையினுல் ஞானஸ்நானம் செய்விக்கப் பட்டு, சவரிமுத்து என்கிற பெயரைப் பெற்ருன். இந்தச் சவரிமுத்து திருச்சிறுப் பள்ளியில் ஒரு கிறிஸ்தவ பெண்ணை விவாகஞ் செய்து கொண்டு, பாளையங்கோட்டையில் வசித்து, அங்குள்ள ஜனங் களுக்குச் சத்தியவேத புத்தகத்தை வாசித்துக்காட்டிவந்தான். (இதைச் சுவார்ச்சையர் தமது 1771-ஆம் வருஷத்துத் தினக் குறிப்புப் புத்தகத்தில் எழுதியிருக்கிருர்.) இதுவே திருநெல் வேலி மிசியோனின் அற்ப சொற்பமான ஆரம்பம்.

Savarimuttu.

1778-ஆம் ஞு பாளையங்கோட்டையிலிருந்த ஒரு ஐரோப் பியனின் விவாக காரியத்தை நிறைவேற்றும்படிக்கும், அந்த ஊரிலும் மதுரையிலும் இருந்த சில குழந்தைகளுக்கு ஞானஸ் நானம் கொடுக்கும்படிக்கும் சுவார்ச்சையர் பயணப்பட்டுப் போனர். அவர் போகும் வழியிலே தச்சநல்லூர் (தச்சனூர்) என்ற இடத்திலிருந்த ஒரு சிப்பாய்ப் பட்டாளத்தில் நமது சபையைச் சேர்ந்த ஐம்பது அறுபது கிறிஸ்தவர்களைக் கண்டு, அவர்களுக்குப் புத்திப் பிரசங்கம் செய்து, பிள்ளைகளைப் பரி சோதித்தபின் பாளையங்கோட்டையைச் சேர்ந்தார்.

Schwartz.

அங்கே அவர் சில பிள்ளைகளுக்கு ஞானஸ்நானங் கொடுக்க வேண்டுமென்றிருந்த ஒருநாள் ஒரு பிராமண ஸ்திரீ தன் சுவிகாரப் பிள்ளையோடு வந்து, ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள விரும்பினுள். இவள் தஞ்சாவூர் அரண்மனையில் உத்தியோகம் பார்த்த ஒரு பண்டித பிராமணனின் விதவை. புருஷன் மரித்தபின் அவள் அப்பொழுது தஞ்சையிலிருந்த லிற்றில்டன் (Lyttleton) என்ற ஆங்கிலேய உத்தியோகஸ்தனுக்கு வைப் பாட்டியானுள். அந்த காலத்திலே அவள் சுவார்ச்சையரிடம் வந்து தனக்கு ஞானஸ்நானம் கொடுக்கக் கேட்டும், அவள் பாவத்தில் நிலைத்திருக்குமட்டும் ஞானஸ்நானம் கொடுப்ப தில்லை என்று அவர் மறுத்துவிட்டதுமன்றி, மேற்கூறிய துரைக்கும் புத்தி சொன்னுர். அவ்விருவரும் பாவத்தில்

Clarinda.

பிழைத்து வந்தார்கள். ஆயினும், அந்தத் துரை சத்திய வேத விஷயங்களை அவளுக்குப் போதித்து, தன் ஆஸ்திபாஸ்திகளை எல்லாம் அவளுக்குக் கொடுத்துவிட்டு மரித்தான். அவளுடைய மரணத்திற்குப்பின் இச்சமயத்தில் அந்த ஸ்திரீ ஐயரைப் பாளையங்கோட்டையிற் கண்டு, மறுபடியும் தன் விருப்பத்தைத் தெரிவித்தாள். அவர் அவளுடைய நடவடிக்கை காரியாதிகளைக் குறித்துத் தீர விஜாரித்து, திருப்தியாகி, அவளை ஞானஸ்நானம் செய்வித்து, அவள் வேண்டுகோளின்படி அவளுக்குக் 'கிளாரிந்தா' என்று பெயரிட்டார். தாமாரும் ராகாபும் இயேசுநாதருடைய வமிச அட்டவணைக்குட்பட்டது போல், கிளாரிந்தாள் நாமமும் திருநெல்வேலி மிஷியோன் சரித்திரத்திற் குட்பட்டுத் தேவ கிருபைக்குச் சாட்சியாக விளங்கி நிற்கிறது. இது முதல் திருநெல்வேலியில் சபை பெருகும் என்கிற உறுதியும் திடமுமான நம்பிக்கை சுவார்ச்சையருக்கு உண்டாயிற்று. இதை அவர் போலே ஐயருக்கும் தெரிவித்தார்.

அடுத்த வருஷம் போலே ஐயர் பாளையங்கோட்டைக்கு ஒரு கலியாண முகாந்திரமாய்ப் போனபொழுது, பிரசங்கம் செய்து, கிளாரிந்தாளின் வேலைக்காரனுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார். அவருக்கும் அந்த அம்மாளைக் குறித்து நல்ல அபிப்பிராயமிருந்தது. சுவிசேஷ பிரசங்கிகளுக்கு அவள் வீடு தங்குமிடமாயிற்று. சிதறியிருக்கும் கிறிஸ்தவர்களை விஜாரிக்கும்படி சுவார்ச்சையர் திருச்சிறுப்பள்ளிக்குத் தெற்கே 40 மைல் தூரத்திலிருக்கும் திருப்பத்தூரில் சவரிமுத்து உபதேசியாரை நியமித்து வைத்தார்.

Pohle.

1783-ஆம் ஞு சுவார்ச்சையர் தஞ்சாவூரை விட்டு வெளியே போயிருக்குங் காலத்தில், இரண்டு ரோமானித்தார் திருநெல்வேலியிலிருந்து தஞ்சாவூருக்கு வந்து, தங்களைச் சுவிசேஷ லுத்தரன் சபையில் ஏற்றுக்கொள்ளும்படி கேட்டார்கள். அவர்களுக்குத் தயங்கை இராயப்ப நாட்டையர் ஆயத்த உபதேசம் செய்தார். அவர்கள் தங்களுக்கொரு நாட்டையரை அனுப்புவிக்கக் கேட்டுக்கொண்டார்கள். இதற்குள் சுவார்ச்சையரும் திரும்பிவிட்டதால், கிளாரிந்தாள் அம்மாள் தன் தத்து புத்திரனை அவரிடம் ஒப்புவித்து, பாளையங்

Pastor Rayappen.

கோட்டைக்கு ஒரு நாட்டையரை அனுப்பக் கேட்டுக் கொண்டாள். தரங்கை ஐயர்மார் அவர்கள் விண்ணப்பத்தைப் பெரிது பண்ணாமல், விசுவாசியென்ற உபதேசியார் அவர்களுக்குப் போதுமென்று சொல்லி அனுப்பினார்கள். சுவார்ச்சையரோ தஞ்சை ஞானப்பிரகாசம் உபதேசியாரையும், பிறகு அவர் மாமனார் இராயப்ப நாட்டையனையும் அங்கே அனுப்பினார். (1784 ஞு சூலை மீ). அவர்கள் நொவம்பர் மீ தஞ்சைக்கு வந்தபோது, புறமதத்தினரும் ரோமானித்தாருமான 130 ஆத்துமாக்களைச் சபையில் சேர்த்ததாக தெரிவித்தார்கள். ஸ்ரீவில்லிபுத்தூரில் நமது சபையைச் சேர்ந்தவர்களான அநேக சிப்பாய்கள் அப்பொழுது இருந்தார்கள். ஏற்கனவே ஞானஸ்நானம் பெற்றிருந்த கிளாரிந்தாளும், அவளைச் சேர்ந்த ஜனங்களும் 51 பேர். ஒட்டாரம்பட்டியில் வண்ணான் பிச்சைமுத்தின் முயற்சியால் சேர்க்கப்பட்ட கிறிஸ்தவர்கள் 30. பாளையங்கோட்டைக்குத் தெற்கே தெரிவிளை யென்ற ஊரில் 24 ஆத்துமாக்கள்.

1785-ஆம் ஞு கிளாரிந்தாள் இரண்டு துரைமாரின் உதவி பெற்று பாளையங்கோட்டையிலிருந்த ஐரோப்பிய இந்தியக் கிறிஸ்தவர்களின் தேவாராதனைக்கென்று கட்டத் தொடங்கின கோயிலைப் பிரதிஷ்டை செய்யும்படி சுவார்ச்சையர் அந்த வருஷம் ஆகஸ்டு மீ (2-ஆம் விசை) புறப்பட்டுப் போனார்.

Palamcottah Church.

அவர் முந்த ராமநாதபுரத்திற்குப் போய், அங்கொரு இங்கிலீஷ் பாடசாலையை ஸ்தாபித்தார். அந்தப் பள்ளிக்கூடத்திற்குச் சேதுபதியும், அவர் மந்திரியும் தங்கள் பிள்ளைகளை அனுப்பினார்கள். ஐயர் அங்கே சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, தூற்றுக்குடிக்குப் போய் அங்கிருந்த டச்சுக்காரருக்கு மாற்கு 8, 36-இன் பேரில் ஒரு பிரசங்கம் செய்தார். பிறகு பாளையங்கோட்டைக்குப் போய், புதுக்கோயிலைப் பிரதிஷ்டை செய்து, மூன்று வாரம் அங்கே தங்கியிருந்து, வெகுவான புத்திபோதனைகளைச் செய்து, எண்பது பேருக்குப் பரி: இராப்போஜனம் பரிமாறினார். அவர் திரும்பித் தஞ்சாவூருக்கு வரும்போது மேலே பிரஸ்தாபிக்கப்பட்ட பிச்சைமுத்தின் மகனையும், தேவசகாயம் பிள்ளை மகன் வேதநாயகம் என்பவரையும் தம்மோடு அழைத்து வந்தார். இதுவே அவர் பாளையங்கோட்டைக்குச் செய்த கடைசி பயணம். இதற்குப்பின் அவர் சத்தியநாத உபதேசியாரைத் தென்னாட்டுக்கு நிலையான

உபதேசியாராக நியமித்தார். தெய்வபக்தியும், விடாமுயற்சியும் பொருந்திய சத்தியநாத உபதேசியாருடைய வேலைகளைக் கர்த்தர் ஆசீர்வதித்ததால், வருஷா வருஷம் சபை பெருகிக் கொண்டே வந்தது. 1790-ஆம் ஹூ பாளையங்கோட்டைச் சபையிலிருந்த ஆத்துமாக்கள் 300. தரங்கை இராயப்ப நாட்டையர் சமயா சமயங்களில் வந்து, மேல் விசாரணை செய்துகொண்டு போனார். இவரும் விருத்தாப்பியராகி விட்டதால், இப்பொழுது சபை நடுவே நிலைவரமாய்க் குடியிருந்து மிசியோன் வேலையை நடத்தக் கூடிய ஒரு ஐரோப்பிய குருவை நியமிப்பது நன்மையென்று கி. அ. வி. சங்கத்தாருக்குக் கண்டது.

அவ்வாறு நியமிக்கப்பட்ட குரு ஜேனிக்கே ஐயர் (இவரோ தமது வியாதியினால் பாளையங்கோட்டையில் தரித்திருக்கக் கூடாமதேபோயிற்று.) இவர் 1759-ஆம் ஹூ பெர்லீன் நகரத்தில் பிறந்து, ஹல்லே வித்தியாசாலையில் வேத சாஸ்திரங் கற்று 1787-ஆம் ஹூ வெர்னிக்ரோதேயென்ற இடத்தில் குருப்பட்டம் பெற்று, 1788-ஆம் வருஷம் சென்னையில் கரையிறங்கி, தரங்கை வழியே தஞ்சாஊருக்கு வந்தார். அங்கே அவர் சுவார்ச்சையர் உதவியால் தமிழ் படித்து, மிசியோன்வேலை செய்ய ஆரம்பித்தார். அவர் 1791-ஆம் ஹூ செப்டெம்பர் மீ வரைக்கும் தஞ்சாவூரில் வேலை பார்த்தார். அதற்கு முந்தின 1790-ஆம் ஹூ டிசம்பர் மீ 26-ஆம் உ சத்தியநாத உபதேசியாருக்கு லுத்தரன் திருச்சபை முறைமைப்படி தஞ்சாவூரிலே சுவார்ச்சு, கோலோப், ஜேனிக்கே என்ற ஐயர்மாரால் குருப்பட்டங் கொடுக்கப்பட்டது. பட்டம் கொடுத்தபின் சுவார்ச்சையர் அவரைப் பாளையங்கோட்டைக்கு அனுப்பினார். அவர் போய் அங்கே உண்மையாய் உழைத்ததால் 1791-ஆம் ஹூ அக்டோபர் மாதத்திற்குள் பாளையங்கோட்டைச் சபையார் தொகை 383 ஆயிற்று. அந்த மீ 16-ஆம் உ ஜேனிக்கே ஐயர் பாளையங்கோட்டை வந்து சேர்ந்தார். அங்கே அவர் பத்து மாதக் காலம் தங்கி, இங்கிலீஷிலும் தமிழிலும் அநேக பிரசங்கங்கள் செய்து, 60 இந்துக்களுக்கு ஆயத்த போதனை செய்து ஞானஸ்நானங் கொடுத்தார். 'திருநெல்வேலி நாட்டிலே கொஞ்ச காலத்திற்குள் கிறிஸ்துமார்க்கம் பரம்புமென்பதற் கையமில்லை' என்பது அவர் தீர்க்கதரிசனம்போல் அக்காலத்தில் எழுதி வைத்த மங்கள வாக்கு. அவரும் சத்தியநாத ஐயரும்

Jaenicke.

வெவ்வேறாகச் சுற்றுப்புறங்களுக்குப் போய், முந்தச் சுவிசேஷ வசனத்தைக் கேட்டிராத வெகு ஜனங்களுக்கு அதைப் பிரசங்கித்தார்கள். கேட்டவர்களில் முப்பது பேர் பாளையங்கோட்டைக்கு வந்து, ஞானஸ்நானம் பெற்றார்கள். பின்னும் ஞானஸ்நானம் பெற்றவர்கள் அநேகர்.

1792-ஆம் வருஷத் துவக்கத்தில் ஜேனிக்கே ஐயர் திருவாங்கோட்டு எல்லையிலுள்ள மலைநாடு மட்டும் போய், இந்துக்களுக்கும் ரோமானித்தாருக்கும் சுவிசேஷத்தை அறிவித்து, பெப்ருவரி மீ பாளையங்கோட்டைக்குத் திரும்பி வரவே, சத்தியநாத ஐயர் மேற்கூறிய இடங்களுக்குப் போய் இரட்சணிய சுவிசேஷங்களைக் கூறினார். அக்காலத்தில் ஜேனிக்கே ஐயர் மலேரியா ஜுரத்தால் மிக்க கஷ்டப்பட்டார். இந்த சுரத்தோடு அவர் தூற்றுக்குடி, மணப்பாடு, பத்மநாபபுரம் முதலிய இடங்களுக்குப் போய்க் கிறிஸ்தவர்களுக்கும் இந்துக்களுக்கும் பிரசங்கித்து, செப்டெம்பர் மீ தஞ்சாவூருக்கு வந்து சேர்ந்தார். அவருக்குக் கண்டிருந்த மலேரியா சுரம் அவரைப் பாளையங்கோட்டைக்குப் போகாமற் பண்ணிற்று. இந்தக் காலமெல்லாம் சத்தியநாத நாட்டையரே தென்னாட்டுச் சபைகளை விசாரித்து வந்தார். குறித்த பெப்ருவரி மீ 19-ஆம் வ ஜேனிக்கே ஐயர் பாளையங்கோட்டைக்கு வந்து, அங்கே பயனுற உழைத்தார். 1795-ஆம் வூ இராமநாதபுரத்தில் சிலர் ஞானஸ்நானம் பெற விரும்பினதால், சத்தியநாத ஐயர் அங்கே போய் மூன்று மாதம் தங்கியிருக்க வேண்டியதாயிற்று. ஜேனிக்கே ஐயருக்குச் சுரம் கண்டும், நாட்டையர் திரும்புமளவும் அவர் பாளையங்கோட்டையை விடவில்லை. அவர் திரும்பியபின் புறப்பட்டுத் தஞ்சாவூருக்கு வந்து, தரங்கன்பாடியிலுள்ள சகோதரரோடு மிசியோன் வேலைகளைக் குறித்து ஆலோசிக்கும்படி அவ்விடம் சென்றார். அங்கிருந்து திரும்பிய பின்னும் சுரம் அவரை விடவில்லை.

அவருக்குப் பதிலாக ரொட்லர் ஐயர் (Rottler) சிலகாலம் தெற்கே போயிருந்து, சபைகளை விசாரித்துத் திரும்பினார். 1796-ஆம் வூ ஆயத்தக்காரருக்குப் படித்துக் கொடுப்பதற்கு ஒரு ஆள் வேண்டுமென்று சத்தியநாத ஐயர் கேட்டபொழுது சுவார்ச்சையர் தாவீது என்ற ஒருவரை நியமித்துப் பாளையங்கோட்டைக்கு அனுப்பினார். இந்த தாவீது உபதேசியார் கர்த்தருக்கு மகிமையும் அநேக ஆத்துமாக்களுக்குப் பிரயோ

சனமுமாக உழைத்தவர்; அவர் சிறு வயதில் காலாடியாய்த் திரிந்து, தஞ்சாவூருக்கு வந்து, உபதேசம் பெற்று, அங்கே கோலோப் ஐயரால் ஞானஸ்நானம் பெற்றார். அவர் விஜயராமபுரம் என்ற தமது பிறந்தகத்துக்குத் திரும்பியபின் தம் சொந்த ஜாதியாரைக் கிறிஸ்துவண்டை கொண்டுவா மிகவும் பிரயாசப்பட்டுச் சித்தியும் பெற்றார். இவருடைய முயற்சியாலே தான் 'முதலூர்' என்ற முதல் கிறிஸ்தவ கிராமம் உண்டாயிற்று (1799). அது ஏற்பட்டபொழுது அங்கே இருந்தவர்கள் 28 பேர், இப்பொழுதோ ஆயிரத்து முந்நூற்றுக்குக் குறையாது.

ஜேனிக்கே ஐயர் வரவர பலவீனப்பட்டதால், கேரிக்கே ஐயர் அவர் சுகத்தைக் கருதினதினாலும், அங்கே ஜேனிக்கே ஐயர் முயற்சியால் கட்டப்பட்டிருந்த கோயிலைப் பிரதிஷ்டை பண்ணும் நோக்கமாகவும் 1800-ஆம் ௵ பெப்ருவரி ௴ அவரை இராமநாதபுரத்துக்கு அழைத்துக்கொண்டு வந்தார். இதனால் அவர் சுகம் ஓரளவாய் விர்த்தியாயிற்றென்றே சொல்லவேண்டும். ஆயினும், கோயில் பிரதிஷ்டையில், ஜேனிக்கே ஐயரை ஆரம்ப ஜெபம் செய்யக் கேட்டுக்கொண்ட பொழுது, அவர் அதற்குச் சம்மதித்து ஜெபஞ் செய்கையில், மேலிட்ட மன உணர்ச்சியும் தளர்ச்சியுங் கூடி அவர் கைகால்களை நடுங்கப்பண்ணவே, அவர் கோயிலை விட்டு வெளியே போய்விட்டார். அவ்விருவரும் ராமநாதபுரத்தினின்று தூற்றுக்குடி, மணப்பாடு, பாளையங்கோட்டை, மதுரை என்ற இடங்களைச் சந்தித்தார்கள். ஜேனிக்கே ஐயர் ராமநாதபுரம், நாகப்பட்டணம், தரங்கன்பாடி என்ற ஊர்களுக்குப் போகவேண்டுமென்கிற நோக்கமாய் மதுரையில் தங்கி விட்டார்.

**Jaenicke's Death.**

1800-ஆம் ௵ பெரிய வெள்ளிக் கிழமையன்று அவர் தஞ்சாவூர் வந்து சேர்ந்தார். அவருடைய வியாதியும் பாடும் அதிகரித்தும், அவர் மே ௴ 10-ஆம் உ மெத்த அமைதலும் பொறுமையுமாய்த் தமது சகோதரர்களாகிய கோலோப், ஹோல்ஸ்பெர்க் ஐயர்மாரோடு சம்பாஷித்து, அன்று தாம் மரிக்கப் போகிறதாகத் தெரிவித்தார். நாலு மணிக்கு இசிவுகண்டு, 6 மணிக்குச் சற்று அமர்ந்தது. ஏழு மணிக்கெல்லாம் அவர் முகத்தில் புன்னகை துலங்க, கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்.

அப்பொழுது அவருக்கு வயது 41. அவர் மிசியோனரியாய் உழைத்தது 13 வருஷம். அவர் தமது ஆயுள்காலமெல்லாம் தாழ்மையும் சாந்தமும் பூண்டவராயிருந்தார்.

அவர் மரித்தது முதல் 1806-ஆம் வருஷமட்டும் தென்னாட்டுச் சபைகளை சத்தியநாத ஐயரே விஜாரணைசெய்து வந்தார். உள்ளும் புறம்பும் சபையிலும் தேசத்திலும் பலவித சங்கடங்களுண்டாகியும் அவர் அஞ்சாத தீரத்தோடு வேலை செய்ததால் சபைகள் பெருகிக்கொண்டே வந்தன. 1802-ஆம் ஹு சேரிக்கே ஐயரும், அடுத்த வருஷம் கோலோப் ஐயரும் தென்னாட்டுக்கு வந்து, சபை விஜாரணைசெய்து, ஏராளமான பேர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார்கள். சேரிக்கே ஐயர் ஒருவர் மாத்திரம் 1300 பேருக்கு ஞானஸ்நானம் கொடுத்தாராம். 1778-ஆம் வருஷ முதல் 1806-ஆம் வருஷ மட்டும் ஞானஸ்நானம் பெற்ற குழந்தைகள் 284, பெரியோரான இந்துக்கள் 4234. ஞானஸ்நானம் பெற்றவர்களுக்கு பாளையக்காரரால் உண்டான துன்பம் கொஞ்சமல்ல.

Sattianaden.

சத்தியநாத ஐயர் தென் நாட்டிலிருந்த கடைசிக்காலத்தில் அங்கே தஞ்சாவூர் கட்சியென்றும் திருநெல்வேலிக் கட்சியென்றும் சபையிலே கட்சிப் பிரிவினைகளுண்டானதால், கோலோப் ஐயருக்கும் சத்தியநாத ஐயருக்கும் கொஞ்சம் மனஸ்தாபம் வர நேரிட்டது. இதனால் நாட்டையர் இனி அங்கிருக்க மனமற்று, தம்மைத் தஞ்சாவூருக்கு மாற்றிவிடக் கேட்டுக்கொண்டார். அவர் விருப்பத்துக்கிசைய 1805-ஆம் வருஷம் ஆகஸ்டு மீ தஞ்சாவூருக்கு அழைப்பிக்கப்பட்டு, அங்கே கோலோப் ஐயரோடு பழையபடி சிநேகமாகி, பத்து வருஷ காலம் உழைத்து, 1815-ஆம் ஹு தமது குருப்பட்டத்தின் 25-ஆம் வருஷோற்சவத்தில் மரித்து, தாம் நேசித்துப் பணிவிடை செய்த தமது பரம எசமானின் இளைப்பாறுதலுக்குள் பிரவேசித்தார்.

சத்தியநாத நாட்டையர் தஞ்சைக்குத் திரும்பியவுடனே அவருக்குப் பதிலாய் வேறொரு குருவும் நியமிக்கப்படவில்லை. தஞ்சை ஞானப்பிரகாசம் உபதேசியார் சபைகளை விஜாரித்து வந்தார். சில காலத்திற்குப்பின் ரிங்கல்தௌபே (Ringeltaube) ஐயர் சபை விஜாரணையை ஒப்புக்கொண்டார்.

---

முதல் நூறு வருஷங்களில் டேனிஷ் ஹல்லே மிசியோனில் ஞானஸ்நானம் பெற்றவர்கள் தொகை (கிறிஸ்தவர்களின் குழந்தைகள் உள்பட)

| | | | | |
|---|---|---|---|---|
| தரங்கன்பாடி, மாயூரம், தஞ்சாவூர் | 1707 — 1806 | ... | ... | 23,014 |
| சென்னை | 1727 — 1806 | ... | ... | 4,465 |
| கூடலூர் | 1737 — 1806 | ... | ... | 2,104 |
| திருச்சிநாப்பள்ளி | 1762 — 1806 | ... | ... | 2,468 |
| திருநெல்வேலி | 1778 — 1806 | ... | ... | 4,518 |
| | | | ஆக மொத்தம். | 36,564 |

இப்படியாக இந்தக்காலப் பகுதியில் தரங்கை சுவிசேஷ லுத்தரன் மிசியோன் தரங்கன்பாடி கஸ்பாவில் நிலைபெற்றுச் செழித்தோங்கியது மன்றி, தமிழ் நாட்டின் எப்பாகத்திலும் திருவாங்கோடு பரியந்தம் ஓடிப் பாம்புவதற்கும் கர்த்தர் கருணை கூர்ந்தார் என்று பார்க்கிறோம். ஆயினும், 1806–ஆம் வருஷம் தரங்கை மிசியோனின் முதலாம் சதாப்த மகோற்சவம் அநேகமாய் வெளிச்சபைகளிலன்றி, தரங்கையில் சிறப்பாய்க் கொண்டாடப்பட்டதில்லை. இதற்கு அப்பொழுதே தரங்கையில் தலைகாட்டத் தொடங்கின அவிசுவாசமும், டேனிஷ் அதிகாரிகளின் பக்திக் குறைவாலுண்டான தாக்கீதுமே காரணம்.

# 3. நலிவு காலம் (1806-1840 *).

(* வெளிச்சபைகளில் 1806—1826 மட்டுமே.)

## (க. தரங்கைக் கஸ்பா மிசியோன்.)

இந்தக் காலப் பகுதியின் ஆரம்பத்தில் தரங்கைச் சபைகளையும் பள்ளிக்கூடங்களையும் விஜாரித்து வந்தவர், பேர்பெற்ற யோனேயர். அவர் 42 வருஷக்காலம் வேலைசெய்து 1813-ஆம் வருஷம் மரித்து எருசலேம் கோயில் உத்தான பூமியில் க்ஷேமிக்கப்பட்டார். அவர் உயிரோடிருக்கும்பொழுதே கெம்மரர் ஐயர் வந்தார். இவர் 1767-ஆம் வருஷம் வுஸ்தரௌசன் என்ற ஊரில் பிறந்து, ஹல்லே பட்டணத்தில் வேத சாஸ்திரம் படித்து, 1789-ஆம் ஸு குருப்பட்டம் பெற்று இந்தியாவுக்குப் போதகராய் அனுப்பப்பட்டார். அவர் வருகிற வழியில் நன்னம்பிக்கை முனையண்டை கப்பற் சேதப்பட்டதாலுண்டான பெரிய ஆபத்தில் அற்புதமாய்க் காக்கப்பட்டு, கொழும்பு வழியாய் 1791-ஆம் வருஷம் தரங்கை வந்து சேர்ந்தார்.

**A. F. Caemmerer.**

அவருக்குப்பின் 1804-ஆம் ஸு தரங்கைக்கு வந்த ஷ்ரைவோகல் (Schreyvogel) என்பவர் அங்கே உபதேசியாராயிருந்து 1813-ஆம் வருஷம் குருப்பட்டம் பெற்றும், 1826-ஆம் வருஷத்தில் நமது மிசியோனையும் சபையையும் விட்டு, இங்கிலீஷ் சபையில் சேர்ந்துபோனதால், அவ்வருஷமுதல் 1837-ஆம் வருஷமட்டும் கெம்மரர் ஐயர் ஒருவரே தனித்து வேலைசெய்ய வேண்டியதாயிற்று. புதிய மிசியோனரிகளும் வரவில்லை. காரணம் கர்மானிய தேசத்தையும் சபையையும் ஆட்கொண்ட அவிசுவாசமே.

இதனால் மன வேதனைக்குள்ளான ஹல்லே பிறைலிங்ஹௌசன் (Professor Freylinghausen) பண்டிதர், தரங்கைக்கு அனுப்பத்தக்க குருமார் அகப்படுவது அரிதென்று கண்டு, ஒரு கடிதத்தில் எழுதினது என்னவெனில்; நமது மிசியோன் ஆரம்பித்த காலத்திலேயே மிசியோனரிகள் அகப்படுவது வருத்தமாயிருந்தது. இக்காலத்திலோ அதிக வருத்தமாயிருக்கிறது. காரணம்: தற்காலத்துச் சாஸ்திரிகள் சுவிசேஷத்திற்கு விரோதமான எண்ணங்களை இளைஞருக்குப் புகட்டி

வருகிறார்கள். இதனால், இந்தியாவுக்கு வேண்டிய போதகரைத் தெரிந்து கொள்வதில் எங்கே மோசம் போகிறோமோ என்று அஞ்ச வேண்டியதாயிருக்கிறது. தத்துவ சாஸ்திரத்துக்குரிய சன்மார்க்கம் இரட்சிப்புக்குப் போதும் என்கிற எண்ணத்தை அந்தரங்கத்தில் நம்புகிற ஒரு போதகனை நாம் தெரிந்து கொள்வோமாகில், அவன் புறமதத்தினருக்குத் தன் சித்தாந்தத்தைப் போதிப்பானேயன்றி வேறல்ல என்பதே.

தகப்பன் சுவார்ச்சையர் தாமும் தமது விருத்தாப்பியத்தில் மனநோவோடு சொன்னதை ஏற்கனவே தெரிவித்திருக்கிறோம்.

இந்த அவிசுவாச காலத்துக்கு ஒத்திருந்தது தரங்கையிலிருந்த டேனிஷ் துரைத்தனத்தார் குணமும். ஊரதிகாரிகளுக்கும் ஐயர்மார்களுக்கும் பழையபடி மனஸ்தாபம், போராட்டம். இந்திய கிறிஸ்தவர்களின் நடபடிகள் புறமதத்தாருடையதிலும் சேடானவையென்று துரைத்தனத்தார் முறையிட்டு, மிசியோன் வேலையைக் குறைவுபடுத்திப் பேசினார்கள். ஐயர்மார்களோ சபையார் பக்கமாய்ப் பேசி, புறமதத்தினர் தங்களுக்குள்ளாக நேரிடும் சண்டை சச்சரவுகளை ஜாதி நியாயப்படி ஊர்ப்பஞ்சாயத்தில் தீர்த்துக்கொள்ள, கிறிஸ்தவர்கள் அதிகாரிகளிடத்தில் போகிறதினால் இந்தப் பேச்சுக்கு இடமுண்டாயிற்றென்பதாகவும், அதிகாரிகள் கிறிஸ்தவர்களாகிய தங்களுடைய சுய ஜீவிய நடபடிகளைப் பார்க்கிலும் இந்திய கிறிஸ்தவர்களின் நடபடிகள் அதிக சீராயிருக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பது நியாயமல்ல என்பதாகவும் நியாயம் சொன்னார்கள்.

Disputes.

அதிகாரிகளாயிருந்த லிந்த்கிரீன் (Lindgreen) ரேலிங் (Rehling) என்ற இருவரும் கூடிக்கொண்டு ஐயர்மார் பேரில் குறை கூறுகிற கிறிஸ்தவர்களைத் தட்டிக் கொடுத்து, பிரியாது கொண்டுவரத் தூண்டி விட்டார்கள். அப்படியே தியாகப்பன் என்ற ஒரு கிறிஸ்தவன், ஐயர்மார் தன் பிதிரார்ஜிதத்தைப் பிடுங்கிக் கொண்டதாகவும், கெம்மரர் ஐயர் தன்னை நாலறை அறைந்ததாகவும், யோனையர் ஒரு ஸ்திரீயைத் தன் கையால் அடித்ததாகவும் பிராது செய்தான். பிதிரார்ஜிதச் சங்கதி முற்றிலும் பொய். தியாகப்பன் அத்துதப்பி துஷ்டத்தன்மையாய்ப்

பேசினதால் கெம்மார் ஐயர் அறைந்ததும், ஒரு பெரிய பொல்லாப்புக்கு விலக்கிக் காக்கும்படி யோனேயர் ஒரு ஸ்திரீயைச் சொற்ப தண்டனைக்குள்ளாக்கினதும் மெய். விஜாரணையில் உபதேசிமாரும் அநேக இந்தியர்களும் ஐயர்மாருக்குச் சார்பாய்ப் பேசினதால் ரேலிங் துரை அவர்களைக் கடுமையாய் நடத்தினர். அவர்கள் முறையிட்டுக் கொண்டதன்பேரில் வேறு நியாயாதிபதியைக் கொண்டு விஜாரணை செய்யப்பட்டது. இந்தியர்கள் நியாயாதிபதியின் பயமுறுத்தலுக்கு அஞ்சி, முன் சொன்னதையெல்லாம் மாற்றிச் சொல்லி, அபராதத்திற்கு ஆளானர்கள். இதனுல் ஐயர்மார் மனஸ்தாபப்பட்டுச் சோர்வடைந்தார்கள். யோனேயர் சீமைக்குப் போகப் பயணப்பட்டுச் சென்னப்பட்டணம் வரையில் சென்று, கப்பலில்லாமையால் தரங்கைக்குத் திரும்பிவிட்டார். சதோற்சவ ஹூ இவ்விதமாயிருந்தது. இங்கிலீஷ் இலாக்காவில் குதூகலமாய்ச் சபைகளில் கொண்டாடப்பட்ட முதலாம் சதோற்சவம் தரங்கன்பாடி எல்லைக்குள் வெளியரங்கமாய் நடக்கக் கூடாமற்போயிற்று. "இதனுல் நாங்கள் மனமுறிவானேம், கோயிலுக்கு வருவாரைக் காணேம், ஞானஸ்நானமும் திருராப்போசனமும் அசட்டைக்குள்ளாயின" என்று ஐயர்மார் 1807-ஆம் ஹூ எழுதினர்கள். அக்காலத்து ஐயர்மார்களும் வேத சாஸ்திர ஆராய்ச்சியைப் பார்க்கிலும் வேறு சாஸ்திரங்களின் ஆராய்ச்சியை அதிகமாய் நாடினதாக ஹல்லே நகரில் பிரசுரமான அவர்கள் அறிக்கைகளால் தெரியவருகிறது. ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் தாபர சங்கம சாஸ்திர ஆராய்ச்சி செய்த அநேக கல்விமான்களுக்கும் அந்த ஐயர்மார்களுக்கும் வெகு அந்நியோந்நியம். தாபரசாஸ்திரத்தில் ரொட்லர் ஐயரும், சங்கியற்கைச் சாஸ்திரத்தில் யோனேயரும், பட்சி சாஸ்திரத்திலும் பூச்சியிலக்கணத்திலும் கிளீன் ஐயரும் கீர்த்தி வாய்ந்தவரானர்கள்.

1808-ஆம் ஹூ தரங்கன்பாடியை இங்கிலீஷ்காரர் பிடித்துக் கொண்டதாலும் அதுமுதல் சில வருஷகாலம் நடந்துகொண்டிருந்த சண்டைகளினுலும் தென்மார்க்கு தேசத்திற்கும் தரங்கன்பாடிக்கும் கடிதப் போக்குவரத்து நின்றுபோயிற்று. வியாபாரம் வெகுவாய் விழுந்துபோயிற்று. டேனிஷ்காரரில் அநேகர் சீமைக்குப் போய்விட்டார்கள். கிறிஸ்தவர்களில் அநேகர் பிழைக்க வழியற்று, சென்னை முதலிய பெரிய நகரங்களில் போய்க் குடியேறினர்கள்.

மீந்திருந்த கிறிஸ்தவர்கள் பட்ட சங்கடம் அதிகம். இந்தச் சங்கடத்தில் சென்னை துரைத்தனத்தாருடைய பொருள் உதவியோடு கொஞ்சம் கடன்பட்டு, ஐயர்மார் மிசியோனை நடத்திவந்தார்கள். (இந்தக் கடனை டேனிஷ் ராஜாங்கத்தார் பிற்பாடு செலுத்திவிட்டார்கள்.) இக்காலத்தில் நன்றி மறவாத தஞ்சாவூர் ராஜாவும் உதவிபுரிந்தார். யோனையர் விருத்தாப்பியத்தினால் தளர்ந்துபோய், கடைசியாய்ப் பார்வையையும் இழந்து, மரணத்தை ஆசித்து, அதிக உபத்திரவ மில்லாத முடிவையருள ஜெபஞ் செய்துகொண்டிருந்தார். கர்த்தர் அவருடைய ஜெபத்தைக் கேட்டு, 1813-ஆம் ௵ செப்டம்பர் மாதம் 1-ஆம் ௳ அவரைத் திடீரெனத் தம்மிடம் அழைத்துக்கொண்டார். அந்த வருஷத்தில் சவரிராயன் **Pastor Sawerirayen.** என்ற உபதேசியாருக்குத் தரங்கையில் குருப்பட்டம் கொடுக்கப்பட்டது. தரங்கையில் அபிஷேகம் பெற்ற புராதன இந்திய குருமாருள் இவரே கடைசியானவர். இவர் 1817-ஆம் ௵ இறந்துபோனார். அதே வருஷத்தில் இத்தேசமெங்கும் வியாபித்த விஷபேதியினால் உண்டான ஜனசேதம் மிகுதி. இதனால் தரங்கையிலும் மற்றிடங்களிலும் கிறிஸ்தவர்களின் தொகை வெகுவாய்க் குறைந்துபோயிற்று.

யோனையர் தாம் கண்ணும் கருத்துமாய்ப் பார்த்து வந்த பள்ளிக்கூடங்களை விசாரிப்பதற்குத் தகுந்த கர்மானிய குருமாரைத் தரங்கைக்கு அனுப்பும்படி, இங்கிலாந்தில் புதிதாய் ஏற்பட்ட சர்ச்சு மிசியோன் சங்கத்தாரைக் **C. M. S.** கேட்டெழுதியிருந்தார். அப்படியே அவர்கள் 1814-ஆம் ௵ ரேனியுஸ் (Rhenius), ஷ்னாறே (Schnarre) என்ற ஐயர்மாரையும், 1820-ஆம் ௵ பேரன்புருக் (Bärenbruck) ஐயரையும் அனுப்பினார்கள். பேரன்புருக் ஐயர் (பேரன்புருக் ஐயர் 1825-ஆம் ௵ தரங்கன்பாடியை விட்டுப் பெயர்ந்து, தமது சங்கத்தார் (C. M. S.) உத்தரவுப்படி மாயூரத்தில் மிசியோன் வேலைசெய்தார்.) பள்ளிக்கூடங்களை ஒப்புக்கொண்டும், விருத்தாப்பிய தசையிலிருந்த கெம்மரர் ஐயருக்கு சபை விசாரணையும் பாரமாயிருந்ததால் 1820-ஆம் ௵ தரங்கை பிறையாற்றுச் சபைகளை மாத்திரம் வைத்துக்கொண்டு, அதற்கப்புறத்தே தமது விசாரணைக்குள்ளிருந்த (காங்கூர், மணிக்கிராமம், வசிஷ்டர் குடி

முதலிய இடங்களிலுள்ள) 1300 கிறிஸ்தவர்களை 11 உபதேசிமார் 11 சிறு கோயில்கள் முதலியவற்றோடு கிறிஸ்தவ அறிவு விர்த்தி சங்கத்தாருக்கு ஒப்புவித்துவிட்டார். 1824-ஆம் ஷு டேனிஷ் துரைத்தனத்தார், இனிமேல் மிசியோன் புறமதத்தினரைத் திருப்புகிற வேலையை நிறுத்தி பள்ளிக் கூடங்களைமாத்திரம் அபிவிர்த்தி செய்து வரவேண்டியதென்று ஏற்பாடுபண்ணி, கொல்லேகியம் சங்கத்தார் சம்மதத்தையும் பெற்றுக்கொண்டார்கள். கெம்மரர் ஐயர் ஒரு வார்த்தையும் எதிர்பேசவில்லை.

District congregations of Tranquebar delivered to S. P. C. K.

அப்பால், சீயோன் கோயில் குருவானவரே மிசியோன் விஜாரணையும் செய்யலாமென்று 1825-ஆம் ஷு மே மீ 18-ஆம் உ ராஜ உத்தரவு பிறந்தது. அப்படியே இரண்டு வேலையையும் சேர்த்து, 1829-ஆம் ஷு முதல் 1835-ஆம் வருஷ மட்டும் மேல் (Möhl) ஐயரும், 1887-ஆம் ஷு முதல் 1843-ஆம் வருஷ மட்டும் குனுத்சன் (Knudsen) ஐயரும் பார்த்து வந்தார்கள். மேல் ஐயர் காலத்தில் தரங்கை மிசியோனின் உட்சீரும் புறச்சீரும் குலைந்துபோயிற்று. அந்த ஐயர் கிறிஸ்துவின் தெய்வீகத்தை மறுக்கும் பிரசங்கங்களைச் செய்தார். பள்ளிக்கூடங்களில் இரட்சகரையும் இரட்சிப்பையும் குறித்துப் பேசுகிற வேத வாக்கியங்களைத் தள்ளி, புறமதத்தினரும் 'ஆம்' என்று சொல்லக்கூடிய வாக்கியங்களாய்ச் சேர்த்துக்கொடுத்துப் படிப்பிக்க பண்ணினார். ஆதரிப்புசாலையிலிருந்த அநேக பிள்ளைகள் அனுப்பிவிடப்பட்டார்கள். அச்சுக்கூடமும் சகல தொழில் துறைகளும் தொலைந்துபோயின. பல ஜெபவீடுகளும், பள்ளிக்கூடங்களும் மூடப்பட்டன. பலர் ரோமான் சபையிற் சேர்ந்தார்கள். சிலர் இந்துக்களாய்ப் போனார்கள். கெம்மரர் ஐயர் 1837-ஆம் ஷு அக்டோபர் மீ 22-ஆம் உ பரகதியடைந்தார். அப்பொழுது தரங்கைச் சபை "திராட்சத் தோட்டத்திலுள்ள ஒரு குச்சுப்போலேயும், வெள்ளரித் தோட்டத்திலுள்ள ஒரு குடிசையைப் போலேயும்" கிர்ப்பந்த கோலமாய்த் தனித்திருக்கலாயிற்று.

Knudsen.

---

## 2. வெளிச் சபைகள்.

கிறிஸ்தவ அறிவு விர்த்தி சங்கத்தார் ஆதரவில் சுவி. லுத்தரன் குருமார் சென்னை, திருச்சி, தஞ்சை, திருநெல்வேலி முதலிய இடங்களில் சபைகளையும் பள்ளிக்கூடங்களையும் ஸ்தாபித்து, விசாரித்து, சுவிசேஷ வேலையும் செய்து வந்தார்களென்று நாம் பார்த்தோம். ஆயினும், மேலே சொல்லியபடி சர்மானியாவிலும் தென்மார்க்கிலும் அவிசுவாசம் பலக்கவே, இந்த குருமார்களுக்குப் பின் அவர்களுடைய வேலையைத் தொடர்ந்து நடத்த லுத்தரன் சபை குருமார் வரக்கூடாமற் போயிற்று. தரங்கன்பாடிக்கு வந்த சங்கடமே மற்றச் சேகரங்களுக்கும் வந்தது.

சர்மானியா, தென்மார்க்கு முதலிய தேசங்களிலுள்ள லுத்தரன் சபைகளில் மிசியோன் கிரியைக்கான பக்தி வைராக்கியம் அற்றுப்போகிற காலத்தில், அந்த வைராக்கியம் இங்கிலாந்து தேசத்தில் அதிகரித்தது. பதி-

S. P. G. னொன்பதாம் நூற்றாண்டில் பல ஆங்கிலேய மிசியோன் சங்கங்கள் ஏற்பட்டு, இந்தியாவுக்குச் சுவிசேஷ போதகரை அனுப்பக் கர்த்தர் ஏவி விட்டார். 1701-ஆம் ௵ லண்டன் மாநகரத்தில் இங்கிலீஷ் சபையின் விசுவாச அறிக்கையின்மேல் அஸ்திபாரப்பட்டதாக ஏற்பட்டு நானு தேசங்களிலும் மிசியோன் வேலை செய்து வந்த சுவிசேஷ பிரபலிய சங்கத்தார் (Society for the Propagation of the Gospel in Foreign parts) இத்தேசத்திலும் தங்கள் மிசியோனை ஸ்தாபிக்க விரும்பினார்கள். அவர்களுக்கு கிறிஸ்துமார்க்க அறிவு விர்த்திசங்கத்தார் (S. P. C. K.) தங்கள் ஆதரிப்பில் இருந்த சபைகள் பள்ளிக்கூடங்கள் யாவையும் ஒப்புவிக்க 1825 ஆம் ௵ தீர்மானித்து, அத்தீர்மானத்தையும் மறு வருஷம் நிறைவேற்றினார்கள். இதனால் அம்மட்டும் சுவி. லுத்தரன் விசுவாச அறிக்கைகளுக்கொத்த போதனை பெற்று சுவிசேஷ லுத்தரன் முறைமைப்படி ஆராதனை செய்து வந்த 8352 கிறிஸ்தவர்களும், 141 உபாத்திமார் உபதேசிமாரும், 1232 மாணக்கருள்ள பள்ளிக்கூடங்களும் தங்களுக்கே தெரியாமல் தாய்ச் சபையாகிய லுத்தரன் சபையை விட்டு ஆங்கிலேய அத்தியட்ச சபைக்குட்பட லாயிற்று.

அப்பொழுது தஞ்சாவூரில் (64 வயதுள்ள) கோலோப் ஐயரும், ஆப்ரோ ஐயரும், சென்னப்பட்டணத்தில் (80 வய

துள்ள) ரொட்லர் ஐயரும், கூடலூரில் ரோசன் (Rosen) ஐயரும், திருச்சினாப்பள்ளியில் ஷ்ரைவோகல் ஐயரும் இருந்தார்கள். இவர்களில் ரொட்லர், ஷ்ரைவோகல் ஐயர்மார் ஆங்கிலசபை முறைமைப்படி அத்தியட்சரால் குருப்பட்டம் பெற்றுக் கொண்டார்கள். தஞ்சாவூரில் கோலோப் ஐயர் வாக்குச் செல்லுமட்டும் அதிக மாறுதல் உண்டானதில்லை. அவர் தமது விசுவாசத்தில் மாறாதிருந்தும், கெம்மரர் ஐயர் செய்ததுபோல் தமது மகனை இங்கிலீஷ் சபைப் போதகத்துக்கு ஒப்புவித்தார். லுத்தரன் சபையின் பழைய முறைமைகளும் ஒழுங்குகளும் மாறி, இங்கிலீஷ் சபையின் புதிய முறைமைகளும் ஒழுங்குகளும் ஏற்பட்டபொழுது சபைகளில் உண்டான கலக்கமும் குழப்பமும் கொஞ்சமல்ல.

"குருக்களும் பகைவராளுர் கோயிலும் வேறதாயிற்
றிரக்கமே எங்கே நின்றாய் எம்மையாள் யேசுநாதா"

என்று வேதநாயக சாஸ்திரியாரோடு தஞ்சாவூர் சபை கூக்குரலிட்டது. ஆகிலும், பழைய சந்ததியொழிந்து புதிய சந்ததி தலையெடுக்க, எல்லாம் அமரிக்கைக்கு வந்தது.

திருநெல்வேலியிலிருந்த சபைக் காரியம் என்னவென்று கேட்போம். ஹல்லே பட்டணத்தில் வேத சாஸ்திரங் கற்று, லண்டன் மிசியோன் சங்கத்தாரின் ஊழியத்திற்குட்பட்ட ரிங்கல்தெளபே ஐயர் சத்தியநாத நாட்டையருக்குப்பின் 1806-ஆம் ௵ முதல் 1809-ஆம் ௵ வரையில் திருநெல்வேலிச் சபைகளை விசாரித்து வந்தார். 1811-ஆம் ௵ அங்கே பயங்கரமான கொள்ளைநோய் வியாபித்தபொழுது தகுந்த மேற்பார்வை இல்லாமையால் கிறிஸ்தவர்களில் அநேகர் மறுதலித்துப் போனார்கள். இதற்குப் பிந்தின ஐந்து வருஷச் சரித்திரம் நமக்குத் தெரியாது. 1816-ஆம் வருஷம் பாளையங்கோட்டை வழியே பம்பாய் நகரத்திற்குப்போன ஆங்கிலேய சபையின் அத்தியட்சராகிய மிடில்டன் (Bishop Middleton) செய்த ஏற்பாட்டின்படி பாளையங்கோட்டைக்கு சாப்ளனாக நியமிக்கப்பட்ட ஹாப் (Hough) ஐயர் இந்திய கிறிஸ்தவர்களையும் 1821-ஆம் வருஷமட்டும் விசாரித்து வந்தார். அந்தக் கிறிஸ்தவர்கள் கர்மானிய அதாவது லுத்தரன் முறைமைப்படி ஆராதனை செய்துவந்ததாக அந்த ஐயர் தாமியற்றிய மிசியோன் சரித்திரத்தில் எழுதியிருக்கிறார். அந்த ஐயர் சர்ச்சு மிசியோன்

Tinnevelly.

சங்கத்தாரைக் கேட்டுக்கொண்டதன்பேரில் லூத்தரன் முறைமைப்படி அபிஷேகம் பெற்ற ரேனியுஸ் (Rhenius), ஷ்மிட் (Schmid) என்ற ஐயர்மார் 1820-ஆம் ஆண்டு திருநெல்வேலிக்கு அனுப்பப்பட்டார்கள். ரேனியுஸ் ஐயர் பிரசங்க வேலையும், ஷ்மிட் ஐயர் பள்ளிக்கூட வேலையும் நடத்தினார்கள். அவர்கள் காலத்தில் ஏராளமான பேர் சபையில் சேர்ந்தார்கள். போதக விஷயத்தினால் ரேனியுஸ் ஐயருக்கும் அவரை வேலை கொண்ட சங்கத்தாருக்கும் ஒவ்வாமை கண்டு அவரைத் தள்ளும்படி செய்தார்கள். அவர் காலத்தோடே அந்தச் சபைகளின் பழைய தன்மை மாறிப்போயிற்று. 1825-ஆம் வருஷம் கி. அ. வி. சங்கத்தார் சுவிசேஷ பிரபலிய சங்கத்தாருக்குச் சபைகளை ஒப்புவிக்கிறபொழுது அங்கே 4161 கிறிஸ்தவர்களும், 210 மாணாக்கரும், 32 உபதேசிமாரும், 15 உபாத்திமாரும் இருந்தார்கள்.

இப்படியே தரங்கையில் உதயமான சுவிசேஷ வெளிச்சம் தமிழ் நாட்டின் எத்திசையிலும் பரம்பிற்று. என்றாலும், அதை இத்தேசத்திற்கு அனுப்பி வைத்த லூத்தரன் சபையின் விசுவாசத் தளர்ச்சியினால், இங்கே சேர்க்கப்பட்ட சபை நலிவடைந்து, அந்நியர் கைக்குள்ளாகுந் தீர்ப்பைப் பெற்றது.

---

# II

# தரங்கை மிசியோன் நூதன சரித்திரம்

## 1. லைப்சிக் மிசியோன் தாய்ச் சங்கம்.

இந்தச் சங்கம் ஒரு தனி மனுஷன் முயற்சியாலுண்டானதல்ல. இது ஐரோப்பாவிலுள்ள லுத்தரன் திருச்சபையின் ஏகோபித முயற்சியெனில் தகுதியாகும். புத்தி விஞ்ஞானக் கேட்டில் அமிழ்ந்து கிடந்த லுத்தரன் சபைக்குக் கர்த்தர் இரங்கி, சுத்த சுவிசேஷ போதகரை எழுப்பி, சுவிசேஷ எக்காளத்தைத் தொனிக்கச்செய்ததால் அது புது உயிரடைந்ததின் பலனில் ஒன்று இந்த மிசியோன் சங்க ஏற்பாடு. சர்வசாஸ்திர சாலைகளிலும் பிரசங்க மேடைகளிலும் சுத்த போதகத்தைத் தைரியமாய்க் கூறி அறிக்கையிட்ட மகான்களில் முக்கியமானவர்கள் ஹார்லெஸ் (Harless), ஷைபெல் (Scheibel) ருடல்பக் (Rudelbach), லோயே (Loehe) முதலியவர்கள். முன்னமே லுத்தர் சாஸ்திரியார் ரோமான் சபைக்குள் மறைந்து கிடந்த திவ்விய வேத சத்தியங்களை வெளிக்குக் கொணர்ந்ததுபோல, இவர்கள் புத்தி விஞ்ஞானக் குப்பையை விலக்கி, சுத்த சத்தியப் பொக்கிஷங்களை வெளிக்குக் கொணர்ந்ததுமன்றி, இருளில் கிடக்கும் ஆத்துமாக்களுக்கு இவைகளைப் பிரசங்கிப்பது சுவிசேஷ சபையின் கடமை என்றும் தெரிவித்தார்கள்.

**Rovival in Germauy.**

இவ்வாறு அவர்கள் தெரிவித்ததை பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பாகத்தில், மிசியோன் வேலை நாலு புரொட்டெஸ்டன்று சபைகள் ஒன்றுகூடிச் செய்யத்தக்கதென்கிற அபிப்பிராயமிருந்ததால், லுத்தரன் சபையினால் ஆளாகிப் போதனையும் அபிஷேகமும் பெற்ற குருமார் சர்ச்சு மிசியோன், லண்டன் மிசியோன் சங்கத்தாரின் ஊழியத்துக்குட்பட்டு இத்தேசத்திற்கு வந்தார்கள். இது ஆரம்பத்தில் ஒருவாறு சரிப்பட்டு வந்தும், பழைய லுத்தரன் தமிழ்ச் சபைகள் ஆங்கிலேய சுவிசேஷ பிரபல்லிய சங்கத்தார் விசாரணைக்குட்பட்ட பின் சரிப்படாதே போயிற்று. சர்ச்சு மிசியோன் சங்கத்தாருக்கும் ரேனியுஸ் ஐயருக்கும் 1835-ஆம் ஹூ ஒவ்வாமையுண்டானபோது இது வெளியாகி, கர்மானிய லுத்தரன் சபை

களில் கலக்கத்தை உண்டுபண்ணிற்று. ஆங்கிலேய மிசியோன் சங்கங்கள், தங்கள் சபையின் விசுவாசத்திற்குச் சார்பாயிருந்து தங்கள் முறைமைப்படி அபிஷேகம் பெற்ற பேர்களையே மிசியோனாரிகளாகத் தெரிந்துகொள்வது நியாயமெனத் தீர்மானித்தார்கள். இத்தீர்மானம், ரேனியுஸ் ஐயர் படித்து வெளிப்பட்ட பெர்லீன் செமினேரியில் வேதசாஸ்திரம் கற்ற மாணாக்கருக்குத் தெரிய வந்தபோது அவர்கள் திரேஸ்தன் நகரிலுள்ள மிசியோன் சிநேகிதர்களுக்கு 1836-ஆம் ௵ ஜூலை ௴ ஒரு விண்ணப்பமெழுதி: லுத்தரான் மிசியோனாரிகளாய் புறமதத்தினர் நடுவே வேலை செய்ய விரும்பும் தன் புத்திரருக்கு லுத்தரான் சபை வேலை கொடுக்க முடியாதோ என்று கேட்டார்கள்.

**Lutheran Mission.**

இதுவே திரேஸ்தன் நகரில் மிசியோனூழியத்திற்கு வாலிபரை ஆளாக்கும் செமினேரி ஸ்தாபகமாவதற்கும், சுவிசேஷ லுத்தரான் விசுவாச அறிக்கைகளில் ஆதாரப்பட்ட பிரத்தியேகமான ஒரு மிசியோன் சங்கம் ஏற்படுவதற்கும் காரணமாயிற்று. இச்சங்கத்தின் முதற் கூட்டம் 1836-ஆம் ௵ ஆகஸ்டு ௴ 17-ஆம் ௳ நடந்தது. அச்சங்கத்திற்கு ஐன்சீடல் பிரபு (Graf von Einsiedel) தலைவராயிருந்தார். மற்ற அங்கத்தாரில் வெர்மெல்ஸ்கிர்க் (Wermelskirch) ஐயர் விசேஷித்தவர். இவர் (1836—1842) திரேஸ்தன் செமினேரியின் தலைமைப் போதனாசிரியராய் இருந்தார்.

Dresden Seminary.

மாணாக்கர் சர்வகலாசாலைப் போதனையில் பங்கு பெறக்கூடும்படி 1848-ஆம் ௵ அந்த செமினேரி லைப்சிக் பட்டணத்திற்கு மாற்றப்பட்டது. அது முதல் திரேஸ்தன் மிசியோன் சங்கம் என்கிற பெயர் போய், லைப்சிக் சுவிசேஷ லுத்தரான் மிசியோன் சங்கம் என்கிற பெயர் வந்தது. அதன் காரியக் கர்த்தாக்களாகிய கொல்லேகியும் சங்கத்தார் லைப்சிக் நகரத்தைத் தங்கள் கூட்டத்தலமாக்கினார்கள். மிசியோன் உபகாரிகளும் சிநேகிதர்களும் வருஷத்தில் ஒருமுறை பரிசுத்த ஆவியின் பண்டிகைக்கடுத்த புதன்கிழமையில் லைப்சிக் பட்டணத்திற் கூடிவந்து, மிசியோன் பண்டிகை கொண்டாடி, புது ஐயர்மாரை அனுப்பி, மிசியோனுக்கடுத்த முக்கிய சங்கதிகளைக் குறித்து ஆலோசனை செய்கிற ஏற்பாடும் நடந்தேறி வந்தது.

லைப்சிக் நகரில் நமது மிசியோனுக்கடுத்த காரியாதிகளை நடத்தும் முகாமை டிரெக்தரைப் பொறுத்தது. நமது மிசியோ

னுக்கு இம்மட்டும் தகுதியான டிரெக்தர்கள் கிடைத்திருப்பது தெய்வ கிருபையே. இவர்களில் முந்தினவர் பெயர் கிரௌல் சாஸ்திரியார். சுத்த போதக வைராக்கிய புருஷராகிய இவரது முயற்சியால் நமது மிசியோன் முழு லுத்தரன் திருச்சபையின் மிசியோனுயிற்று. அவர் நமது மிசியோன் நலத்தைக் கருதி 1849-ஆம் ஸு இத்தேசத்திற்கு வந்து, 1853-ஆம் வருஷமளவும் இங்கிருந்து பல பாஷைகளைக் கற்று, சபைகளை விசாரித்து பல பிரயோஜனமான ஏற்பாடுகளைச் செய்தார்.

Mission Director Graul.

அவர் சீமைக்குத் திரும்பியபின், கர்மானியா, ருஷியா, தென்மார்க்கு, நோர்வே, சுவேதன், வடஅமேரிக்கா முதலான தேசங்களிலுள்ள லுத்தரன் சபைகளெல்லாம் நமது மிசியோனுக்கு உதவி செய்யும்படிக்கான முயற்சிகளைச் செய்தார். மிசியோன் வேலை சரியாய் நடந்தேறுவதற்கு திறமையுள்ள மிசியோனரிகள் அவசியமென அவர் உணர்ந்து, பக்தியிலும் அறிவிலும் சிறந்த பேர்களை மிசியோனரிகளாக்கப் பிரயாசப்பட்டார். இதற்காகச் சர்வகலா சாஸ்திர சாலையில் கற்றுத்தேறின வாலிபர்களைத் தெரிந்தெடுத்து, அவர்களுக்கு இங்கிலீஷ், சமஸ்கிருதம், முக்கியமாய்த் தமிழ்ப்பாஷை, இந்து மதக்கொள்கை, மிசியோன் வேலைக்கடுத்த விஷயங்கள், இவைகளில் போதனை செய்து, இத்தேசத்தில் வேலைசெய்வதற்குப் பக்குவப்படுத்தினர். 1860-ஆம் வருஷமளவும் பயனுற உழைத்து நமது மிசியோனை நடத்தி வந்த இவர் 1864-ஆம் வருஷம் மரணமடைந்தார்.

கிரௌல் சாஸ்திரியாருக்குப்பின் (1860-91) டிரெக்தர் உத்தியோகத்தை வகித்தவர் ஹார்தெலாந்து சாஸ்திரியார். இவர் 31 வருஷக்காலம் மிசியோனை நடத்தினதால் விளைந்த நன்மை மிகுதி. அவர் இத்தேசத்திற்கு இரண்டுமுறை வந்தார். முதல் முறை வந்தது 1867-ஆம் ஸு. அப்பொழுது அவர் நமது மிசியோன் சேகரங்களையெல்லாம் சுற்றிப்பார்த்து, சபைகள் சுயாதீனமடைவதற்கு ஆதாரமாகிய பல நல்லொழுங்குகளை ஏற்படுத்தினர். சபைப்பொக்கிஷம், ஏழைப்பொக்கிஷ ஏற்பாடுகள் நமது மிசியோன் சபைகளில் பொதுப்பட அநுஷ்டானத்திற்கு வந்தது அக்காலந்தொட்டே. மேலும், நமது செமினேரிக்கும், மற்றப் பாடசாலைகளுக்கும் அடுத்த பல திருத்தங்களும் ஒழுங்குகளும் அப்பொழுது செய்யப்பட்டன.

Hardeland.



**The Rev. D. Hardeland,**

*(The Second Mission Director of the L. E. L. M. from 1860–1891)*



The Rev. C. von Schwarz, D. D.
*(The Third Mission Director of the L. E. L. M. from 1891–1911)*

அவர் டிரெக்தராயிருந்த காலத்திலே லேப்சிக் நகரத்தில் நமது மிசியோன் சம்பந்தமாய் ஒரு புதிய செமினேரி ஏற்பட்டு, அதனின்று அநேக ஐயர்மார் வெளியேறக் கர்த்தர் கிருபை செய்தார். அன்றியும் நமது மிசியோன் நலத்தைக் கோரும் உபகாரிகளின் தொகையும், அவர்களின் நன்கொடைத் தொகையும் அவர் காலத்தில் சற்றேறக்குறைய மும்மடங்கு பெருகின. அவர் 1903-ஆம் ஹூ கர்த்தருக்குள் நித்திரை அடைந்தார்.

அவருக்குப்பின் டிரெக்தராயிருந்தவர் வொன் சுவார்ச்சு சாஸ்திரியார். 1893-ஆம் ஹூ அக்டோபர் மீ இத்தேசத்திற்கு வந்து, நமது சபைகளின் நடுவே ஆறுமாதக் காலம் சஞ்சரித்து தளரா முயற்சியோடு தமிழ்நாடெங்கும் சுற்றித்திரிந்து, மிசியோன் வட்டங்களை விஜாரணை செய்தார். அவர் சென்னையில் கூடிய தமிழ்நாட்டுச் சுவிசேஷ லுத்தரன் 3-ஆம் பொதுக்கூட்டத்தில்கூட இருந்தார்.

v. Schwarz.

1911-ஆம் ஆண்டு முதல் 1923-ஆம் வருஷம் செப்டெம்பர் மாதமட்டும் லேப்சிக் மிஷன் டிரெக்தராக இருந்தவர் கார்ல் பவுல் சாஸ்திரியார். இவர் 1912-ஆம் வருஷம் இந்தியாவுக்கு வந்து நமது மிஷன் சேகரங்களை பார்வையிட்டு 1913ஆ-ம் ஆண்டு தாய்நாடு சென்று, 1927-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 10--ஆம் உ. தமது 71-ஆம் வயதில் மரணமடைந்தார்.

Carl Paul.

உயர்திரு கார்ல் ஈமெல்ஸ் சாஸ்திரியார் 1923-ஆம் ஹூ அக்டோபர் மீ 1-ஆம் உ லேப்சிக் மிஷன் டிரெக்தராக தெரிந்து கொள்ளப்பட்டார். இவர் பன்முறை தமிழ் நாட்டுக்கு வந்து நமது மகாநாடுகள் பல வற்றிலும் கலந்துகொண்டு நமது சபை அமைப்புத் திட்டங்களில் கையொப்பமிட்டு நமது சபைகளுக்கு அனுதாபங் காட்டிவருபவர்.

Carl Ihmels.

---

## 2. லேப்சிக் மிசியோன் ஆரம்ப வேலை (1840-1856.)

இந்த நமது மிசியோன் டேனிஷ் ஹல்லே மிசியோனைப் போல் புறமதத்தினருக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பதினால்

தன் வேலையை ஆரம்பிக்கவில்லை. கர்த்தர் அதன் ஆரம்பத்தை வேறுவகையாய் நடத்தினார். ஹால்லே பட்டணத்திலிருந்து அனுப்பப்பட்டவர்களில் கடைசி குருவாகிய

Cämmerer's death.

கெம்மரர் ஐயர் 1837-ஆம் வரு அக்டோபர் மீ 22-ஆம் உ தரங்கையில் மரித்தார். அவர் மரணமடையக் கொஞ்சக் காலத்துக்குமுன் கர்மானியாவுக்கு எழுதின கடிதத்தில்: சகல மிசியோன்களுக்கும் மகுடமாகிய தரங்கைச் சுவிசேஷ மிசியோன் முற்றிலும் சேதமடைவதற்கான மோசத்தில் இருக்கிறது; அது நசித்துப் போகாதிருக்க வேண்டுமானால் உங்கள் உதவி இன்றியமையாதது; அதற்குப் பணமல்ல, வேலையாட்களே முக்கியம் என்று எழுதினார். இதையும் இதுபோன்ற கூப்பாடுகளையும் முன்னிட்டு திரேஸ்தன் மிசியோன் சங்கத்தார் கோர்தேஸ் (C. H. Cordes)

Cordes,
in Tranquebar.

ஐயரைத் தங்கள் பிரதம மிசியோனரியாக தரங்கைக்கு அனுப்பினார்கள். அவர் 1840-ஆம் வரு டிசம்பர் மீ 27-ஆம் உ சென்னையில் கரையிறங்கினார். அங்கிருந்தவர்கள் அவரைப் பலவாறாகத் தடுத்தும் அவர் தரங்கைக்கு வந்தார். இங்கே மிசியோன் விசாரணை செய்துவந்த சியோன் கோயில் டேனிஷ் குருவாகிய குனுட்சன் (Knudsen) ஐயர் மிகுந்த ஆவலோடு கோர்தேஸ் ஐயரை ஏற்றுக்கொண்டு, திரேஸ்தன் மிசியோன் சங்கத்தார் காலத்தால் செய்த நன்றிக்காக வெகுவாய்ச் சந்தோஷப்பட்டார். சரித்திர சம்பந்தத்தினாலும், சபைப் பெருக்கத்தினாலும் பெயர் பெற்றிருந்த தரங்கை தமது வேலையை ஆரம்பிப்பதற்குத் தகுந்த இடமெனக் கண்ட கோர்தேஸ் ஐயர் முந்தக் குனுத்சன் ஐயருக்கு உதவியாக வேலை செய்தார். அவர் 1841-ஆம் வரு மார்ச்சு மீ 2-ஆம் உ கர்த்தர் உயிர்த்தெழுந்த பண்டிகைக்குப் பிந்தின 2-ஆம் ஞாயிற்றுக் கிழமையில் பிறையாற்றிலே தமது முதல் தமிழ்ப் பிரசங்கத்தைச் செய்தார். பிறகு கோட்டை எருசலேம் கோயிலிலும் பிரசங்கித்தார். அவர் துவக்கத்தில் தமது பிரசங்கங்களை இங்கிலீஷில் முன்ஷிக்குச் சொல்லி, தமிழில் மொழிபெயர்ப்பித்து அதை வாசித்தார். வருஷக் கடைசியில் பண்டிகை காலங்களிலே அதிகமாய்ப் பிரசங்கிக்க வேண்டியதாயிற்று. 1842-ஆம் வரு திரித்துவத்தின் பண்டிகைக்குப் பிந்தின 9-ஆம் ஞாயிறு முதல் 18-ஆம் ஞாயிறு வரையில் இரு கோயில்களிலேயும் தமிழில் பிரசங்கித்ததுமன்றி, 3 ஆயத்தப்



**Dr. C. Paul,**

*(The Fourth Mission Director of the L. E. L. M. from 1911–1923)*



**Dr. C. Ihmels,**

*(The Fifth and the present Mission Director of the L. E. L. M. from 1923—          )*



**The Rev. J. H. C. Cordes,**

*(The First L. E. L. M. Missionary to Tranquebar)*

born at Betzendorf in Hannover on 21-3-1813, arrived in India on 27-12-1840, returned to Germany and died on 9-3-1892.



**The Rev. K. Pamperrien,**

born at Crivitz in Mecklenburg on 11-8-1845, arrived in India on 9-10-1877 and died in Germany on 24-11-1925.

பிரசங்கங்களைச் செய்து, ஆகஸ்டு ௴ 12-ஆம் ௳ 19 பிள்ளைகளைத் திடப்படுத்தி, 13-ஆம் ௳ பாவசங்கீர்த்தன ஆராதனையும், 14-ஆம் ௳ நற்கருணை ஆராதனையும் செய்து, 136 பேருக்கு பரி. இராப்போசனம் பரிமாறினார். அவரது பட்டாபிஷேகத்தின் 2-ஆம் வருஷமாகிய 1842-ஆம் ௵ பெப்ருவரி ௴ 26-ஆம் ௳ ஒரு இந்து ஸ்திரீக்கும் அவள் மகனுக்கும் ஞானஸ்நானம் கொடுத்தார். 1843-ஆம் ௵ குனுதசன் ஐயர் நோய்வாய்ப்பட்டுச் சீமைக்குப் போனதால், கோர்தேஸ் ஐயரே மிசியோன் விசாரணைக்குப் பொறுப்பாளியானார்.

**Tranquebar sold to the British.**

1845-ஆம் ௵ டேனிஷ்காரர் தரங்கன்பாடியை இங்கிலீஷ்காரருக்கு விற்றபோது அங்கிருந்த கவர்னர் : கர்மானியருக்கிருந்த மிசியோன் ஆவியும் திறமையும் அற்றுப்போன இக்காலத்தில் கோர்தேஸ் ஐயர் தரங்கை மிசியோனைப் பணக்காரச் சங்கமாகிய சுவிசேஷ பிரபலிய சங்கத்திற்கு ஒப்புவிப்பது உசிதமென்று யோசனை சொன்னார். சென்னையிலிருந்த ஸ்பென்சர் கண்காணியார் அநாதை பிள்ளைபோலான தரங்கன்பாடியைத் தாம் ஒப்புக்கொண்டு பரிபாலிக்க மனதாயிருப்பதாகக் கடிதமெழுதித் தெரிவித்தார். தரங்கை லூத்தரன் சபையாரோ தங்கள் சரீரத்தை ஆங்கிலேயருக்கு ஒப்புவித்துவிட்டதுபோல் தங்கள் ஆத்துமத்தையும் அவர்களுக்கு ஒப்புவித்துவிடாமல், தங்களை லூத்தரன் சபையின் விசுவாசத்தில் நிலைநாட்டவும், திரேஸ்தன் மிசியோன் விசாரணைக்குத் தங்களைக் கையளிக்கவும் வேண்டுமென்று தென்மார்க்கராசருக்கு மனுப்பண்ணிக் கொண்டார்கள். அவர்கள் மனுப்படியே தரங்கை பிறையாற்றுச் சபைகள் 1847-ஆம் ௵ திரேஸ்தன் மிசியோன் சங்கத்தாருக்கு ஒப்புவிக்கப்பட்டன. இது நடப்பதற்கு இரண்டு வருஷங்களுக்குமுன் (1845) மாயூரத்தில் வேலை செய்த சர்ச்சு மிசியோன் சங்கத்தார் அந்தச் சேகரத்தை விட்டுப் பெயர்ந்து போகத் தீர்மானித்து, அங்கிருந்த மிசியோன் தோட்டத்தையும் கட்டடங்களையும் விற்றுப்போட மனதாயிருந்ததால், அவற்றை குண்டூர் கலெக்டர் ஸ்டோக்ஸ் (Stokes) துரை முதலியவர்கள் வாங்கி, லைப்சிக் (திரேஸ்தன்) மிசியோனுக்கு இனாமாகக் கொடுத்தார்கள். இப்படியே தரங்கை மாயூரச் சேகரங்கள் நமது மிசியோன் தன் வேலையைச் செய்வதற்கு ஆரம்ப ஸ்தலங்களாயின.

1849-ஆம் ௵ இத்தேசத்தில் பழைய டேனிஷ் மிசியோனுக்குச் சொந்தமாயிருந்த தோட்டங்களும் கட்டடங்களும் லைப்சிக் மிசியோன் அனுபவத்துக்கு விடப்பட்டன. இப்படியே லைப்சிக் மிசியோன் சங்கத்தார் சுத்தபோதக விசுவாசத்திலும், தேசப்பிரமாணத்திற்குப் பொருந்திய உடன்படிக்கையினலும் பழைய டேனிஷ் ஹல்லே மிசியோன் சங்கத்தாருக்கு வாரிசுகளாக அங்கிகரிக்கப்பட்டார்கள். அன்றியும் தென்மார்க்கு அரசாங்கத்தார் நாளதுவரையில் இச்சங்கத்திற்குப் பொருள் உதவியும் செய்து வருகிறார்கள்.

Danish H. Mission delivered to L. E. L. M.

பழைய மிசியோனைப்போலவே இந்தப் புதிய மிசியோனும் தன் வேலையைத் தரங்கையில் ஆரம்பித்து, தமிழ் நாடெங்கும் பரப்பவேண்டியதாயிருந்தது. ஆகையால் கோர்தேஸ் ஐயர், புத்திவிஞ்ஞானப் போதகங்களால் சீர்குலைந்திருந்த தரங்கைச் சபையையும், பள்ளிக்கூடங்களையும் சீருக்குக் கொண்டுவருவது அவருக்கு முதல் வேலை ஆயிற்று. அவர் ஒப்புக்கொண்ட சபையின் ஆத்துமாக்கள் 1500; பள்ளிக்கூடங்கள் 14, பள்ளிக்கூட மாணக்கர் 650, உபதேசிமார் 5, உபாத்திமார் 16. அவர் தமிழ் மொழியை நன்ருய்க் கற்று, சுத்த சுவிசேஷ போதகத்தைத் திட்டமும் தெளிவுமாய்ப் பிரசங்கித்ததுமன்றி, பள்ளிக்கூடங்களில் லூத்தரன் ஞானோபதேசமும் வேத சரித்திரங்களும் போதிக்கப்படவும், காலை மாலை ஜெபங்கள் கிரமமாய் நடக்கவும் கண்டிப்பான ஏற்பாடு செய்தார்.

Cordes, head of the Mission.

1856-ஆம் ௵ தரங்கை மிசியோன் மூன்ரும் ஜூபிலி சிறப்பாய்க் கொண்டாடபட்டது. பலவிடங்களிலுமிருந்து அநேகக் கிறிஸ்தவர்கள் தரங்கன்பாடிக்கு வந்தார்கள். தஞ்சை வேதநாயக சாஸ்திரியாரும் தமது பாடகரோடு வந்திருந்து அக்கொண்டாட்டத்தைச் சிறப்பித்தார்.

Tranquebar M. Jubilee.

அவ்வருஷமளவும் தரங்கை மிசியோன் சம்பந்தமாக வந்த ஐரோப்பிய குருமார் 14. இவர்களில் ஜூபிலி காலத்தில் இத்தேசத்தில் இருந்தவர்கள் 8 பேர். எனெனில் ஷ்மைசர் (Schmeisser) ஐயர் 1848-ஆம் ௵ இறந்துபோனர். 4 பேர்

மிசியோன் சம்பந்தத்தைவிட்டுச் சீமைக்குத் திரும்பிப் போனார்கள். ஒக்ஸ் (Ochs) ஐயர் உத்தரவின்மேல் சீமைக்குப் போயிருந்தார்.

1856-ஆம் வருஷத்திற்குள் தரங்கைச் சபை (பிறையாறு உள்பட) தொகை விருத்தியாகியிருந்தது. 1840-ஆம் வருஷமளவும் தரங்கை ஞானஸ்நான டாப்பில் பதிவு செய்யப்பட்டிருந்த ஞானஸ்நானங்கள் 10,749. அத்தொகை 1855-ஆம் ௵ 12,765 ஆயிற்று. இதற்கு முக்கிய காரணம் திருமெஞ்ஞானம் பூதனூர் கிராமங்களில் அநேகர் ஞானஸ்நானம் பெற்றதே. இது முக்கியமாய் மீலியுஸ் (Mylius) ஐயரின் பிரயாசையாலானது. அவர் 1847–ஆம் ௵ முதல் 1849-ஆம் வருஷமட்டும் இங்கே நன்முயற்சியோடு உழைத்தார்.

இந்த ஆரம்பகாலத்தில், நாம் ஏற்கனவே தெரிவித்தபடி மாயூரமும் (1845), அமெரிக்கன் மிசியோனால் விட்டுவிடப்பட்ட புதுக்கோட்டையும் (1846), சென்னை (1848), திருச்சிறாப்பள்ளி 1850), தஞ்சாவூர் (1851) வட்டங்களும் நமது மிசியோன் சேகரங்களாயின. இச்சேகரங்களில் 1850 வருஷமுதல் 1855 வருஷமட்டும் ஞானஸ்நானம் பெற்ற இந்துக்கள் 1356.

ஆகவே, ஜூபிலி (1856) வருஷத்தின் ஆரம்பத்தில் நமது மிசியோன் கிறிஸ்தவர்களின் தொகை 4166. இவர்கள் நடுவே வேலைசெய்த இந்திய ஊழியர்: 2 பிரசங்கிமார், 20 உபதேசிமார், 22 உதவி உபதேசிமார். பள்ளிக்கூடங்களின் தொகை 38, அவைகளில் போதித்த உபாத்திமார் 41, படித்த மாணாக்கர் 1031.

மேற்கூறிய பள்ளிக்கூடங்களில் விசேஷித்தவை: இங்கிலீஷ் தமிழ்ப் பாடசாலையோடு கூடிய தரங்கை செமினேரி, தரங்கை பெண் பாடசாலை, பிறையாற்றுப் பெண் பாடசாலை, மாயூரம், சென்னை சதுரங்கபட்டணத்திலிருந்த ஆதரிப்புப் பள்ளிக்கூடங்கள், புதுக்கோட்டை இங்கிலீஷ் தமிழ்ப் பாடசாலை.

லேப்சிக் மிசியோனின் ஆரம்ப வேலையின் நற்பலனாக நாம் தொகுத்துச் சொல்லிய அச்சேகரங்கள் பள்ளிக்கூடங்களின் சங்கதிகளைப் பின்னால் சற்று விபரமாய்ப் பேசுவோம். ஆயினும், கர்த்தருடைய நாமத்தில் தொடங்கிய இந்த மிசியோன்

வேலையை அவர் ஆசீர்வதிக்கச் சித்தமாயிருந்தா ரென்பது மேற்கூறிய விசேஷங்களால் தெளிவாம்.

---

## 3. மிசியோன் விசாரணைக்கும் விர்த்திக்குமான கூட்டங்கள்.

ஆரம்பத்தில் கோர்தேஸ் ஐயர் தனிமையில் மிசியோன் விசாரணையை நடத்திவந்தார். அதிக ஐயர்மார் வரத் தொடங்கியபின் சமயாசமயங்களில் மிசியோன் சங்கதிகளைப் பேசி ஒழுங்கு செய்யும்படி 1846-ஆம் ௵ முதல் கான்பரன்ஸ் சங்கம் (Missionary Conference) ஏற்பாடாயிற்று, ஐயர்மார் தொகை இன்னம் அதிகரிக்கவே, அவர்கள்

**M. Conference.**

பல தூர இடங்களினின்று அடிக்கடி, கான்பரன்ஸ் கூட்டத்திற்கு வரக்கூடாமையால், 1858-ஆம் ௵ (Missionary Church Council) என்ற ஆலோசனைச் சங்கம் தரங்கையில் ஏற்படுத்தப்பட்டது. அதன் தலைவர் சீனியர் என்கிற பட்டமுடையவராய் அதை

**Ch. Council.**

நடத்தி வந்தார். முதல் சீனியர் கோர்தேஸ் ஐயர் (1858-1869), இரண்டாவது சீனியர் சுவார்ச் ஐயர் (1869-1787), மூன்றாவது சீனியர் கிரெம்மர் ஐயர் (1887-1889), நாலாவது சீனியர் பம்பரீன் ஐயர்; இவருக்கு 1902-ஆம் வருஷ முதல் சிரேஷ்டர் (Provost) என்கிற பட்டம். அவருக்குப்பின் மைனர் ஐயர் சிரேஷ்டர் ஆனார்.

ஆலோசனைச் சங்கம் ஏற்பட்ட 1858-ஆம் வருஷ முதல் ஐயர்மார் வருஷந்தோறும் ஜனுவரி அல்லது பெப்ருவரி மாதத்தில் தரங்கையில் கூடிவந்து, மிசியோன் நடபடிகளை ஆலோசனைச் சங்கத் தலைவரால் கேட்ட

**German Synod.**

றிந்து, மிசியோனின் முன்னேற்றத்துக்கான விசேஷங்களைக் குறித்து யோசித்து, அவசியமான ஏற்பாடுகளையும் தீர்மானங்களையும் செய்வதற்கான ஒழுங்கு பண்ணப்பட்டது. இப்படிக் கூடுகிற வருஷாந்திரக் கூட்டம் கர்மானிய பாஷையில் நடந்தேறும்.

**P. Conference.**

இதற்கு சினோட் என்று பெயர். இந்த கர்மானிய சினோட் கூட்டத்திற்கு முந்தின இரண்டு தினங்களில் சுதேச குருமாரும் சேர்ந்து, தங்கள் ஊன்றக் கட்டுதலுக்கும் சபைகளின் நலத்துக்குமேற்ற பல

விஷயங்களைப் பேசுகிறதற்கான குருக்களின் தமிழ்க்கூட்டம் 1864-ஆம் ஞூ ஏற்படுத்தப்பட்டது.

Tamil Synod.

1887-ஆம் வருஷம் தமிழ்நாட்டுச் சுவிசேஷ லுத்தரன் திருச்சபையின் பொதுக் கூட்டம் கூடிவர ஏற்பாடாகி, முதலாம் பொதுக்கூட்டம் தஞ்சாவூரிலும், இரண்டாம் பொதுக்கூட்டம் (1890) திருச்சிறுப்பள்ளியிலும், மூன்றும் பொதுக்கூட்டம் (1893) சென்னையிலும், நாலாம் பொதுக்கூட்டம் (1896) தரங்கையிலும், ஐந்தாம் பொதுக்கூட்டம் (1899) நாகபட்டணத்திலும், ஆறும் பொதுக்கூட்டம் (1902) சீர்காழியிலும், ஏழாம் பொதுக்கூட்டம் (1905) தஞ்சாவூரிலும் கூடிவந்தது. மூன்று வருஷத்திற்கு ஒருமுறை கூடிவருகிற இந்தப் பொதுக் கூட்டத்திற்கு அக்கிராசனபதியாகிய ஆலோசனை சங்கத் தலைவரும், கர்மானிய சினோட் கூட்டத்தார் தெரிந்து கொள்ளும் 3 ஐரோப்பிய குருமாரும், சுவேதிஷ் மிசியோன் காரியதரிசியும் இந்திய குருமார் யாவரும், முகாமைச் சங்கம் ஏற்பட்டிருக்கும் சபைகளின் ஸ்தானாபதிகளும் வருவார்கள். இதில் கூடிவந்தோருக்கு எழுப்புதலான ஆராதனைகள் நடப்பதுமன்றி, தலைவரால் சென்ற மூன்று வருஷத்து ரிப்போர்ட்டு வாசிக்கப்படும். பொதுப் பொக்கிஷங்களின் கணக்குகள் விபரிக்கப்படும். விசுவாசத்திற்கும் சன்மார்க்கத்துக்குமடுத்த விஷயங்களைப் பற்றி உபந்நியாசிக்கப்படும். சபைகளின் அபிவிர்த்திக்கான பல சங்கதிகள் பேசித் தீர்மானிக்கப்படும்.

---

## 4. லெப்சிக் மிசியோன் ஸ்தேகரங்கள்

### தரங்கை.

#### 1. தரங்கைச் சபை.

நாம் ஏற்கனவே பார்த்தபடி டேனிஷ் ஹல்லே மிசியோன் கடைசி குருவாகிய கெமரர் ஐயர் மாணத்திற்குப் பின் தரங்கைச் சபையை விசாரித்து வந்த குனுத்சன் ஐயரிடத்திலிருந்து கோர்தேஸ் ஐயர் அதை 1853-ஆம் வருஷம் மே ௴

ஒப்புக்கொண்டு 1870-ஆம் ஞூ வரையில் அதை நடத்தி வந்தார். அவர் செய்த ஆரம்ப வேலைகளை முன்னமேயே தெரிவித்திருக்கிறோம். அவருடைய

**Tranquebar.** விசாரணையில் தரங்கைச் சபை விருத்தியடைந்து வந்ததென்பது நிச்சயம். சபையில் சுயாதீனமும் சுயபரிபாலனமும் உண்டாவதற்கான முதல் முயற்சி அவரால் செய்யப்பட்டது. அவாது முயற்சியின் நற்பலனாக 1849-ஆம் வருஷத்திலே எருசலேம் பெத்லகேம் சபைகள் கோவில் பொக்கிஷம் சேர்க்கத் தொடங்கினார்கள். அவர்கள் சேர்த்த தொகையோ ஒரு பொக்கிஷ சேர்ப்பாக வைக்கப்படாமல் அப்போதப்போது கோவிலுக்கென்றும் கோவிலூழியருக்கென்றும் செலவழிக்கப்பட்டது. ஆயினும், 1868-ஆம் ஞூ டிரெக்தர் ஹார்தெலாந்து சாஸ்திரியார் தரங்கையில் கூடிய ஐயர்மார் கூட்டத்தில் சபைப் பொக்கிஷ சட்டங்களை ஏற்படுத்தியபின் தரங்கைச் சபையே மற்ற சபைகளுக்கு முந்திக்கொண்டு ஒழுங்காய் மாதாந்தர வீதம் சேர்க்க ஆரம்பித்தது. இதனாலும், கொல்லேகியும் சங்கத்தார் உதவியினாலும் சபைப் பொக்கிஷம் அதிகரித்து 1881-ஆம் வருஷத்திலேயே சுயபரிபாலன சபையாகத் தொடங்கிற்று. 1891-ஆம் ஆண்டிலோ அது சபை குரு, கோவிலூழியர் சம்பளத்தை மிசியோன் உதவியும், போதகாதரிப்புப் பொதுப் பொக்கிஷ உதவியுமின்றி கொடுக்கக் கூடியதாயிற்று.

1865-ஆம் ஆண்டளவும் கோர்தேஸ் ஐயர் தனிமையாக தரங்கைச் சபையை விசாரித்து வந்தார். அவ்வருஷத்திலோ ஆ. ம. சாமுவேல் ஐயர் அவருக்கு உதவியாளராகி, வியாதியினிமித்தம் பென்ஷன் பெற்ற 1880-ஆம் வருஷமட்டும் தரங்கைச் சபையை விசாரித்து வந்தார். 1879-ஆம் வருஷக் கடைசியில் ஞா. சாமுவேல் ஐயர் சபைகுருவாகி 1891-ஆம் வருஷமட்டும் அதைச் சுவார்ச் ஐயர் மேல் விசாரணையில் நடத்தி வந்தார். அவ்வருஷம் ஞானபிரேஷகம் ஐயர் சபை குருவானார். அவர் சுகவீனத்தின் பொருட்டு மாற்றப்பட்டபின் வே. தேவசகாயம் ஐயர் தரங்கைச் சபைக்குக் குருவானார்.

தரங்கைச் சேகரத்தின் கிராமச் சபைகளில் முக்கியமானவை மூன்று: வெளிப்பாளையம், சந்திரப்பாடி, பெரிய மாணிக்கப்பங்கு. இந்த மூன்று இடங்களிலும் நெடுநாளாகப் பள்ளிக்கூட வேலை கிரமமாய் நடந்துவந்தும், பின்னால் இரண்டு



**The Rev. N. Samuel,**

born on 18-9-1850 at Kumbakonam, ordained on 31-10-1877 and died at Madras on 20-5-1927

பள்ளிக்கூடங்கள் பிள்ளைகள் குறைவால் மூடப்பட்டுபோயின. வெளிப்பாளையத்தில் பூர்வத்திலேயே சபையாரால் கட்டப்பட்ட ஒரு ஜெபவீடு உண்டு. அதில் புதன் கிழமைதோறும் ஜெபம் நடந்து வருகிறது.

**Velipalayam.**

ஆரம்பத்தில் சந்திரப்பாடி கிறிஸ்தவர்கள் மிகுத்திருந்த இடம். அங்கிருந்த கிறிஸ்தவ குடும்பங்களினின்று: சாமிதாசன், ம. பாக்கியம், ஜெ. ஆரோக்கியம் என்ற குருமாரும், பிறையாறு சாந்தப்ப பிள்ளை, நாகை ஐயாப்பிள்ளை முதலிய பிரக்கியாதியான சபையாரும் வெளிப்பட்டார்கள். உத்தியோக முகாந்திரத்தால் அங்கிருந்த வெகுபேர் வெளியேறிவிட்டார்கள். தற்காலம் அங்கே சில ஏழைக் கிறிஸ்தவர்கள் இருக்கிறார்கள்.

**Sandrapadi.**

பெரியமாணிக்கப்பங்கு என்ற கிராமத்தில் 1852-ஆம் ஞு கட்டப்பட்ட ஜெபவீடு 1880-ஆம் ஞு மழையினால் இடிந்து போகவே, அடுத்த வருஷத்தில் ஒரு அழகிய தெய்வாலயம் கட்டப்பட்டு, கர்மேல் தெய்வாலயம் எனப் பெயர் பெற்றது. பெரிய மாணிக்கப்பங்கு கிறிஸ்தவர்களில் பலர் சென்னைக்கு வலசை வாங்கி, கல்வியிலும் நாகரீகத்திலும் அதிகரித்து, சபைக்கு அலங்காரமான அவயவங்களானார்கள்.

**Periamanickapangu.**

இந்தியாவிலுள்ள புரோட்டெஸ்டாண்டு மிசியோன் கோயில்களில் எல்லாம் முதலாவதாகிய தரங்கை புது எருசலேம் கோயில் 1877-ஆம் வருஷம் கிரால் ஐயரால் புதுப்பிக்கப்பட்டது. அதற்கு 1886-ஆம் வருஷம் சபையாரில் ஒருவராகிய சாலமோன் ஐயாப்பிள்ளை என்பவரது சுய செலவில் உயர்வாசனங்கள் சவதரிக்கப்பட்டன.

காரைக்கால்: இது பிராஞ்சு லாக்காவில் உள்ள வியாபாரப் பட்டணம். இதிலே பூர்வம் ஆரோன் நாட்டையரால் சேர்க்கப்பட்ட ஒரு சபையிருந்தது. டேனிஷ் மிசியோன் நலிவடைந்த காலத்தில் விசாரணைக் குறைவால் பலர் ரோமான் சபையில் சேர்ந்தும், பலர் மருள விழுந்தும் போனார்கள். மீதியாயிருந்த பேர்களை 1820-ஆம் ஞு கெமரர் ஐயர் சுவி. பிர. சங்கத்தாருக்கு ஒப்புவித்தார்.

**Karikal**

தரங்கையினின்று பிழைப்பின் நிமித்தம் காரைக்காலில் குடியேறியிருந்த இரண்டொரு லுத்தரன் சபைக் குடும்பங்களைச் சமயாசமயங்களில் போய் விசாரித்து வந்த சபை குருவாகிய ஞா. சாமுவேல் ஐயர் கர்த்தருடைய ஒத்தாசையால் அவ்விடத்தில் ஒரு சபையைச் சேர்க்க முயன்றார். அந்த பிராஞ்சு லாக்கா பிரஜைகளான 10 பேர் 1885-ஆம் ஹு மே மீ 1-ஆம் உ. தரங்கை எருசலேம் கோயிலில் ஞானஸ்நானம் பெற்றார்கள். 1885-ஆம் ஹு கோயில்பத்தென்ற இடத்தில் தரங்கைக்கு வரும் ரஸ்தா ஓரத்தில் ஒரு மனைக்கொல்லை வாங்கப்பட்டு, அதில் 1886-ஆம் ஹு ஒரு சிறு கோயிலும் கட்டப்பட்டது. அதன் பெயர் எபேன் எசேர். பிராஞ்சு லாக்காவிலுள்ளதும், ஏற்கனவே கிறிஸ்தவர்கள் இருப்பதுமான பூவம் என்ற கிராமமும் காரைக்காலோடு சேர்ந்து 1891-ஆம் ஹு முதல் காரைக்கால் வட்டம் பிரத்தியேகச் சேகரமாயிற்று. அப்போதப்போது இரண்டொரு புறமதத்தினர் ஞானஸ்நானம் பெற்றதுமன்றி, ரோமானித்தாரில் இரண்டொருவரும் சபையில் சேர்ந்ததால் சபை பெருகத் தொடங்கிற்று. 1896-ஆம், 1897-ஆம் வருஷங்கள் பஞ்சகாலமாயிருந்ததால் அநேகர் ஞானஸ்நானம் பெற்றார்கள். இதனால் மேலே காசாகுடி, வசிஷ்டர் குடி, கொல்லாபுரம் என்ற இடங்களில் சிறு சபைகள் சேர ஏதுவாயிற்று. 1901-ஆம் ஹு மேலே காசாகுடியில் கூரைக்கட்டான ஒரு சிறு கோயில் கட்டி, அதற்கு அற்புதநாதர் கோயிலென்று பெயரிடப்பட்டது.

சென்ற 50 ஆண்டுகளில் நீண்டகாலம் தரங்கையில் சபை குருக்களாகச் சேவைபுரிந்தோர் T. யோசேப்பு, M. பவுல் அருளப்பன், A. C. செபஸ்தியான், G. ஜான் தாவீது, A. M. தேவாச்சரியம், A. D. ஞானதிக்கம், R. தேவசகாயம், J. W. அப்பாவு, J. அருள்தாஸ், G. T. வேதமாணிக்கம், D. A. ஜேக்கப் முதலியோர்.

தரங்கைக்கு மீண்டும் போதனாமுறைப் பாடசாலை, குருக்கள் வகுப்பு, செமினேரியும் வந்ததுமன்றி ஒரு புதிய ஹைஸ்கூலும் ஏற்பட்டதால் இப்போது தரங்கைச் சபை சிறந்து விளங்குகிறது.

## 2. செமினேரி

இத்தேசத்தில் மிசியோன் வேலை சரியாய் நடந்தேறுவதற்கு இத்தேசத்தாரான மிசியோனூழியர் மிகவும் அவசிய

மெனக் கண்ட சீகன்பால்க் சிரேஷ்டர் மிசியோனுழியரை ஆளாக்குவதற்கான செமினேரிப் பாடசாலையை ஸ்தாபித்த விஷயத்தை ஏற்கனவே தெரிவித்திருக்கிறோம். கோர்தேஸ் ஐயர் தரங்கைக்கு வருகிற காலத்தில் அப்பாடசாலை இருந்ததில்லை. ஆகையால் அவர் குனுத்சன் ஐயரோடும், டேனிஷ் இராஜாங்க ஆலோசனைக்காரரான தீம்ரோத் துரையோடும் யோசனைபண்ணி, ஒரு செமினேரியை ஸ்தாபிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். அதற்கு ஒரு கட்டடம் தேவையாயிருந்ததால், இப்பொழுது பிறையாற்றில் ஐரோப்பிய சகோதரி குடியிருக்கும் மிசியோன் வீட்டை ஏலத்தில் வாங்கப் பார்த்து 500 ரூபாய் வரையில் உயர்த்திக்கேட்டார். சுப்பராயலு நாயுடு என்ற ஒரு இந்து தனவான் அதை 550 ரூபாய்க்குக் கேட்டு, வாங்கிவிட்டார். பிறகு நமது கிறிஸ்தவர்களில் ஒருவருடைய முயற்சியால் மேற்கூறிய தனவான் அதைத் தாம் வாங்கிய விலைக்குக் கோர்தேஸ் ஐயருக்கு விற்றுப்போட்டார். 1842-ஆம் ஸ்ரீ பெப்ருவரி மீ 12-ஆம் உ. கிரயசாசனம் செய்யப்பட்டது. அந்த வருஷம் செப்டெம்பர் மீ 11 ஆம் உ சாயங்காலம் செமினேரி திறப்பதற்கு ஆயத்தமாக அந்த வீட்டிலே ஜெபக் கூட்டம் நடந்தது. அதில் கும்பகோணம் லண்டன் மிசியோன் குருவாகிய நிம்மோ ஐயர் யோவான் 10, 27-30-ஐ விஸ்தரித்தார். மறுதினமாகிய 12 ஆம் உ. திங்கள் கிழமை காலையில் குனுத்சன், நிம்மோ என்ற ஐயர்மாரும் சில முக்கியமான கிறிஸ்தவர்களும் வந்திருக்கையில், 'அதிசயங்களை எல்லா இடமுஞ் செய்யும்' என்ற ஞானப்பாட்டைப் பாடினார்கள். கோர்தேஸ் ஐயர் மத்தேயு முதலாம் அதிகாரத்தை எடுத்து, வாக்கியம் வாக்கியமாய் பிள்ளைகளை வாசிக்கச் சொல்லி, வேத சரித்திரம் படிக்கவேண்டிய அவசியத்தை வற்புறுத்திப் பேசினார். பிறகு குனுத்சன் ஐயர் செமினேரியின் அவசியத்தைக் காண்பிக்கும் சில வார்த்தைகளைப் பேசி, ஒரு சுருக்க ஜெபம் செய்து ஆசீர்வாதங்கூறினபின், செமினேரி வேலையை ஆரம்பித்தார்கள்.

Seminary opened by Cordes.

1845-ஆம் ஸ்ரீ ஜுன் மீ வரையில் செமினேரி கோர்தேஸ் ஐயர் விசாரணையில் இருந்தது. அவருக்குச் சபை வேலை அதிகப்பட்டதால் சுவார்ச் ஐயர் அதன் விசாரணையை ஒப்புக்கொண்டு 4½ வருஷக்காலம் அதை நடத்தினார். இதற்குள்

கோர்தேஸ் ஐயர் சீமைக்குப் போய்த் திரும்பினூர். செமினேரியைக் கோட்டையிலிருந்த ஆங்கிலோ தமிழ்ப் பாடசாலையோடு சேர்த்து நடத்துவது உசிதமென்று கோர்தேஸ் ஐயர் இல்லாத காலத்தில் ஐயர்மார் தீர்த்திருந்தார்கள். ஆங்கிலோ தமிழ்ப் பாடசாலையை விசாரித்து வந்த ஐபி துரை (Eibye) 1849-ஆம் ஹு அக்டோபர் மீ ஆரம்பத்தில் அதை அப்பெல்ட் (Appelt) ஐயரிடம் ஒப்புவித்து, அந்த மீ 29-ஆம் உ இறந்துபோனூர். முன் செய்யப்பட்ட தீர்மானத்தின்படியே, பிறையாற்றிலிருந்த செமினேரி கோட்டைக்கு மாற்றப்பட்டு, அங்கிருந்த ஆங்கிலோ தமிழ்ப் பாடசாலையோடு சேர்ந்ததாய் 1850-ஆம் ஹு ஜனுவரி மீ 7-ஆம் உ திறக்கப்பட்டது. பிறையாற்றுச் செமினேரியிலிருந்த மாணுக்கர் 43. இவர்களில் ஆதரிப்புச் சாலைக்குட்பட்டோர் 21. கோட்டைப் பள்ளிக்கூட மாணுக்கர் 46, புதிதாய்ச் சேர்ந்தோர் 5 பேர். ஆகவே கலந்த பள்ளிக்கூட மாணுக்கர் தொகை 94. இவர்கள் மூன்று வகுப்பாய்ப் பிரிக்கப்பட்டார்கள். கோர்தேஸ் ஐயர் எருசலேம் கோயிலுக்கு எதிரிலுள்ள மிசியோன் வீட்டில் வசித்து, செமினேரியை விசாரித்து, உயர்ந்த வகுப்பில் வேதசரித்திரம், ஞானோபதேசம், லத்தீன், கர்மானிய பாஷைகளைப் படிப்பித்து வந்தார். ஐபி துரை இறந்தது முதல் காலியாய்ப் போன நந்தாவனத் தோட்டத்தில் உள்ள வீட்டிலே வசித்து அப்பெல்ட் ஐயரால் மாணுக்கரின் ஆதரிப்புக் கூடம் விசாரிக்கப்பட்டது.

J. M. N. Schwarz.

சுதேச கிறிஸ்தவர்களில் தகுந்த பேர்களை குருமாராக்க வேண்டுமென்பதே செமினேரியை ஏற்படுத்துவதில் கோர்தேஸ் ஐயருக்கிருந்த முக்கிய நோக்கம். இதற்காக, அவர் சீமைக்குப் போய்த் திரும்பினபின், கான்பரன்ஸ் கூட்டத்தார்: சாமுவேல், நல்லதம்பி என்கிற இரண்டு பேரை 1849-ஆம் ஹு மே மீ 31-ஆம் உ தெரிந்துகொண்டார்கள். சாமுவேல் என்பவர் ஆரோன் நாட்டையர் சந்ததியாரான மதுரவாசகம் பிள்ளை குமாரன். இவர் ஆரம்ப முதல் கோர்தேஸ் ஐயரின் பிரிய சீஷனுயிருந்து போதக விஷயங்களில் மிகத் தேறினவர். நல்லதம்பி என்பவரோ காஸ்பார் கோலோப் ஐயரால் தஞ்சாவூரில் ஞானஸ்நானம் பெற்ற ஒரு பூசாரியின் மகன். இவர்

I. Divinity Class.

கூடலூரிலே இங்கிலீஷ் மிசியோனிலும், கும்பகோணத்தில் லண்டன் மிசியோனிலும் உபதேசியாராயிருந்து சபை வேலையில் அனுபவ முதிர்ந்தவர். இந்த இரண்டு பேருக்கும் சுவார்ச்சு, மீலியுஸ் என்ற ஐயர்மார் வேத சாஸ்திரத்திற்குரிய போதனை செய்தார்கள். 1850-ஆம் ௵ கோர்தேஸ் ஐயர் போதக சாஸ்திரமும், ஆத்ம விசாரணை சாஸ்திரமும் (Dogmatics and Pastoral Theology) கற்பித்தார். 1851-ஆம் ௵ மார்ச்சு ௴ 28-ஆம் ௳ அவர்கள் பரீட்சை கொடுத்து, பிரசங்கிமாராக்கப்பட்டார்கள். அவ்விருவருக்கும் 1860-ஆம் ௵ ஜுன் ௴ 27-ஆம் தேதி தரங்கையில் குருப்பட்டம் கொடுக்கப்பட்டது.

1852-ஆம் ௵ கிறிஸ்தியான், ஆரோன், சாலொமோன் என்றவர்களுக்கு வேதசாஸ்திரம் கற்பிக்கத் தீர்மானித்தும், பல முகாந்திரங்களால் சரிப்படாமற் போயிற்று. அவர்கள் மிசியோன் வேலை கற்றுக்கொள்ளும்படி ஐயர்மாருக்குச் சிஷப்பிள்ளைகளாக நியமிக்கப்பட்டார்கள். சபையில் காணப்பட்ட ஜாதி வித்தியாச விஷயமாய் ஐயர்மாருக்குள் உண்டான ஒவ்வாமையின் நிமித்தம் கோர்தேஸ் ஐயர் 1857-ஆம் ௵ சீமைக்குப் போவதற்கு அவசியம் நேரிட்டதால் செமினேரி விசாரணை அந்த வருஷம் செப்டெம்பர் மாத முதல் அப்பெல்ட் ஐயருக்கு ஒப்புவிக்கப்பட்டது. அவர் அதை 1858-ஆம் ௵ பெப்ருவரி மாதம் மட்டும் விசாரித்து வந்தார்.

Appelt.

அப்பொழுது கலந்த செமினேரியும் இங்கிலீஷ் பள்ளிக்கூடமும், தகுந்த மிசியோனூழியரை ஆளாக்கப் போதுமான சீரில் இல்லாமையால், அதை அச்சீருக்குக் கொண்டுவரும் படிக்கான சாமர்த்தியமுடைய ஒருவரைத் தேடுவது சங்கத்தாரின் விசேஷித்த கவலையாயிருந்தது. பேர்பெற்ற ஸ்தேலீன் ஐயரே அதற்குத் தகுந்தவரென்று கிரவுல் சாஸ்திரியார் கண்டுபிடித்தார். அந்த ஐயர் 1858-ஆம் ௵ மார்ச்சு ௴ செமினெரி விசாரணையை ஒப்புக்கொண்டார். கல்வித் திறமையும், போதக சமர்த்தும், விசாரணைச் சக்தியும் பொருந்திய ஸ்தேலீன் ஐயரால் செமினேரி வகுப்புகளிலும் இங்கிலீஷ் பள்ளிக்கூட வகுப்புகளிலும் விசேஷித்த விர்த்தி காணப்பட்டது. ஜாதி வித்தியாச கலகத்தால் 38 மாணாக்கருள்ளதாய் சிறுகிப்போன பாடசாலை மூன்று வாரத்திற்குள் 84

Staehlin.

மாணுக்கருள்ளதும், 8 மாதத்துக்குள் 150 மாணுக்கருள்ளது மாயிற்று. 1859-ஆம் ௵ அநேகர் உபதேசிமாரும் உபாத்தி மாருமாய் வெளியேறினர்கள். அடுத்த வருஷத்தில் 4 பேர் உபதேசிமார் வகுப்பிலும் 18 பேர் உபாத்திமார் வகுப்பிலும் படித்தார்கள்.

ஸ்தேலீன் ஐயர் விசாரணைக்குள் ஒரு வேதசாஸ்திர வகுப்பும் எற்பட்டு, அதில் படித்தவர்களில் 5 பேர் பிரசங்கி மாராக வெளிப்பட்டார்கள். இவர்களில் 1864-ஆம் ௵ எப்ரில் ௴ 12-ஆம் ௳ இறந்துபோன ஒருவர் தவிர மற்ற நால்வருக்கும் 1865-ஆம் ௵ பெப்ருவரி ௴ 19-ஆம் ௳ தரங்கையில் குருப்பட்டம் கொடுக்கப்பட்டது. அவர்கள் ஞானேந்திரம், சாமிதாசன், கிறிஸ்தியான், பாக்கியம் என்ற ஐயர்மாரே. இயல்பாக நமது மிசியோன் நடபடிகள் நடக்கும் மந்தகதிக்கும் ஸ்தேலீன் ஐயருக் குரிய தீவிரகதிக்கும் சரிப்படாமல் போனதால், அவர் 1865-ஆம் ௵ செப்டெம்பர் ௴ நாகைக்கும், அங்கிருந்த தேடர்லேன் ஐயர் செமினேரிக்கும் மாற்றப்பட்டார்கள்.

Doederlein.

தேடர்லேன் ஐயர் செமினேரியை ஒப்புக்கொண்டபோது அதனோடு சேர்க்கப்பட்டிருந்த ஆங்கிலோ–தமிழ்ப் பாடசாலை E. ஷெப்பர் ஐயருக்கு ஒப்புவிக்கப்பட்டது. (சென்றல் பாட சாலையைப் பற்றிய அத்தியாயம் பார்க்க.) ஒரு புதிய வேத சாஸ்திர வகுப்பு தேடர்லேன் ஐயரால் எற்பட்டு அவ்வகுப் பினின்று 4 பிரசங்கிமார் 1869-ஆம் ௵ மே ௴ வெளிப் பட்டார்கள். இவர்களில் ஆசீர்வாதம் பிரசங்கியாருக்கும் S. D. பொன்னப்ப பிரசங்கியாருக்கும் 1874-ஆம் ௵ ஜுன் ௴ 7-ஆம் ௳-யிலும், ஜே. தா. தாவீது பிரசங்கியாருக்கு 1876-ஆம் ௵ அக்டோபர் ௴ 8-ஆம் ௳-யிலும் அமிர்தம் பிரசங்கி யாருக்கு 1877-ஆம் ௵ டிசம்பர் ௴ 16-ஆம் ௳-யிலும் குருப் பட்டம் கொடுக்கப்பட்டது.

1870-ஆம் ௵ தேடர்லேன் ஐயர் சீமைக்குப் போனதால், உயர்ந்த செமினேரி A. புளும்ஸ்திராண்டு ஐயர் விசாரணைக்கும், தாழ்ந்த வகுப்பு E. ஷெப்பர் ஐயர் விசாரணைக்கும் உள்ளாயிற்று. 1872-ஆம் ௵ ரி. ஹாந்துமன் ஐயர் செமினேரியின் தலைவராய் நியமிக்கப்பட்டு, பிரிந்த வகுப்புகளை ஒன்றாய்ச் சேர்த்துப் பிறையாற்றுக்குக் கொண்டுபோனர். செமினேரியில் படித்து

Blomstrand & Schaeffer.

வெளியேறும் உபாத்திமார் துரைத்தனத்தாரால் அங்கிகரிக்கப் படக் கூடும்படி சர்க்கார் சம்பந்தமான ஒரு போதனா பயிற்சிச் சாலையை ஏற்படுத்துவதற்கான முயற்சிகள் அக்காலத்தில் ஆரம்பிக்கப்பட்டன. செமினேரி பிறையாற்

**R. Handmann.** றுக்குப் போன சமயத்திலேயே ஒரு வேத சாஸ்திர வகுப்பு ஹாந்துமன் ஐயரால் ஆரம்பிக் கப்பட்டது. துவக்கத்தில் அதில் ஆறு பேர் சேர்ந்தும், சில மாதங்களுக்குப் பின் ஒருவர் வியாதியினால் வகுப்பை விட்டுவிட நேரிட்டது. மற்ற ஐந்துபேரில் இருவர் வகுப்பு முடியுமுன் இறந்துபோக, க. தேவசகாயம், ஞா. சாமுவேல், த. பி. பெரிய நாயகம் என்ற மூன்றுபேர் மாத்திரம் 1876-ஆம் ஹூ பிரசங்கி மாராய் வெளிப்பட்டார்கள். இவர்களுக்கு 1878-ஆம் ஹூ அக்டோபர் மீ 31-ஆம் உ புது எருசலேம் ஆலயத்தில் குருப் பட்டம் கொடுக்கப்பட்டது.

1876-ஆம் ஹூ ஹாந்துமன் ஐயர் சீமைக்குப் போனதால் புளும்ஸ்திராண்டு ஐயர் (பெர்க்ஸ்தெத் ஐயர் உதவியுடன்) செமினேரியை நடத்தி வந்தார். 1878-ஆம்

**Ihlefeld.** வருஷத் துவக்க முதல் செமினேரி ஈல பெல்டையர் விசாரணைக்குட்பட்டது. இவர் செமினேரியில் வழக்கமாய் ஏற்பட்டிருந்த வகுப்புகளையன்றி, 1879-ஆம் ஹூ ஒரு உபதேசிமார் வகுப்பையும் ஸ்தாபித்தார். அதற்கு 14 பேர் அழைக்கப்பட்டார்கள். ஒரு வருஷத்திற்குப் பின் இவர்களில் 8 பேர் உபதேசிமார்களாக மாற்றப் பட்டார்கள். 6 பேர் வேதசாஸ்திர வகுப்பில் படித்து, 1881-ஆம் ஹூ டிசம்பர் மீ 16-ஆம் உ பிரசங்கிமார்களாய் வெளிப் பட்டார்கள். அவர்களில் ஞா. தேவசகாயம், தே. தாவீது என்றவர்கள் 1884-ஆம் ஹூ பெப்ருவரி மீ 3-ஆம் உ-யிலும் வே. ம. அந்தோனி, ஞானபிரகாசம் என்றவர்கள் அதே வருஷம் அக்டோபர் மீ 12-ஆம் உ-யிலும், ஞா. தேவாசீர் வாதம் என்றவர் 1886-ஆம் ஹூ பெப்ருவரி மீ 14-ஆம் உ-யிலும் குருப்பட்டம் பெற்றனர்.

1882-ஆம் ஹூ ஜனுவரி மீ ஈலபெல்டையர் மறுபடியும் ஒரு உபதேசிமார் வகுப்பை ஆரம்பித்தார். அந்த வகுப்பினின்று 7 பேர் டிசம்பர் மீ உபதேசிமாராக வெளிப்பட்டார்கள். அவர்களோடு படித்த மற்ற ஆறுபேர் வேதசாஸ்திர வகுப்பில் சேர்க்கப்பட்டார்கள். இந்த ஆறுபேரும் 1884-ஆம் ஹூ

டிசம்பர் மீ 16-ஆம் உ பிரசங்கிமாராக அனுப்பப்பட்டார்கள். இவர்களில் ஈசாக்கு, மனுவேல் என்பவர்கள் 1887-ஆம் ௵ அக்டோபர் மீ 2-ஆம் உ-யிலும், வே. தேவ சகாயம், ஆ. சாலமோன், T. S. S. யாக்கோபு, சா. சாமுவேல் என்றவர்கள் 1890 -ஆம் ௵ டிசம்பர் மீ 14-ஆம் உ-யிலும் குருப்பட்டம் பெற்றார்கள். ஈலபெல்லையர் செமினேரியை ஏழு வருஷக்காலம் நடத்தியபின் 1885-ஆம் ௵ மார்ச்சு மீ அதைப் பம்பரீன் ஐயருக்கு ஒப்புவித்துச் சீமைக்குப் போனார்.

Pamperrien.

பம்பரீன் ஐயர் காலத்திலேதான் செமினேரியை ஒட்டிய (டிரெய்னிங்) உபாத்திமைப் பாடசாலை சர்க்கார் அங்கிகரிப்புக்கும் விசாரணைக்கும் உள்ளாயிற்று (1887). அவர் செமினேரியின் சாதாரண வகுப்புகளையன்றி, 1887-ஆம் ௵ ஒரு உபதேசிமார் வகுப்பையும், 1890-ஆம் ௵ ஒரு உபதேசிமார் வகுப்பையும் ஏற்படுத்திப் படிப்பித்தார்.

1891-ஆம் ௵ ஜனுவரி மீ அவர் செமினேரியை கேரிங் ஐயரிடம் ஒப்புவித்து கூலை மீ சீமைக்குப் போனார். 1892-ஆம் வருஷம் செப்டெம்பர் மீ 11. 12 தேதிகளில் செமினேரியின் முதலாம் ஜூபிலி வெகு சிறப்பாய்க் கொண்டாடப்பட்டது. இதற்காகப் பல சேகரங்களினின்றும் செமினேரியின் பழைய புதிய மாணக்கரான அநேக மிசியோனாழியர் வந்திருந்தார்கள். அவர்களால் ஒரு ஜூபிலிப் பொக்கிஷமும் சேர்க்கப்பட்டது.

Gehring. Seminary Jubilee.

1900-ஆம் வருஷத் துவக்கமட்டும் செமினேரிப் பாடசாலை கேரிங் ஐயர் விசாரணையில் இருந்தது. அவர் ஒன்றின்பின் ஒன்றாய் இரண்டு வேத சாஸ்திர வகுப்புகளுக்குப் படிப்பித்தார். முந்தின வகுப்பினின்று பிரசங்கிமாராக வெளிப்பட்டவர்கள் 8 பேர். இவர்களில் மூவருக்கு 1896-ஆம் வருஷ ஆரம்பத்திலும், ஐந்து பேருக்கு மறு வருஷத்திலும் குருப்பட்டம் கொடுக்கப்பட்டது. மற்ற வகுப்பினின்று பிரசங்கிமாராக வெளியேறின ஆறு பேரில் ஐந்துபேர் N. முத்துசாமி, M. யோசேப்பு, கு. சாமுவேல், D. தேவப்பிரியம் B. A. L. T., பவுல் அருளப்பன், 1902-ஆம் ௵ ஜனுவரி மீ குருப்பட்டம் பெற்றார்கள். 1896-ஆம் ௵ சென்றிரல் பாடசாலை சீர்காழிக்கு மாற்றப்பட்டதால், பிறையாற்றிலிருந்த செமினேரி தரங்கைக் கோட்டைக்கு (2-ஆம் முறை) மாற்றப்பட்டது.



**Dr. R. Frölich,**

born on 13-12-1868, arrived in India on 19-10-1892 and died in Germany on 21-11-1948.



**The Rev. Th. Meyner,**

born at Zoellnitz in Saxony on 8-10-1864, arrived in India on 30-8-1887 and died in Germany on 23-5-1955.

Frölich.

கேரிங் ஐயருக்குப்பின் பிரேளிக் ஐயர் செமினேரி விசாரணையை ஒப்புக்கொண்டார். புறமதஸ்தருக்குச் சுவிசேஷம் அறிவிப்பதில் விசேஷித்த நாட்டமும் ஆவியுமுடைய இவரால் 1902-ஆம் ௵ மே மீ சுவிசேஷகர் வகுப்பொன்று ஏற்படுத்தப்பட்டது. அந்த வகுப்பார் வெளியேறிய பின் 1903-ஆம் ௵ உபதேசிமார் வகுப்பு சேர்க்கப்பட்டது. இதில் படித்தவர்கள் அடுத்த வருஷம் மாற்றப்பட்டார்கள்.

Meyner, Zehme.

பிரேளிக் ஐயர் 1905-ஆம் வருஷத் துவக்கத்தில் சீமைக்குப் போனதால், செமினேரி மைனர் ஐயருக்கு ஒப்புவிக்கப்பட்டது. 1904-ஆம் வருஷத்தில் ஒழுகமங்கலத்தில் ஒரு புதிய வேத சாஸ்திர வகுப்பு சேமே ஐயர் தலைமையில் நடத்தப்பட்டு அதில் 12 பேர் வசனத்தின் ஊழியத்திற்கென்று பயிற்சி பெற்று வெளியேறினார்கள். மீண்டும் அவர் ஒரு வேதசாஸ்திர வகுப்பை 1910-ஆம் ௵ தொடங்க, அதிலிருந்து 1914-ஆம் வருஷம் 16 பிரசங்கிமார் வெளியேறி பின்னால் குருப்பட்டம் பெற்று ஊழியம் செய்தார்கள். மைனர் ஐயர் ஆலோசனைச் சங்கத்தலைவராய் சென்னைக்குப் போனபின் Dr. பவர் ஷேஸ்திரண்டு ஐயர்மார் செமினேரியையும் போதனாமுறைப் பாடசாலையையும் நடத்தினார்கள். யுத்த முகாந்தரமாய் செமினேரியும், போதனாமுறைப் பாடசாலையும் சிலகாலம் நின்றுபோனாலும் செமினேரி மீண்டும், மதுரை, திருச்சி, லால்குடி, பல்லடம் முதலிய இடங்களிலும் கடைசியாகத் தரங்கையிலும் நடக்க ஏற்பாடாகியிருக்கிறது. போதனாமுறைப் பாடசாலை தரங்கையில் தொடர்ந்து நடக்கிறது. தரங்கையிலேயே மீண்டும் குருமாருக்குப் பயிற்சியளிக்கும் வேத சாஸ்திர வகுப்பும் செமினேரியும் கனம் E. வெங்ஷே (Wängsjö) ஐயர் தலைமையில் நடைபெறுகிறது.

## 3. அச்சுக்கூடம்.

Danish M. Press.

பூர்வ ஐயர்மார் ஒரு அச்சுக்கூடத்தைத் தரங்கையில் ஏற்படுத்தியிருந்தார்கள். 1712-ஆம் ௵ இங்கிலாந்திலிருந்து முதல் அச்சுயந்திரமும், அடுத்த வருஷத்தில் ஜர்மானியாவிலிருந்து முதல் தமிழ் அச்சு எழுத்துக்களும் வந்த சங்கதியை முன்னமே தெரிவித்திருக்கிறோம். இந்த அச்சுக்கூடம் நூறு வருஷத்துக்கு அதிக காலம் இருந்தது. கடைசி அச்சுக்கூடத் தலைவராகிய

பெக்கர் (Becker) துரை 1817-ஆம் ஸ்ரீ இறந்துபோனார். கோர்தேஸ் ஐயர் வருகிற காலத்தில் தரங்கையிலே அச்சுக்கூடம் இருந்த இடமும் தெரியாமற் போயிற்று.

லெப்சிக் மிசியோன் சங்கத்தார் மறுபடியும் ஒரு அச்சுக்கூடத்தை ஸ்தாபிக்கும்படி 1860-ஆம் ஸ்ரீ ஹோபுஷ் துரையை இந்தேசத்திற்கு அனுப்பினார்கள். அவர் அந்த வருஷம் செப்டெம்பர் மீ வந்து சேர்ந்தும், அவர் கொண்டு வந்த அச்சுயந்திரம், பிசகாய் கல்கத்தாவுக்கு அனுப்பிவிடப்பட்டது. சில மாதங்களுக்குப் பின் அது தரங்கன்பாடிக்கு வந்து சேர்ந்தது. 1861-ஆம் வருஷம் மார்ச்சு மீ 30-ஆம் உ முதல் திருத்தக் காகிதம் (Proof sheet) வெளிப்பட்டது. அதில் அச்சிடப்பட்ட முதற் புத்தகம் ஊத்தர் சாஸ்திரியாரின் ஞானோபதேசக் குறிப்பிடம் (13-ஆம் பதிப்பு). அதுமுதல் அநேக பிரயோசனமான நூல்கள் இந்த அச்சுக்கூடத்தினின்று வெளிப்பட்டன.

L. M. Press established by Hobusch.

1858-ஆம் ஸ்ரீ முதல் புத்தகப் பிரசுரிப்புக்கென்று நியமிக்கப்பட்ட A. புளூம்ஸ்திராண்டு ஐயர் அச்சுக்கூடத்தில் பல பழைய நூல்களைத் திருத்தி அச்சிட்டதுமன்றி, பல புதிய நூல்களைத் தாமே மொழிபெயர்த்துப் பிரசுரித்தும் வந்தார். நமது புத்தகடாப்பைப் பார்த்தால், அவரும் மற்றோரும் எழுதிய நூல்கள் இவையென அறிந்துகொள்ளலாம். 1863-ஆம் ஸ்ரீ ஜூலை மீ முதல் நமது அச்சுக்கூடத்தினின்று 'அருணோதயம்' என்னும் பத்திரிகைப் பிரசுரமாகி வருகிறது. ஏறக்குறைய பதினைந்து வருஷக் காலம் இப்பத்திரிகை புளூமஸ்திராண்டு சாஸ்திரியாராலும், 1878-ஆம் வருஷ முதல் 1885-ஆம் வருஷமட்டும் சலபெல்டையாராலும் பிரசுரமாகி வந்தது. பிறகு ஐயர்மார் மேல்விசாரணையில் ஞா. சாமுவேல் ஐயரால் பதிப்பிக்கப்பட்டு வந்தது. சென்ற 20 ஆண்டுகளாக சா. ஞானமாணிக்கம் ஐயர் அருணோதய பத்திராதிபராயிருக்கிறார். இதையன்றி ஏறக்குறைய நாற்பது வருஷ காலமாய் தரங்கை மிசியோன் பஞ்சாங்கம் பிரசுரமாகி வந்தது. புளூம்ஸ்திராண்டு சாஸ்திரியார் இத்தேசத்திற்கு வந்ததுமுதல் முப்பது வருஷகாலமாய்த் தமது ஜெனன தேசத்திற்குப் போகாமல், இங்கே உழைத்ததால் மிகுந்த பலவீனமாகி, கட்டாயத்தால் 1885-ஆம் ஸ்ரீ சீமைக்குப்போய், 1887-ஆம் வருஷம் அக்டோபர் மீ 17-ஆம் உ கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். பின்னால் சலபெல்ட், ஷெப்பர், பைசன் ஹொர்த்ஸ் என்ற ஐயர்மார் ஞா. சாமுவே

Literary Department.



**The Rev. K. F. Bauer, Ph. D.,**

born at Neu-Ulm in Bavaria on 24-1-1876, ordained on 5-1-1899, arrived in India on 27-1-1903. Now living in Germany.



The Rev H. Frykholm,

born at Njurunda in Sweden on 27-1-1879, ordained on 28-1-1900, arrived in India on 12-10-1902 and died in 1937.

லையரின் உதவியால் பிரசுர வேலை நடத்தினார்கள். கிராமப் பிரசங்க புத்தகம், ஒருசந்தி கால தியான புத்தகம், திருவிருந் தாடி, சத்திய வேதபாயிரம், கதாமலர்கூடை, பாலர் பூச்சரம், திருச்சபை சரித்திர சுருக்கம், லுத்தர்சரித்திரம், தூபகலசம், உள்ளது நாற்பது முதலிய நூல்கள் அவரால் இயற்றப்பட்டு இந் நாள் வரையும் பெரும்பாலும் நமது சபைகளில் உபயோகமாகி வருகின்றன. அவர் சில ஆண்டுகள் மிசூரிச்சபையில் வேலை செய்கையில் நிருபவாக்கிய பிரசங்க புத்தக மொன்றையும் பிரசுரம் செய்தார். அவர் புனைந்த நூற்றுக்கணக்கான கீர்த் தனைகளை சுவிசேஷ கிறிஸ்தவ சபையாரனைவரும் வீடுகளிலும் ஆலயங்களிலும் பாடிவருகிறார்கள்.

சேமே சாஸ்திரியார் அரும்பிரயாசையோடு வேத சாஸ்திர வகுப்புகளுக்கும் சபைகளுக்கும் பிரயோஜனமாக திருச்சபை சரித்திரத்தை 2 பங்காகவும் நமது சபையின் போதக சாஸ்திரத்தையும் (Dogmatics) நமது அச்சகத்தில் பிரசுரித் தார்கள். பிரசங்க இலக்கணம், சுவிசேஷ பிரசங்க இலக்கணம் என்ற புத்தகங்களையும் வேறு அச்சகத்தில் பிரசுரித்தார்கள். ஆகிலும், ஆங்கிலத்தில் தற்கால வேத சாஸ்திர வகுப்புகளின் போதனை நடக்கிறபடியால் அவருடைய புத்தகங்களின் அருமையை நமது தற்கால வேத சாஸ்திர மாணவர் அறியார்கள்.

ஹோபுஷ் துரை இருபத்தைந்து வருஷக்காலம் அச்சுக் கூடத் தலைவராயிருந்து, அதை நல்ல நிலைமையில் வைத்திருந் தார். ஏறத்தாழ அதன் வரவைக்கொண்டே செலவு நடக்கும் படிக்கான விதமாய் அதை நடத்தி வந்ததால் மிசியோனுக்கு அதிகப் பாரமா யிராதபடிக்குப் பார்த்தார். (அச்சுக்கூடத் தலைவரின் வேலையோடு மிசியோன் பொக்கிஷதாரி வேலையும் சேர்ந்திருந்தது.) அவர் சுகவீனப்பட்டுச் சீமைக்குப் போய் இருக்கும் காலத்தில் இங்கு வேலை பார்த்தவர்களில் கால், பைசன்ஹொர்த்ஸ், காபீஸ் ஐயர்மார் விசேஷித்தவர்கள். 1886-ஆம் ௵ ஹோபுஷ் துரை சீமைக்குப் போனது முதல் அது பலருடைய விசாரணைக்கும் உள்ளாயிருந்தது. 1890-ஆம் ௵ முதல் 1903-ஆம் வருஷமட்டும் அதை நடத்தினவர் மென்னிக் (Maennig) துரை. அவருடைய மனைவி பெண் பாடசாலையை மேல் விசாரணை செய்வதிலும் பெண்கள் நடுவே சுவிசேஷ வேலை செய்வதிலும் மிகவும் சிறந்து விளங்கினார்கள். அவர்

சீமைக்குப் போய் திரும்பிய பின் மிசியோன் பொக்கிஷதாரி வேலையைப் பார்ப்பதே அவருக்குப் போதுமான வேலையாயிற்று. ஆதலால் அச்சுக்கூடமும் பிரசுர வேலையும் ஞா. சாமுவேல் ஐயர் விசாரணைக்குள்ளாயிற்று. அவர் காலத்தில் ஜர்மனியிலிருந்து வந்த அச்சயந்திரத்தால், நல்ல வேலை நடந்தது. யுத்த முகாந்தரமாய் அச்சுக்கூட வேலை நிறுத்தப் பட்டது. அப்பெரிய அச்சயந்திரமும் மற்றுமுள்ள அச்சுக்கூடச் சாமான்களும் 1935-ஆம் வருஷம் விற்கப்பட்டன. பிரசுர வேலை மட்டும் தொடர்ந்தேற்றியாய் நடைபெற்று, 1942-ஆம் வருஷம் சென்னைக்கு மாற்றப்பட்டது.

சுவீடன் தேசத்திலிருந்து வந்த பண உதவியால் சிறு அச்சயந்திரம் ஒன்று வாங்கப்பட்டு மீண்டும் அச்சுக்கூட வேலை சென்னையில் திரு. A. ஞானப்பிரகாசம் அவர்கள் தலைமையில் 6—11—1950-ஆம் வருஷ முதல் தரங்கை அச்சகமும் பதிப்பகமும் (The Tranquebar Printing & Publishing House) என்ற பெயரால் நடந்து வருகிறது. இந்த அச்சயந்திரம் வாங்குவதற்கும், புதிய கட்டடம் கட்டுவதற்கும் திரு. A. ஞானப்பிரகாசத்திற்கு பக்கத் துணைவராய் விளங்கினவர் கனம் E. வெவ்வேஷ ஐயர். இதில் அருணோதயம், தரங்கை மிசியோன் பஞ்சாங்கம் மற்றும் பல பிரசுரங்களும், புதிதாய்க் கட்டப்பட்ட கட்டடத்தில் தொடர்பாய் நடந்துவருகின்றன. புதிய கட்டடம் 20-2-1954-இல் கனம் I. A. அப்பாதுரை ஐயரால் திறக்கப்பட்டது.

## 2. பிறையாறு

### 1. பிறையாற்றுச் சபை.

1746-ஆம் ஆ பிரதிஷ்டையான பிறையாற்று பெத்லேேம் கோயில் தரங்கன்பாடியைச் சேர்ந்த நாட்டுச்சபைகள் கூடி வந்து ஆராதனை செய்யும் இடமாயிருந்தது. பெரிய பண்டிகைகளின் காலத்தில் தூரத்திலும் சமீபத்திலும் இருந்த சுற்றுப் பேட்டைக் கிறிஸ்தவர்கள் அங்கே வந்து, சிலநாட்களாய்த் தங்கி, உபதேசம் பெற்று, கர்த்தருடைய பந்திக்குச் சேர்ந்து, சந்தோஷமாகத் தங்கள் வீடுகளுக்குத் திரும்புவார்கள். 1820-ஆம் ஆ கிராமச்சபைகள் கி. அ. வி. சங்கத்தாருக்கு ஒப்புவிக்கப் பட்டபின் இவ்வழக்கம் நின்றுபோயிற்று.

Porayar.

லைப்சிக் மிசியோன் சங்கத்தார் இங்கே வேலை செய்ய ஆரம்பித்த காலத்தில் கோர்தேஸ் ஐயர் ஒருவர் மாத்திரம் இருந்ததால், பெத்லகேம் கோயிலில் பெரும்பாலும் உபதேசிமாரே ஆராதனை செய்து வந்தார்கள், 1841-ஆம் வருஷம் மிசியோன் வீடு வாங்கப்பட்டது. மறு ௵ அங்கே செமினேரி ஸ்தாபகமாயிற்று. 1846-ஆம் ௵ நொவம்பர் ௴ 22-ஆம் ௳ சுவார்ச் ஐயர் (J. M. N. Schwarz) பிறையாற்றுச் சபை விசாரணையை ஒப்புக்கொண்டபொழுது அது எருசலேம் சபையை விட்டுப் பிரத்தியேகமான சேகரமாயிற்று. 1847-ஆம் ௵ முதல் 49-ஆம் ௵ மட்டும் இந்த மிசியோனில் உழைத்த மீலியுஸ் (A. Mylius) ஐயர் வேலையைக் கர்த்தர் ஆசீர்வதித்ததால் திருமெஞ்ஞானம், பூதனூர் என்ற கிராமங்களில் அநேகர் ஞானஸ்நானம் பெற்றுச் சபையில் சேர்ந்தார்கள். 1849-ஆம் ௵ அவ்விரண்டிடங்களிலும் ஜெபவீடுகள் கட்டப்பட்டன. முந்த கூரைக்கட்டாயிருந்த அவைகள் பிற்காலத்தில் ஓடுபோட்ட கற்கட்டடங்களாயின. பஞ்ச வருஷமாகிய 1854-ஆம் ௵ வொல்ப் (A. F. Wolff) ஐயரால் பிறையாற்று வட்டத்தில் 404 பேர் ஞானஸ்நானம் பெற்றூர்கள். அவர்களில் பலர் குறவர். ஆயினும், இவர்களில் அநேகர் பிற்காலத்தில் மருளவிழுந்தார்கள்.

பிறையாற்றைச் சேர்ந்த கிராமங்களில் நாம் மேலே சொன்ன திருமெஞ்ஞானம், பூதனூரையன்றி, தில்லையாடி, சீமெயோன்சேரி, மேட்டுச்சேரி, இச்சிலடி விசேஷித்தவை.

Villages.

மேட்டுச்சேரியிலும் இச்சிலடியிலும் கற்கட்டடங்களான ஜெபவீடுகள் உண்டு. பெத்லகேம் கோயிலுக்குச் சமீபமான கடுதாசிப்பட்டறை என்ற இடத்திலும் அநேக கிறிஸ்தவர்கள் குடியிருக்கிறூர்கள்.

முற்கூறிய ஐயர்மாரைத் தவிர இந்த வட்டத்தை விசாரித்து வந்தவர்கள் கிரெம்மர், ஷான்ஸ், கிரால், பைசன்ஹெர்த்ஸ், கெம்ப் என்றவர்கள். E. ஷைப்பர், பம்பரீன் ஐயர்மார் விசாரணையிலும் இது சிலகாலம் இருந்தது. 1890-ஆம் ௵ முதல் இது மறுபடியும் பைசன்ஹெர்த்ஸ், ஐயர் விசாரணையில் இருக்கையில் 1892-ஆம் ௵ குமிழந்திடல் என்ற கிராமத்திலே முன் பள்ளிக்கூடம் கட்டியிருந்த இடத்தில் மறுபடியும் ஒரு பள்ளிக்கூடம் கட்ட ஆரம்பித்தபொழுது இந்துக்களால் துன்ப

மும், நியாயந்தேடினதில் மிகுந்த செலவும் நேரிட்டது. நியாயங் கிடைக்கவில்லை. பைசன்ஹெற்த்ஸ் ஐயருக்கு உதவியாக த. சொ. சு. யாக்கோபு ஐயர் வேலைபார்த்து வந்தார். இவர்கள் வேலையை கர்த்தர் ஆசீர்வதித்ததால் சபையில் ஆத்துமாக்கள் அதிகப்பட்டன. பிறகு நீண்டகாலமாய் பிறையாற்றில் சபை குருக்களாக உழைத்தவர்கள்: சாமுவேல் பாக்கியம், V. ஆசீர்வாதம், T. T. தானியேல், D. பெலவேந்திரம், J. அருள்தாஸ், G. சாமுவேல் அந்திரேயா, S. M. அப்பாதுரை, B. கார்ல் சாமுவேல் என்போர். M. ஜேம்ஸ் என்பவர் இப்பொழுது சபைகுரு.

**Bethlehem Church.** நெடுநாளாய்ப் பழுதுபட்டிருந்ததும், நடுத்தூணால் தாங்கப்பட்டு அலங்காரக் குறைவா யிருந்ததுமான பெத்லகேம் கோயில் கிரால் ஐயரால் புதுப்பிக்கப்பட்டது. (1872). பெத்லகேம் சபையாரில் ஒருவராகிய தில்லையாடி தாவீது பிள்ளை என்பவர் தமது சுய செலவில் வாங்கிக்கொடுத்த மூன்று மணிகள் தொங்கும்படிக்கான அலங்காரக் கோபுரமொன்று (1884 -ஆம் ஞு அஸ்திபாரம் போடப்பட்டு) 1887-ஆம் ஞு கட்டி முடிந்தது.

**Chatram** பிறையாறு கஸ்பாவில் ஊருக்கு அலங்காரமும் ஏழைகளுக்குப் பிரயோசனமுமாக ஸ்தாபிக்கப்பட்டிருப்பது "அற்புதம்மாள் சத்திரம்" எனப் பெயர் பெற்ற ஒரு தர்மசாலை. இது பூர்வம் ஆரோன் ஐயர் வமிசத்தைச் சேர்ந்த ஆரோன் தாவீது தம்புசாமிபிள்ளை யென்ற தாசில்தார் தமது செலவிலே தமது சமுசாரத்தின் பெயரால் கட்டியது. 1868-ஆம் ஞு செப்டெம்பர் மீ 8-ஆம் உ பிரதிஷ்டையாயிற்று. இதற்கு நான்கு வேலி நிலமும், சொற்ப ரொக்கமும் ஆதாரவாய் வைக்கப்பட்டு, ஒரு ஐரோப்பிய குருவைத் தலைவராயுடைய ஒரு தர்ம சங்கத்தார் விசாரணையில் இருக்கிறது. தினந்தோறும் 12 ஏழைகள் இதில் கிரமமாய் உதவி பெறுகிறார்கள். சமயா சமயங்களில் ஏழைப் பிரயாணிகளுக்கும் உபகாரம் கொடுக்கப்படுகிறது.

---

## 2. தொழிற் பாடசாலை

Industrial School.

1860-ஆம் ௵ மார்ச்சு ௴ 30-ஆம் ௳ தரங்கையில் ஸ்தாபிக்கப்பட்ட அச்சுக்கூடத்தை ஒட்டி ஒரு தொழிற்சாலை ஏற்பட்டதுண்டு. அதில் அச்சுக்கூடத்துக்கேயுரிய பல வேலைகளைச் சில பிள்ளைகள் கற்றுக்கொண்டதுடன் வேறு சிலர் தச்சுவேலை, தையல்வேலை, கொல்லத்து வேலை முதலியன கற்றார்கள். 1864-ஆம் ௵ நெசவுவேலை அப்பியாசமும் ஆரம்பித்தது. 1865-ஆம் வருஷம் நொவெம்பர் மாதத்தில் நீல்சன் என்ற டேனிஷ் துரை நமது மிசியோன் வேலைக்குட்பட்டதால் சில பிள்ளைகள் தச்சுவேலையில் விர்த்தியடைய ஏதுவாகியும், அவர் 1868-ஆம் ௵ நமது மிசியோன் சம்பந்தத்தை விட்டதோடு தொழிற்கூட வேலையும் நின்றுபோயிற்று. ஆயினும், கைத்தொழில் விர்த்தி நமது சபைகளின் புறம்பான விர்த்திக்கு அவசியமெனக் கண்டு நமது பெரியோரின் அனுமதி பெற்று கிரால் ஐயர் 1874-ஆம் வருஷம் பிறையாற்றைச் சேர்ந்த ஒழுகமங்கலத்தில் தொழிற்சாலையைத் திரும்பவும் ஏற்படுத்தினார். ஆரம்ப முதல் அதில் விர்த்தியாகி வந்தது முக்கியமாய்த் தச்சுவேலை. 1874–84-ஆம் வருஷம் நெசவு வேலையும் நடந்தது. 1877-ஆம் வருஷம் சீட்சுமன் துரை தொழிற்சாலை விசாரணையை ஒப்புக்கொண்டு அத்தொழிற் பாடசாலையை எருக்கட்டாஞ்சேரியில் நிலைப்படுத்தினார். அதுமுதல் கருமான் வேலையும் நடந்து வந்தது. 1878-80-ஆம் ௵ பாய் நெசவு நடந்தது. 1882-ஆம் வருஷம் கைத்தொழிற் கூடம் கட்டப்பட்டது. இதற்கு கவர்ண்மென்றார் கொடுத்த பொருள் உதவி 700 ரூபாய். நமது தொழிற் பாடசாலை 1887-91-ஆம் வருஷம் ரிசல்டு கிராண்டு பெற்றுச் சர்க்கார் விசாரணைக்குள்ளும் இருந்தது. துரை வெளியே போக உத்தரவு பெற்றிருந்த காலங்களில் பற்பல ஐயர்மார் அதை கவனித்து வந்தார்கள். 1903-ஆம் வருஷம் சீட்சுமன் துரை சீமைக்குப் போனபோது அது ஷால்த்ஸ் (Schulz) துரை விசாரணைக்கு வந்தது பெரிய யுத்தத்திற்குப் பின் அது சிறிது காலம் பரமகுடிக்கு மாற்றப் பட்டது. இப்போது திண்டுக்கல்லில் நமது கைத்தொழிற்சாலை நடக்கிறது கார்ல் ஐசக் என்பவர் அதன் தலைவராயிருக்கிறார்.

Grahl, Zietzschmann.

## 3. மணிக்கிராமம்.

காவேரிப்பட்டணத்தை யடுத்த இந்தக் கிராமத்திலுள்ள சபை 1848-ஆம் வருஷ முதல் நமது மிசியோன் சேகரமாயிருக்கிறது. 18-ஆம் நூற்றாண்டில் டேனிஷ்-ஹல்லே மிசியோன் ஐயர்மாரால் மணிக்கிராமத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருந்த லுத்தரான் சபை தரங்கையைச் சேர்ந்த மற்ற கிராமச் சபைகளோடு ஆங்கிலேய அத்தியட்ச சபையாய்ப்போன வயணத்தை எற்கனவே தெரிவித்திருக்கிறோம். ஆங்கில சபைக்குள்ளாகியும் அந்தச் சபையாரில் அநேகருக்கு லுத்தரான் சபையின் பேரிலிருந்த பிரியம் முற்றிலும் அற்றுப்போகவில்லை.

**Manikramam.**

தரங்கன்பாடிக்குப் பழையபடி கர்மானிய குருமார் வந்து, பழைய லுத்தரான் போதகங்களைப் போதிக்கிறதாக அறிந்தபோது அந்த லுத்தரான் சபையில் மறுபடியும் சேரவேண்டுமென்கிற விருப்பம் தமிழ் நாட்டில் இருந்த அநேக கிறிஸ்தவர்களுக்கு உண்டானதுபோல் இவர்களுக்கும் உண்டாயிற்று. ஆங்கில சபையைச் சேர்ந்த குருமார் மணிக்கிராமச் சபையாரிற் சிலரை லுத்தரான் சபையாரோடு விவாக சம்பந்தம் செய்யப்படாதென்று நிர்ப்பந்தித்தபோது அவர்கள் அச்சபையை விட்டுப் பிரிவதற்கான ஒரு புறக்காரணமும் கிடைத்தது. அவர்களில் 130 பேர் தரங்கைச் சான்பரன்ஸ் சங்கத்தாருக்கு ஒரு விண்ணப்பமெழுதி, தங்களை லுத்தரான் சபையில் சேர்த்துக்கொள்ளக் கேட்டுக்கொண்டார்கள். இவர்களில் சிலர் இங்கிலீஷ் ஐயர்மாரின் பலவித முயற்சியால் தடைப்பட்டும், பெரும்பாலார் தங்கள் விண்ணப்பத்திற்கிசைய லுத்தரான் சபையில் சேர்ந்தார்கள். 1852-ஆம் வருஷமுதல் அது தனிச் சேகரமாகி தரங்கன்பாடியில் இருந்த ஐயர்மாரால் விசாரிக்கப்பட்டு வந்தது. அவர்களில் முதல் முதல் மணிக்கிராமச் சபைக்கு விசாரணை குருவாக நியமிக்கப்பட்டவர் ஷ்மைசர் ஐயர். அவர் மரித்தபின் மீலியுஸ் ஐயரும் அவருக்குப்பின் அப்பெல்ட் ஐயரும் அதை விசாரித்து வந்தார்கள். பிறகு சுவார்ச் ஐயரும், அவருக்குப்பின் வொல்ப் ஐயரும், பிறகு R. ஹாந்துமன் ஐயரும் அதை நடத்தி வந்தார்கள். 1862-ஆம் வருஷம் அங்கே ஒரு கோவில் கட்டப்பட்டு, அதற்கு சீயோன் என்று பெயரிடப்பட்டது. 1866-ஆம் வருஷ முதல்

1884-ஆம் வருஷமட்டும் அதன் விசாரணை குருவாயிருந்தவர் A. புளும்ஸ்திராண்டு ஐயர். இவர் விசாரணை காலத்தில் பழுதாய்ப்போன பழைய கோயிலை இடித்துப்போட்டுப் புதுக் கோயில் ஒன்று கட்டப்பட்டு (1882) முந்தினதைப்போலவே சீயோன் என்கிற பெயரைப் பெற்றது. அவ்வருஷத்தில் இருந்த சபையார் தொகை 404.

புளும்ஸ்திராண்டு ஐயருக்குப்பின் சீனியர் கிரெம்மர் ஐயர் விசாரணைக்குள் 1885-ஆம் வருஷ முதல் சா. சாமுவேல் பிரசங்கியார் மணிக்கிராம வாசியாகி, அவ்வட்டத்து சபையைப் பயனுற நடத்தி, 1890-ஆம் வருஷம் குருப்பட்டம் பெற்று, அதன் குருவானார். கிரெம்மர் ஐயருக்குப்பின் முறையே ஹேர்பெர்க், நேத்தர், ரீகர், மத்தேஸ், பிரேளிக், மைனர், என்ற ஐயர்மார் ஒருவர்பின் ஒருவராய் அதன்மேல் விசாரணைக் காரரானார்கள்.

1896-ஆம் ஞூ கீழப்பெரும்பள்ளத்தில் ஞானஸ்நானம் பெற்றுச் சபையில் சேர்ந்த ஜனங்கள் தாங்கள் தலைமுறை தத்துவமாய் அனுபவித்து வந்த வீடு மானியம் முதலிய வற்றைத் தோற்று, மிகுந்த நஷ்டத்திற்குள்ளானார்கள். அவர் களுக்காக மிசியோனுபகாரிகளால் மானந்தங்காட்டில் அடைக் கலபுரம் என்னும் அடைக்கல ஸ்தலம் ஏற்பாடாகி, 1898-ஆம் வருஷம் அதில் அடைக்கலநாதர் பெயரால் ஒரு ஜெபவீடும் கட்டப்பட்டது. இப்போது மணிக்கிராம வட்ட சபையாரின் தொகை 501.

---

## 4. மாயூரம்.

பூர்வம் ஆரோன் முதலிய ஐயர்மார் வேலைசெய்த மாயூ ரத்தில் நவீனகாலத்திலே மிசியோன் வேலை ஆரம்பித்தவர் போன்புருக் ஐயர் (1823). இவர் பெர்லீன் நகரில் வேதசாஸ் திரங் கற்று சர்ச்சு மிசியோன் சங்கத்தாரால் இத்தேசத்திற்கு அனுப்பப்பட்டவர். இவர் குறநாடு என்ற இடத்தில் மனை வாங்கி, மிசியோனரியின் குடியிருப்பு, பள்ளிக்கூடம் முதலியவற்றிற்கு வேண்டிய கட்டடங்களைக் கட்டினார். தரங்கை மிசியோன் தாழ்வடையத் துவக்கினதால், சர்ச்சு மிசியோனல் புது உயிர்

Mayavaram, C. M. S.

உண்டாகுமென நம்பி, அவரும் அவருடைய தோழர்களாகிய ஷாப்டர் (1828), விங்க்லர் (1832) என்ற ஐயர்மாரும் அநேக பள்ளிக்கூடங்களை ஸ்தாபித்து, இதன் வழியே மிசியோன் வேலையை நடத்த முயன்றார்கள். தரங்கை யோனையாது சீஷரில் ஒருவராகிய ஜான் தேவசகாயம் என்பவர் அவர்களுக்கு விசேஷித்த உதவியாளராயிருந்தார். பேரன்புருக் 1832-ஆம் வருஷம் ஜனன தேசத்திற்குத் திரும்பிய பின்னும் வேலை நன்றாய் நடந்தது. 1835-ஆம் வருஷம் 24 பள்ளிக்கூடங்களில் 1500 மாணாக்கர் படித்தார்கள். அம்மட்டும் 78 இந்துக்கள் ஞானஸ்நானம் பெற்று, 10 ரோமானித்தார் சபையிற் சேர்ந்தார்கள். ஆயினும், அதற்குமேல் அந்த மிசியோன் செழித்தோங்கவில்லை. பள்ளிக்கூடங்கள் நசித்து, மற்ற வேலைகளும் விழத் துவக்கினதால், மாயூர மிசியோனைக் கைவிட்டு, அதன் தோட்டம் துறவு கட்டடங்கள் யாவையும் விற்றுப்போடச் சர்ச்சு மிசியோன் சங்கத்தார் தீர்மானித்தார்கள். இந்துக்கள் அவற்றை வாங்குவதற்கு யோசனையாயிருக்கையில், அங்கிருந்த கிறிஸ்தியான் சாந்தப்பபிள்ளை யோசனையின்படி, குண்டூர் கலெக்ட்டர் ஸ்டோக்ஸ் துரை வாங்கி, தெலுங்கு நாட்டில் மிசியோன் வேலைசெய்யும் நோக்கமாய் அங்கு வந்திருந்த நமது மிசியோன் ஐயர்மார்களாகிய ஒக்ஸ், சுவார்ச் என்ற குருமாருக்கு ஒப்புவித்தார். அப்பொழுது அவ்விரண்டு ஐயர்மாரும் தமிழ்நாட்டுக்குத் திரும்பினார்கள்.

ஒக்ஸ் ஐயர் 1845-ஆம் வருஷம் ஜனுவரி மீ 18-ஆம் உ மாயூரம் போய், பெப்ருவரி மீ 2-ஆம் உ கோர்தேஸ் ஐயரோடு அந்தச் சேகரத்தை ஒப்புக்கொண்டார். இதனோடு நமது மிசியோனுக்கு விசேஷித்த க்ஷேம காலம் தொடங்கினதால், ஐயர்மாரும் மிசியோன் உபகாரிகளும்: கர்த்தர் நம்மிடத்தில் பெரிதானவைகளைச் செய்தார் என்று சொல்லிக் களிகூர்ந்தார்கள்; அப்பொழுது மாயூரத்திலிருந்த சபையின் ஆத்துமாக்கள் 25. பள்ளிக்கூடங்கள் 3; மாணாக்கர் 120.

Ochs.

அங்கே வெகு முயற்சியோடு வேலைசெய்து 1847-ஆம் வருஷம் டிசம்பர் மீ 12-ஆம் உ ஏழைப் பெண்களுக்காக ஒரு ஆதரிப்புப் பாடசாலையை ஏற்படுத்தி நடத்தி வந்த ஒக்ஸ் ஐயர் சபையில் உண்டான ஜாதி வித்தியாச கலகத்தின் நிமித்தமும், அவ்விஷயத்தில் லெப்சிக் மிசியோன் சங்கத்தாரின் கோட்பாடு

ளுக்கு ஒத்துவர மனமற்றிருந்ததாலும் இந்த மிசியோன் சம்பந்தத்தை விட்டுப் பிரிந்துபோகவே, 1859-ஆம் வருஷம் ஆகஸ்டு மீ 29-ஆம் உ முதல் மாயூர வட்டம் சுவார்ச் ஐயர் விசாரணைக் குள்ளாயிற்று. அவர் ஒப்புக் கொள்ளுகிற காலத்திலே 1290 கிறிஸ்த வர்கள் இருந்த அந்த வட்டத்தில் (சீர்காழி உள்பட) பத்து வருஷங்களுக்குள் 1765 கிறிஸ்தவர்கள் இருக்கத் தக்கதான ஆசீர்வாதம் உண்டாயிற்று. ஒக்ஸ் ஐயர் தொடங்கின கோயில் கட்டடம் சுவார்ச் ஐயரால் முற்றுப் பெற்று, 1864-ஆம் வருஷம் மே மீ 18-ஆம் உ இம்மானுவேல் தெய்வாலயம் என்ற பெயருள்ளதாகப் பிரதிஷ்டையாயிற்று. சுவார்ச் ஐயருக்கு வட்ட விசாரணையில் விசேஷித்த உதவியா யிருந்தவர் ம. பாக்கியம் ஐயர். அக்காலத்தில் மாயூரம் வட்டத்தைச் சேர்ந்திருந்த சீர்காழி, ம. பாக்கியம் ஐயர் பிரயாசையால் பிரத்தியேகமான வட்டமாயிற்று.

Schwarz.

கோர்தேஸ் ஐயர் சீமைக்குப் போனபின் சுவார்ச் ஐயர் ஆலோசனைச் சங்கத்தின் தலைவராகித் தரங்கைக்கு வந்ததால், 1871-ஆம் வருஷமுதல் மாயூரம் மயர் ஐயர் விசாரணைக்குள்ளாயிற்று. இவர் ஐந்து வருஷம் அங்கே சுறுசுறுப்பும் கண்டிப்புமாய் வேலை பார்த்தபின் 1876-ஆம் வருஷம் ஏப்ரில் மீ 9-ஆம் உ அந்த வட்டத்தை வன்ஸ்கே ஐயருக்கு ஒப்புவித்து திருச்சிறுப் பள்ளிக்குப் போனார். அந்த வருஷம் (சீர்காழியைச் சேர்த்து) மாயூர வட்டத்துக் கிறிஸ்தவர்கள் 1687. மயர், வன்ஸ்கே ஐயர்மாருக்கு உதவி குருவாயிருந்தவர் பொன்னப்பன் ஐயர். இவர் சிலகாலம் கோயமுத்தூருக்கு மாற்றப்பட்டிருந்தும், திரும்பவும் மாயூர வட்டத்துக்குக் கொண்டுவரப்பட்டு, அதன் கிராமச் சபைகளில் விசேஷித்ததாயிருந்த பனம்பள்ளியில் வைக்கப்பட்டார்.

Mayr.

1880-ஆம் வருஷம் மார்ச்சு மீ மத்தியில் வன்ஸ்கே ஐயர் காபீஸ் ஐயரிடம் மாயூர வட்டத்தை ஒப்புவித்துச் சீமைக்குப் போனார். அந்த வருஷக் கடைசியில் (சீர்காழியை விலக்கி) அந்த வட்டத்துச் சபையார் தொகை 983.

அதற்குமேல் விங்கல் ஐயர் மாயூர வட்டத்தை ஒப்புக் கொண்டார். அவருக்கு உதவியாக மூத்த ஞா. தேவசகாயம்

ஐயரும், பிறகு தே. தாவீது ஐயரும் வேலை பார்த்தார்கள். அந்த வட்டத்தில் நல்ல வேலை செய்து வந்த விங்கல் ஐயர் 1891-ஆம் வருஷம் மே மீ 27-ஆம் உ விஷபேதியால் இறந்து போக, அவரது மைத்துனராகிய மைனர் ஐயர் அந்த வட்டத்துக் குருவாகி 1895-ஆம் வருஷமட்டும் அங்கே வேலை பார்த்தார். கொஞ்சக் காலம் பிரேளிக் ஐயர் விசாரணைக்குள்ளிருந்த அந்த வட்டம் சேமே ஐயர் விசாரணைக்குள்ளாயிற்று. மைனர், பிரேளிக், சேமே ஐயர்மாருக்கு உதவியாயிருந்தவர் ஆ. சாலமோன் ஐயர். 1901-ஆம் வருஷமளவும் மாயூரத்தில் உழைத்த சேமே ஐயரால் ஏராளமான ஜனங்கள் ஞானஸ்நானம் பெற்று சபையில் சேர்ந்தார்கள். அவ்வருஷ முடிவில் அந்த வட்டத்தில் இருந்த கிறிஸ்தவர்கள் 1416. இவருக்குப்பின் ஷேணர் ஐயரும் அவருக்குப்பின் மத்தேஸ் ஐயரும் அந்த வட்டத்தின் விசாரணை குருவானார்கள். மத்தேஸ் ஐயருக்கு உதவியாயிருந்தவர் ஜே. தா. தாவீது ஐயர். பெரிய யுத்தத்தின் காரணமாய் ஜர்மன் மிஷனரிமார் வெளியேறின பிறகு கார்ல் சாந்தகிரேன், ஹொய்மன், நீல்சன் என்ற ஐயர்மார் முறையே இங்கு தங்கி வேலை செய்தார்கள். இந்திய குருமாரில் A. சாலமோன், தேவப்பிரியம், S. ஆபிரகாம், D. ஞானதிக்கம், M. P. அருளப்பன், A. M. தேவாச்சரியம், D. A. யாக்கோபு, D. S. பிச்சை, D. பெலவேந்திரம் முதலியோர் நீண்டகாலம் சேவை புரிந்திருக்கிறார்கள். J. E. ஜுபிலி தற்போது சபைகுரு. பெண் பாடசாலை, ஆதரிப்பு விடுதி, வேதாகம ஸ்திரீகளின் வேலையை மேற்பார்ப்பவர் சகோதரி J. சிம்மர்மன் அம்மையார்.

1901-ஆம் வருஷம் மார்ச்சு மாதம் 4-ஆம் உ கிடாத்தலைமேட்டில் இயேசுவின் ஆலயப் பிரதிஷ்டையும், அதே வருஷம் செப்டெம்பர் மாதம் 27-ஆம் உ பனம்பள்ளியில் உலக ரட்சகர் கோயில் பிரதிஷ்டையும் நடந்தது.

---

## 5. சீர்காழி

### 1. சீர்காழி சபை.

முந்திய மாயூர வட்டத்தைச் சேர்ந்த ஒரு கிராமமாக மாத்திரம் கணக்கிடப்பட்ட சீர்காழியில் ம. பாக்கியம் ஐயர்

முயற்சியை ஆசீர்வதித்த கர்த்தருடைய கிருபையினாலே சபை பெருகினதால் 1868-ஆம் வருஷமுதல் அது தனிச்சேகரமாயிற்று. அதே வருஷத்தில் எப்ரில் மாதம் வாங்கப்பட்ட மனைக் கொல்லையில் சுதேச குருவுக்காக ஒரு வீடு கட்டினார்கள். அதில் 1871-ஆம் வருஷக் கடைசியிலே பாக்கியம் ஐயர் குடியேறினார். அந்த வருஷம் அடித்த புசலிலே தோட்டம் துறவுகளுக்கும், கூரை வீடுகளுக்கும் வெகுசேதம்.

**Shiyali.**

சேதப்பட்ட ஜெபவீட்டிற்குப் பதிலாக பாக்கியம் ஐயர் ஒரு கற்கட்டடம் கட்டினார். அது 1875-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 15-ஆம் தேதி பிரதிஷ்டையாயிற்று. 1881-ஆம் வரு சீர்காழி வட்டம் இரண்டு சேகரங்களாய்ப் பிரிக்கப்படத் தக்கதான பெருக்கமடைந்தது. 1885-ஆம் வரு மார்ச்சு மாதம் 25-ஆம் தேதி சீர்காழியில் ஒரு பெரிய கோயிலுக்கு அஸ்திபாரம் போடப்பட்டது. இது 1887-ஆம் வருஷம் ஜூலை மாதம் 28-ஆம் உ பிரதிஷ்டையாகி, சீகன்பால்க் ஜுபிலி தெய்வாலயம் எனப் பெயர் பெற்றது. இது காபீஸ் ஐயர் முயற்சியால் ஆரம்பமாகி, விங்கல், ஹேர்பெர்க் ஐயர்மாரால் தொடர்ந்து நடந்து முற்றுப் பெற்றது.

**Z. Jubilee Church.**

இந்தப் புதுக்கோயில் பிரதிஷ்டையாகிற காலத்தில் பள்ளிக்கூட விஷயமாக ஒரு புது முயற்சி செய்யப்பட்டது: ஏற்கனவே அவ்வூரில் ஏற்பட்டிருந்த பென்னிங்டன் ஸ்கூல் என்ற இங்கிலீஷ் பாடசாலையை ம. பாக்கியம் ஐயர் தமது மேல் விசாரணையில் ஏற்றுக்கொண்டார். இதுவே பின்னால் சென்றல் பாடசாலையைச் சீர்காழி கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கு ஆதாரமாயிற்று. 1896-ஆம் வருஷம் தரங்கை சென்றல் ஸ்கூலை சீர்காழிக்கு மாற்றினதை முன்னிட்டு அந்த வட்டத்திற்கு ஒரு ஐரோப்பிய மிசியோனரியை நியமித்தார்கள். முந்த முந்த நியமிக்கப்பட்டவர் C. J. சாந்தகிரேன் சாஸ்திரியார். அவர் சீமைக்குப் போயிருந்த காலத்தில் Th. புளும்ஸ்திராண்டு ஐயர் வேலைபார்த்தார். 1900-ஆம் வரு உண்டான பஞ்சத்தில் வெகுபேர் ஞானஸ்நானம் பெற்றும், மிச்சமானவர்கள் மருள, விழுந்தார்கள். மறுபடியும் சாந்தகிரேன் ஐயர் சீர்காழி வட்ட குருவாயிருந்து, G. ஈசாக்கு ஐயர் உதவியுடன் வேலை

பார்த்து, 1902-ஆம் வருஷம் மதுரைக்கு மாற்றப்பட்டார். குரோசே ஐயர் சீர்காழிச் சபையைச் சிலகாலம் விசாரித்தார்.

**O. R.** ஹந்துமன், **M.** ஷெப்பர், **M.** வன்ஸ்கே முதலிய குருமார்கள் சீர்காழி வட்ட குருமாராயிருந்தது மன்றி சென்றிரல் பாடசாலைக்குத் தலைமை வகித்தார்கள். சபை குருக்களாக சீர்காழியில் நீண்டகாலம் சேவை புரிந்த இந்திய குருமார் T. யோசேப்பு, S. தேவப்பிரசாதம், சா. ஞானமாணிக்கம், கார்ல் சாமுவேல் முதலியோர். தற்போது சபை குருவாகவும், மாணவர் விடுதியின் மானேஜராகவும் இருப்பவர் கனம் W. ஹெல்லிங்கர் ஐயர். சங்கீத வாத்திய வகுப்பொன்று அவருடைய ஆதரவில் சீர்காழியில் நடைபெற்று வருகிறது. ஜர்மனி தேசத்திற்கு அனுப்பப்பட்டு அங்கே சங்கீதக் கலையில் பயிற்சி பெற்று வந்த திரு. C. சாலமோன் என்பார் இவ்வகுப்புக்குப் போாசிரியராயிருந்து நடத்திவருகிறார். O. R. ஹந்துமன் ஐயர் விசாரணையில் திருப்பங்கூரிலே ஒரு கோயில் கட்டப்பட்டு, 1904-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 31-ஆம் தேதி பிரதிஷ்டையாயிற்று. திருப்பங்கூர் இப்போது மாயூர வட்டத்தில் சேர்க்கப் பட்டிருக்கிறது.

---

## 2. சீர்காழி சென்றிரல் ஸ்கூல்.

சீகன்பால்கு சிரேஷ்டர் 'நந்தவனம்' என்று அவர் காலத்தில் பெயர்வழங்கின இடத்தில் தமக்கு ஒரு வாசஸ்தலம் எழுப்பிவைத்திருந்தார். இந்த வீடு தற்காலம் தரங்கை டிரெய்னிங் பாடசாலை சிம்பவுண்டுக்குள் இருக்கிறது. இந்த இடத்தில் அவர் ஒரு தமிழ்ப் பாடசாலையை ஏற்படுத்தி நடத்திவந்தார். இந்த தமிழ்ப் பாடசாலை 1716-ஆம் வருஷம் மிசியோன் ஊழியர்களைத் தயார் செய்யும் பொருட்டு ஏற்பட்ட செமினேரியோடு சேர்க்கப்பட்டது. இந்தப் பாடசாலை பிரெசீர், வால்தர் என்ற பூர்வ மிசியோனரிமார்கள் காலத்தில் மிகவும் சிறப்படைந்து, தமிழ்ச் சுவிசேஷ சபையின் முதல் நாட்டையராகிய ஆரோன், டேனிஷ் கவர்ன்மெண்டில் துவிபாஷிகராகிய தானியேல் பிள்ளை, சுவிசேட கவிராய வேதநாயக சாஸ்திரியார், யேசுதாஸ் அண்ணாவியார் முதலிய அக்காலத்தில் சிறந்த

Central school

மனிதர்களை நன்கு போதித்துக் கீர்த்தியடைந்தது. தமிழ் வாலிபர்களைப் படிப்பித்து ஆளாக்கும் பொருட்டு இந்த நாட்டில் ஏற்பட்ட எந்தப் புரோட்டெஸ்தாந்தப் பள்ளிக்கூடங்களிலும் இதுவே அதிபூர்வமானது.

இந்தப் பாடசாலையில் தமிழ் அறிவு செம்மையாய்ப் புகட்டப்பட்டது மன்றி முத்துக் கோர்த்ததுபோல் கண்ணைப் பகட்டத்தக்க திருந்திய கையெழுத்தும் பயிற்றப்பட்டது. சென்ற நூற்றாண்டின் கடைசியில் டாக்டர் யோன் ஐயர் இந்தத் தமிழ்ப் பாடசாலையுள் இங்கிலீஷ் படிப்பை முதல்வர விட்டார். இவர் இந்த ஆங்கிலோ தமிழ்ப் பாடசாலையைத் திருத்திச் சிறப்பிக்க அரியமுயற்சிகள் செய்தார். அவ்வாறு சிறந்த அந்த ஆங்கிலோ தமிழ்ப் பாடசாலைதான் இக்காலத்துச் சென்றிரல் பாடசாலை முளைத்துக் கிளம்புவதற்கு வித்தாயிருந்தது. 1802-ஆம் வருஷம் தரங்கைக்கு வந்திருந்த சர்போஜி மன்னவன் யோன் ஐயர் பாடசாலையைக் கண்டு வியந்தது மல்லாமல் அவருடன் இரண்டுமணி தேசகாலம் பிரீதிகரமான சம்பாஷணை செய்து களித்ததாகவும் தெரிய வருகிறது. ஆகிலும், அக்காலத்திலும் 19-ஆம் நூற்றாண்டின் முற்பாதியிலும் பாடசாலைகளின் விர்த்தி மிகத் தாழ்ந்த தரத்திலிருந்தது என்பது மறக்கப்படாது. சென்ற நூற்றாண்டின் பிற்பாதியில் லேப்சிக் லுத்தரன் மிசியோனால் மேற்படி பூர்வ பாடசாலை கைதூக்கப்பட்டு, ஆதரிக்கப்பட்டபின்பே அது நாளொரு வண்ணம் அதி சீக்கிரத்தில் நல்ல விர்த்தியடையத் துவக்கி, தற்காலத்திலுள்ளபடி மேன்மையடைந்தது. இந்தச் சங்கத்தின் முந்தின மிசியோனரியாகிய சீனியர் கோர்தேஸ் ஐயர் 1842--ஆம் வருஷம் பிறையாற்றில் ஏற்படுத்தின செமினேரி 1850—ஆம் ௵ தரங்கையிலிருந்த மேற்படி ஆங்கிலோ தமிழ்ப் பாடசாலையோடு சேர்க்கப்பட்டு, அங்கே நல்லமாதிரியாய்த் தேறியிருந்தது. 1856-ஆம் வருஷம் இந்த ஆங்கிலோ தமிழ்ப் பாடசாலை சர்க்கார் உபகாரம் பெறும் பொருட்டு சர்க்கார் விசாரணைக்கு ஒப்புவிக்கப்பட்டது. இந்த நிலைமையில் 1858-ஆம் வருஷம் அந்தப் பாடசாலையை வி. ஸ்தேவின் ஐயர் ஒப்புக்கொண்டு நடத்திவந்தார். கல்வியை அபிவிர்த்தி செய்வதிலும் பாடசாலையின் தரத்தைத் திருத்தி உயர்த்துவதிலும் இந்த நிபுணன் பெருஞ்சாமர்த்தியங் காட்டி உழைத்தார். அவருக்குப் பின் அந்தப் பாடசாலையை நடத்தும் பொருட்டு வந்த E. ஷெப்பர் ஐயர் 1864-ஆம் வருஷம் முதல் அவரைப்

போலவே யூகியும் புத்தி நுட்பமுடையவருமாயிருந்து இந்தப் பாடசாலையை மேலும் மேலும் திருத்தி, 1867-ஆம் வருஷம் மெற்றிரிக்குலேஷன் பரீட்சைக்கு இரண்டு பெயரை அனுப்பினார். அவ்விருவரும் பரீட்சையில் தேறினது இந்தப் பள்ளிக்கூடத்துக்குக் கிடைத்த கித்தாப்பு. நாளது தேதிவரையில் மேற்படி சென்றிரல் பாடசாலை நூற்றுக்கதிகமான வாலிபர்களை மெட்ரிக்குலேஷன் பரீட்சையில் தேற்றியிருக்கிறது. அவர்களில் அநேகர் நமது சபை வாலிபர்கள். 1883-ஆம் வருஷம் முதல் 1888-ஆம் வருஷமட்டும் மேற்படி பாடசாலை இரண்டாந்தரக் காலேஜாக உயர்த்தப்பட்டு சென்னைச் சர்வகலாசாலை F. A. பரீட்சைக்கு 7 பெயரை அனுப்பித் தேற்றிவிட்டது. அதன் பின் மாணாக்கர் குறைவினால் காலேஜ் வகுப்புகள் மூடிவிடப்பட்டன. பாடசாலை நன்னெறிகளையும் சிறந்த ஒழுங்குகளையும் வழுவாது கடைப்பிடித்து நடத்துந் திறமையுள்ள வித்தியானுகூலரான E. ஷெப்பர் ஐயர் 1890-ஆம் வருஷம் பரம இளைப்பாறுதலுள் பிரவேசித்த பின்பு, பல ஐயர்மார் அவர் கிழித்த கோட்டிலே சற்றேறத்தாழ நின்று இந்தப் பள்ளிக்கூடத்தை நடத்தி வந்திருக்கிறார்கள். இதன் தலைமை உபாத்திமார்களில் முக்கியமானவர்கள் (Charles Hensman என்ற) தம்புப்பிள்ளை, அ. பாக்கியம்பிள்ளை, மா. தே. மாசிலாமணிபிள்ளை என்பவர்கள். இந்தப் பாடசாலை இருப்புப்பாதை சம்பந்தமான ஒரு இடத்தில் இருப்பது உசித மெனப் பெரியோர் தீர்த்து அதைச் சீர்காழிக்குக் கொண்டுபோக உத்தரவு செய்தார்கள்.

சீர்காழியில் புதிதாய்க் கட்டப்பட்ட சிறந்த பாடசாலைக் கட்டடம் 1896-ஆம் ௵ ஜுன் மாதம் 24-ஆம் ௳ பிரதிஷ்டையாகவே, அன்று முதல் சென்றிரல் பாடசாலை சீர்காழி பென்னிங்டன் பாடசாலையோடு சேர்க்கப்பட்டு, வேலை நடந்தேறி வருகிறது. இப்பாடசாலையின் தலைமை ஆசிரியராக நீண்ட காலம் உழைத்தவர்கள் கனம் D. தேவப்பிரியம் ஐயர், திரு. J. E. வேதநாயகம், M. D. மாணிக்கம், M. A. வேதநாயகம், G. சாலமோன், D. அபிஷேகநாதன், A. N. தேவநேசன், G. மதுரம் மார்ட்டீன் என்போர்.

## 6. கும்பகோணம்.

தரங்கை மிசியோன் ஆரம்பகாலத்தில் ஆரோன் ஐயர் முதலியவர்களின் பிரயாசையால் இங்கே அநேகர் ஞானஸ்நானம் பெற்றார்கள். 1735-ஆம் வருஷம் 35 ஆத்துமாக்கள் உள்ள ஒரு சிறிய லுத்தரன் சபை கும்பகோணத்தில் இருந்தது. கி. பி. சுவார்ச் ஐயர் காலத்தில் வெகுவாய் விர்த்தியடைந்த இந்தச் சபையும் சுற்றுப்புறங்களில் இருந்த பெரிதும் சிறிதுமான சபைகளும் பிற்காலத்தில் சுவி. பிரபலிய சங்கத்தார் விசாரணைக்குள்ளாயின. பிறகு இவ்வூரில் வேலை செய்யத் தொடங்கினவர்கள் லண்டன் மிசியோன் சங்கத்தார். அச்சங்கத்தின் ஐயர்மாருள் தேன்வாயன் எனப் பெயர் பெற்ற கிம்மோ ஐயர் இந்துக்களுக்குச் சுவிசேஷம் பிரசங்கிப்பதில் வைராக்கிய புருஷராய் விளங்கினார்.

**Kumbakonam.**

1844-ஆம் வருஷம் சர்ச்சு மிசியோன் சங்கத்தார் மாயூரத்தை விட்டதுபோல் 1852-ஆம் ௵ லண்டன் மிசியோன் சங்கத்தார் கும்பகோணத்தை விட்டு விட்டார்கள். அவர்கள் விசாரணைக்குள்ளிருந்த கிறிஸ்தவர்கள் நமது சபையில் சேர மனதாயிருந்தும், அச்சங்கத்தார் தங்கள் கட்டடங்களை லுத்தரன் மிசியோனுக்கு விற்கப்படாதென்று சொல்லிவிட்டார்கள். லண்டன் மிசியோன் சங்கத்தார் கைவிட்ட 71 கிறிஸ்தவர்களை 1852-ஆம் வருஷம் மார்ச்சு மாதம் ஓக்ஸ் ஐயர் லுத்தரன் சபையில் ஏற்றுக்கொண்டு, மாயூரம் வட்டத்தோடு சேர்த்து விசாரணை செய்து வந்தார். அப்பொழுது கும்பகோணத்தில் உள்ள நமது சபைக்குத் தூண்போல் இருந்தவர் சின்ன கோர்ட்டு சிரஸ்தேதார் கிறிஸ்தியான் சாந்தப்பபிள்ளை.

1856-ஆம் ௵ மார்ச்சு மாதம் 1-ஆம் ௳ கும்பகோணம் பிரத்தியேசமான சேகரமாக்கப்பட்டது. அப்பொழுது அங்கிருந்த சபையார் தொகை 87. மாயூரத்தில் வசித்த மைஷல் (Meischel) ஐயர் அதன் முதல் குருவானார். அந்தக் காலத்தில் ஆராதனை பேட்டைத் தெருவில் சிலகாலம் உபதேசியார் வீட்டிலும், நெடுநாளாக சாந்தப்ப பிள்ளை வீட்டிலும் நடந்தேறி வந்தது. கும்பகோணம் வட்டத்தைச் சேர்ந்த அம்மன் பேட்டையிலும் நெடுவாயிலும் 2 சீடர்கள் ஆராதனை நடத்தினார்கள். ஐரோப்பிய குருவுக்கான குடியிருப்புத்தலம் 1860-ஆம் ௵

வாங்கப்பட்டது. 1867-ஆம் வருஷம் அங்கே J. வன்ஸ்கே ஐயர் வாசஞ் செய்யத் துவக்கினது முதல், கும்பகோணத்தில் சுவிசேஷ பிரசங்கம் முன்னிலும் அதிகமாய்த் தொனிக்க இடமுண்டாயிற்று. சற்றேறக் குறைய 11 வருஷக் காலம் அவருடைய விசாரணையில் இருந்தபின், கும்பகோணம் கேரிங் ஐயரால் ஒப்புக்கொள்ளப்பட்டது. அப்பொழுது அவர் யேற்காட்டுச் சேகரத்தையும் சேர்த்துப் பார்த்தார். 1882-ஆம் ஷ அவர் இரங்கூனுக்கு மாற்றப் பட்டதால் கும்பகோண வட்டம் மறுபடியும் J. வன்ஸ்கே ஐயரின் விசாரணைக்குள்ளாகி 1887-ஆம் வருஷமட்டும் அவர் விசாரணையில் இருந்தது. அந்த வருஷக் கடைசியில் அந்த வட்டத்து கிறிஸ்தவர்கள் தொகை 381. பிறகு அந்த வட்டத்தை கேக்ஷிங் ஐயர் ஒப்புக்கொண்டார். அவரது விசேஷித்த முயற்சியாலும் பிரயாசையாலும் அங்கே கட்டப்பட்ட கோயில் 1904-ஆம் ஷ ஜூன் மாதம் 15-ஆம் உ பிரதிஷ்டையாகி திருச்சிலுவைக் கோயில் என்கிற பெயர் பெற்றது. அவருக்குப் பின் Beythan, Ellwein, Wagner, K. Heller என்ற ஜர்மன் குருமாரும், P. மாணிக்கம், M. யோசேப்பு, I. தேவசகாயம், G. தானியேல், G. G. ஆச்சரியம், S. சாலமோன், D. D. ரேனியுஸ், J E. ஜூபிலி, சத்தியமூர்த்தி, சவரிநாதன், D. ஜேக்கப் என்ற இந்திய குருமாரும் இங்கே உழைத்திருக்கிறார்கள். குமாரி Frölich மிசியம்மாள் பெண்கள் நடுவே சிறந்த சேவை புரிந்திருக்கிறார்கள்.

இவ்வட்டத்தைச் சேர்ந்த கஞ்சனூரில் 1937-ஆம் ஆண்டிலும், விட்டலூரில் 1947-ஆம் ஆண்டிலும், 1953-ஆம் ஆண்டில் வலங்கைமான், புதுப்படையூர் என்னும் கிராமங்களிலும் புது ஆலயங்கள் கட்டி பிரதிஷ்டை செய்யப்பட்டன. கும்பகோண வட்ட சபையில் இப்போது ஆத்துமாக்களின் தொகை 815.

---

## 7. நாகப்பட்டணம், திருவாரூர்.

1859-ஆம் வருஷம் ஆரம்பித்த தென் இந்தியா இருப்புப் பாதை வேலையை முன்னிட்டு நாகப்பட்டணத்திற்கு மற்ற சேகரங்களிலிருந்து லூத்தரன் கிறிஸ்தவர்கள் வந்து குடியேறினதால் அவ்விடத்தில் நமக்குச் சபையுண்டாயிற்று. அங்கே

மிஷியோனூழியர் முதல்முதல் நியமிக்கப்பட்டது 1862-ஆம் வருஷத்தில். ரயில்வே கம்பவுண்டுக்குச் சமீபமான ஒரு குடியிருப்புத்தலத்தை 1863-ஆம் ௵ ஆகஸ்டு மாதம் வாங்கி, அதில் ஆராதனை நடத்தப்பட்டு வந்தது.

**Nagapattinam.** சில காலம் தரங்கையோடும், சில காலம் தஞ்சையோடும் சேர்த்து விசாரிக்கப்பட்ட நாகைச் சபைக்கு, ஸ்தல குருவாக முதல் முதல் நியமிக்கப்பட்டவர் தேடர்லேன் ஐயர். அவர் அதை 1864-ஆம் ௵ 15-ஆம் தேதி ஒப்புக்கொண்டார். அவ்வருஷ முடிவில் அந்த வட்டத்துச் சபையார் தொகை 197. அவருக்குப்பின் சிலகாலம் ஸ்தேலின் ஐயர் அந்தச் சபையின் குருவாயிருந்தார். 1866-ஆம் வருஷம் ஜூலை மாதம் ஸ்தேலின் ஐயர் சீமைக்குப் போக, மயர் ஐயர் அந்த வட்டத்தை ஒப்புக்கொண்டார். அவர் வேலை பார்த்த ஐந்து வருஷ காலத்தில் சபை விருத்திக்கான பல நல்ல ஏற்பாடுகள் நடந்தது மன்றி, ஒரு புதுக் கோயில் கட்டுவதற்கும் ஒரு சபைக் கூட்டத்தில் ஒழுங்கு செய்யப்பட்டது. அதுவரையில் ஒரு வீட்டில் ஆராதனை நடந்து வந்தது. சபை விருத்தி விஷயத்தில் ஆரம்பமுதல் துணை நின்றவர் கனகப்பன் ஐயாப்பிள்ளை.

மயர் ஐயர் சீமைக்குப் போயிருக்கையில் புதுக்கோட்டையில் வசித்த கால் ஐயர் சில காலமும் வன்ஸ்கே ஐயர் சில காலமும் இச்சபையை விசாரித்து வந்தார்கள். மயர் ஐயர் திரும்பியபின் அவரது விசேஷித்த முயற்சியாலும், ஐயாப்பிள்ளையின் பிரயாசையாலும் சபைச் செலவில் ஒரு கோயில் கட்டப்பட்டு 1872-ஆம் ௵ ஏப்ரில் மாதம்

**Trinity Church.** 3-ஆம் தேதி பிரதிஷ்டையாகி, திரியேகநாதாலயமெனப் பெயர் பெற்றது. பிரதிஷ்டை காலத்தில் அங்கே குருவாயிருந்தவர் பைசன்ஹெர்த்ஸ் ஐயர். அவருக்குப்பின் குரூபெர்ட் ஐயர் அங்கே வேலை பார்த்தார். ஆசீர்வாதம், பெர்க்ஸ்டெட் என்ற ஐயர்மார் விசாரணையிலும் இச்சபை சிலகாலம் இருந்தது. 1878-ஆம் வருஷ முதல் 1888-ஆம் வருஷ மட்டும் நாகைச் சபைக்கு ஸ்தலகுருவாயிருந்தவர் ஜே. தா. தாவீது ஐயர். அவர் காலத்தில் கீரைக் கொல்லைத் தெருவில் பள்ளிக்கூடம் கட்டப்பட்டது. நாகையில் முகாமைச் சங்கம் ஏற்பாடானது 1884-ஆம் வருஷம். சில காலம் E. ஷெப்பர் ஐயரும், சிலகாலம் பம்பரீன் ஐயரும்

நாகைக்கு மேல்விசாரணைக்காரராய் இருந்தார்கள். பம்பரின் ஐயர் முயற்சியால் கல்லறைத் தோட்டம் கிடைத்தது. 1889-ஆம் ஹு முதல் மூன்று வருஷகாலம் G. ஈசாக்கு ஐயர் நாகப்பட்டணத்தின் சபை குருவாயிருந்தார்.

1892-ஆம் வருஷம் மோன் ஐயர் ஸ்தலகுருவாகி 3 வருஷம் வேலைபார்த்து நமது மிசியோன் சம்பந்தத்தை விட்ட பின் 1894-ஆம் வருஷம் பிரேளிக் ஐயர் சபை குருவானார். அவர் சபையை விசாரித்து வந்த ஐந்துவருஷ காலத்தில் முன் பலமுறையும் நேரிட்ட அசமாதானம் நீங்கி, ஒருவித அமைதலுண்டாயிருந்தது. இவருக்குப்பின் கொஞ்சக்காலம் வேஷணர் ஐயரும், அவருக்குப் பிறகு யேகர் ஐயரும் அவருக்குப் பின் எல்வைன் ஐயரும் நாகைச் சபையை விசாரித்தார்கள். தமிழ் பாண்டித்தியமுள்ள எல்வைன் ஐயர் எழுதிய திருச் சரித்திரப் புத்தகங்கள் இந்நாள் வரையிலும் நமது பாடசாலை களில் உபயோகமாகி வருகின்றன. பிறகு இந்திய குருமாரே நாகையில் குருக்களாயிருந்து சபையைக் கண்காணித்து வரு கிறார்கள். அவர்களில் முக்கியமானவர்கள்: D. தாவீது, V. ஆசீர்வாதம், R. தேவசகாயம், V. தேவவரம், D. எபனேசர், B. கார்ல் சாமுவேல், J. W. அப்பாவு, P. மாணிக்கம், D. A. ஜேக்கப் என்ற ஐயர்மார்கள்.

நாகப்பட்டணத்துக்கடுத்த கிளைச்சேகரம் திருவாரூர். இதில் ஒரு ஜெபவீடு கட்ட E. ஷெப்பர் ஐயர் விசாரணையில் 1880-ஆம் வருஷம் ஒரு சிறு மனைக்கட்டு வாங்கப்பட்டது.

Tiruvalore.

1889-ஆம் வருஷமுதல் 1905-ஆம் வருஷ முடிவு மட்டும் J. D. தாவீது ஐயர் திருவாரூரில் வாசஞ்செய்து, அதிலும், அதற்குச் சமீபத்திலுமுள்ள சபைகளை விசாரித்து இந்துக்களிடம் சுவிசேஷ வேலை நடத்துவதைத் தமது முக்கிய வேலையாகச் செய்துவந்தார். அவருடைய பிரயாசையால் திருவாரூரில் சுவிசேஷ பிரசங்கத்திற்காக இரட்சகர் மடமென்ற ஒரு ஜெப வீடும் (1899) சுதேச குருவின் குடியிருப்புத்தலமும் (1901) சவதரிக்கப்பட்டது. இப்போது திருவாரூர் சபை நாகையி லுள்ள குருவின் விசாரணைக்குள்ளிருக்கிறது.

---

## 8. தஞ்சாவூர்.

"இராஜ குரு"வெனப் பெயர்பெற்ற தகப்பன் கி. பி. சுவார்ச், கோலோபென்ற ஐயர்மாரால் சுவி. லுத்தரன் திருச்சபையின் போதனை பெற்றவர்களாகிய தஞ்சைச் சபையார் 1826-ஆம் வருஷம் ஆங்கில மிசியோன் விசாரணைக்குட்பட்டபின் அவர்களில் பலருக்கு லுத்தரன் சபை நாட்டம் இன்னம் இருந்ததால், பூர்வ பிதாக்களைப்போல் போதிக்கும் கர்மானிய குருமார் புதிதாய் வந்து மிசியோன் வேலை செய்வதை அறிந்தபோது, இந்தப் புதிய மிசியோனில் சேரவேண்டுமென்கிற அவா அதிகரித்தது.

Tanjore.

1849-ஆம் வருஷம் தஞ்சாவூர் சபையாரில் பலர் மேற்கூறிய விருப்பமடங்கிய விண்ணப்பத்தோடு தரங்கைக்கு வந்தார்கள். அவர்கள் காரியாதிகளை நேரில் பார்த்துவரக் கிரெம்மர் ஐயரும், வேறிரண்டு ஐயர்மாரும், கும்பகோணம், திருவையாறு, தஞ்சாவூர் என்ற இடங்களுக்குப்போய் விண்ணப்பக்காரர்களைக் கண்டுபேசி, அவர்கள் லுத்தரன் சபையின் விசுவாச அறிக்கைகளை ஒப்புக்கொண்டு, கோயில் பள்ளிக்கூடங்களின் ஆதரிப்புக்கு உதவிசெய்கிற பட்சத்தில் ஏற்றுக்கொள்வதாகத் தெரிவித்தார்கள்.

ஏற்கனவே மாயூரத்திலே லுத்தரன் சபையில் சேர்ந்து வேலை பார்த்துவந்த தஞ்சைத் திருச்செல்வம் உபாத்தியார் குடும்பசகிதம் 1850-ஆம் வருஷம் தஞ்சாவூருக்குப் போனபோது, இராஜேந்திரம் உபாத்தியார் குடும்பத்தோடு சேர்ந்து, லுத்தரன் முறைமைப் பிரகாரம் தன் வீட்டில் ஆராதனை வைத்துவந்தார். 1851-ஆம் வருஷம் ஜுலை மாதம் 9-ஆம் தேதி வொல்பையர் அங்கே ஆராதனைவைத்து இரண்டு பிள்ளைகளை ஞானஸ்நானம் பண்ணுவித்து, ஐந்து பேருக்கு நற்கருணை பரிமாறினார். ஆராதனைக்கு வந்தவர்கள் 36 கிறிஸ்தவர்கள். அக்டோபர் மாதம் 20-ஆம் தேதி ஞானேந்திரம் பிள்ளையும், அவருடைய மாமனார் (சிவாஜி ராஜா உபாத்தியாராகிய) சுவிசேஷ முத்துப்பிள்ளையும் விண்ணப்பமெழுதி லுத்தரன் சபையிற் சேரவேண்டுமென்கிற தங்கள் விருப்பத்தைத் தெரிவிக்க, 1852-ஆம் வருஷம் ஜனுவரி மாதம் யோ. மி. கி. சுவார்ச் ஐயர் தஞ்சாவூருக்குப்போய் ஒரு வாரம் ஜனங்களுக்கு

ஆயத்தபோதனை செய்து, 18-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமையில் சுவிசேஷமுத்துப்பிள்ளை வீட்டிலே தேவாராதனை நடத்தி ஐம்பது பேருக்குக் கர்த்தருடைய இராப்போசனம் கொடுத்தார். அதே வருஷத்தில் வேறுபலரும் ஏற்றுக்கொள்ளப்பட்டதால் அவ்வருஷம் தஞ்சை வட்டத்துக் கிறிஸ்தவர்களின் தொகை 108. அவர்களை விசாரிக்கும் வேலை ஞானேந்திரம் உபதேசியாருக்குக் கொடுக்கப்பட்டது. ஆராதனை சுவிசேஷமுத்துபிள்ளை வீட்டைச் சேர்ந்த அவருக்குச் சொந்தமான ஒரு கூரைக் கட்டடத்தில் நடந்துவந்தது. அதிலே சந்நியாசி உபாத்தியார் என்னப்பட்ட கிறிஸ்தியான் உபாத்தியார் பள்ளிக்கூடம் நடத்திவந்தார். 1852-ஆம் வருஷத்திலேயே பூதலூர் சபை சேர்ந்தது. வருஷா வருஷம் சபையின் ஆத்துமாக்கள் கூடுதலானதால் அந்த வட்டத்துக் கிறிஸ்தவர்களின் தொகை 1854-ஆம் வருஷம் 257-உம், 1856-இல் 443-உம் ஆயிற்று.

இவ்வாறு பெருகின சபையை விசாரிப்பதற்கு ஸ்தல குரு அப்பொழுது இருந்ததில்லை. 8 வருஷகாலமாய் J.M.N. சுவார்ச் ஐயர் ஒருவராய் மேற்கு வட்டங்கள் என்னப்பட்ட தஞ்சாவூர், திருச்சினப்பள்ளி, புதுக்கோட்டை, கோயமுத்தூர் என்ற வட்டங்களில் அலைந்து திரிந்து விசாரணை செய்து வந்தார்.

குருவானவரின் குடியிருப்புக்காக 1858-ஆம் வருஷம் நொவம்பர் மீ 1-ஆம் உ ஒரு சிறுவீடு வாங்கப்பட்டது. அதில் முதல் முதல் குடிபுகுந்தவர் ரிடேன் ஐயர். அவர் அவ்வருஷம் டிசம்பர் மாதமுதல் அடுத்த வருஷம் ஆகஸ்டு மாதம் வரையில் அதில் இருந்தார். மற்றொரு புதிய வீடு கட்ட ஆரம்பித்தவுடனே அவர் திருச்சினப்பள்ளிக்குப் போனார்.

1860-ஆம் வருஷம் தஞ்சாவூர் தனிச் சேகரமாக்கப்பட்டு அக்டர்லோனி ஐயர் விசாரணையில் வைக்கப்பட்டது. அந்த ஸ்தாபத்தில் இருந்த சபையார் தொகை 476. வெளிக் கிராமங்கள் 14. அந்தப் போதகர் ஆராதனை நடப்பதற்கும், பள்ளிக்கூடம் வைப்பதற்கும் மிசியோன் கம்பவுண்டில் ஒரு கட்டடம் கட்டினார். அது 1860-ஆம் வருஷம் ஆகஸ்டு மீ 30-ஆம் தேதி பிரதிஷ்டையாயிற்று.

Ouchterlony
I. Stationarius.

பழைய மிசியோனரியாகிய ஹொல்த்ஸ்பெர்க் (Holtz berg) ஐயர் முதலியவர்கள் புதுப்பட்டியில் கட்டியிருந்த ஒரு ஜெபவீடு 1861-ஆம் வருஷத்திலும், பள்ளியக்கிராரத்தில் இருந்த ஒரு ஜெபவீடு அடுத்த வருஷத்திலும் வாங்கப்பட்டது.

அணைக்காடு, குடிக்காடு, விஷ்ணுபட்டி, திருப்பூந்திருத்தி, திருவையாறு, பட்டுக்கோட்டை யென்ற இடங்களில் சபைகள் சேரச்சேர புதுமனைக்கட்டுகள் வாங்கி, புதிதாக ஜெப வீடுகள் பள்ளிக்கூடங்களைக் கட்டினார்கள்.

1868-ஆம் வருஷம் தஞ்சாவூரில் பெண் பாடசாலை கட்டி அடுத்த வருஷம் ஜூன் மீ 20-ஆம் வ புதிய பெரிய கோயில் கட்டும்படி அஸ்திபாரம் போடப்பட்டது.

**Church built.** அதைக் கட்டுவதில் அக்டர்லோனி ஐயர் வெகு பிரயாசப்பட்டு 1871-ஆம் வருஷம் முடித்தார். தேற்றரவாளன் ஆலயம் என்னப்பட்ட அந்தக் கோயில் அவ்வருஷம் ஏப்ரில் மீ 26-ஆம் வ பிரதிஷ்டை செய்யப்பட்டது.

அக்டர்லோனி ஐயர் (சீமைக்குப் போயிருந்த காலந்தவிர) 1880-ஆம் வருஷமளவும் தஞ்சாவூர் சபையை விசாரித்து வந்தார். அந்த வருஷக் கடைசியில் இருந்த தஞ்சாவூர் வட்டக் கிறிஸ்தவர்கள் (அணைக்காடு உள்பட) 1030. அக்காலத்தில் தஞ்சைச் சபையில் உழைத்த இந்திய குருமாரில் நல்லதம்பி ஐயரும், ஞானேந்திரம் ஐயரும் விசேஷித்தவர்கள்.

அக்டர்லோனி ஐயருக்குப்பின் தஞ்சாவூர் சபையை விசாரித்தவர்களில் அதிக காலமாய் அங்குழைத்தவர்கள் பம் பரீன், பேஸ்லர் என்ற ஐயர்மார். சபை பரம்பவும், திருந்தவும், பள்ளிக்கூடங்கள் விர்த்தியாகவும் இந்த ஐயர்மார் பட்ட பிரயாசை அதிகம். இவர்களுக்குப்பின் ஷாட், ரீகர், குளுகே, க்லோட்சே, ரைகார்ட், M ஷெப்பர், R. ஹொப்மன், பிரேலிக் முதலியவர்கள் அங்கே வேலைபார்த்தார்கள். தஞ்சைச் சபையில் உழைத்த இந்திய குருமாரில் பின்சொல்லப்பட்டவர்கள் முக்கியமானவர்கள்: V. கிறிஸ்தியான், M. ஆசீர்வாதம், S. D. பொன்னப்பன், J. D. தாவீது, D. தாவீது, J. A. ஞானபிஷேகம், C. S. பாக்கியம், D. தேவப்பிரியம், A. M. தேவாச்சரியம், A. C. செபஸ்தியான், G. தானியேல், G. ஜான் டேவிட், T. T. தானியேல், P. மாணிக்கம், S. துரைக்கண் என்போர்.

தஞ்சாவூர் பெண் பாடசாலைக்காகவும் அதை மேல் விசாரணை செய்யும் ஐரோப்பிய தியாக்கோனி அம்மாள் குடியிருப்புக்கென்றும் பிரத்தியேகமான ஒரு கட்டடம் கட்டப்பட்டு 1900-ஆம் ௵ ஏப்ரில் ௴ 29-ஆம் உ பிரதிஷ்டையாயிற்று. அதில் இப்போது தியாக்கோனிமார் விடுதியும், சுகநிலையற்ற, பெலவீனரும், வேலை செய்ய முடியாதவர்களுமான பெண்களுக்கென "பெதேஸ்தா" என்ற தாபரஸ்தலமும் ஏற்பட்டிருக்கின்றன. R. ஹொப்மன் ஐயர் முயற்சியால் கட்டப்பட்ட ஆண் பாடசாலைக் கட்டடத்தில் இப்போது பெண்களின் உயர்தர பாடசாலை (Girls' Christian High School) நடந்து வருகிறது. E. ஊல்சன் மிசியம்மாள் இப்பாடசாலைக்கு நீண்ட காலம் தலைமைவகித்து அதை உன்னத நிலைமைக்குக் கொண்டு வந்தார்கள். மாணவிகளின் விடுதியை மேற்பார்வை செய்வதில் M. ஜான்ஸன் மிசியம்மாள் அவர்களுக்கு வலது காம்போல் விளங்கினார்கள். இப்போது அப்பாடசாலையில் தலைமை வகிப்பவர் குமாரி சு. சின்னப்பா என்பவர். இவர்கள் இங்கிலாந்து தேசத்திற்கும் போய் போதனாமுறையில் விசேஷித்த பயிற்சி பெற்றவர்கள். ஆண் பிள்ளைகளுக்கென உயர்தர ஆரம்ப பாடசாலையொன்றும் சபை குருவின் மேற்பார்வையின் கீழ் ஒழுங்காய் நடந்துவருகிறது.

தியாக்கோனிமார் ஊழியத்தைத் தொடங்கின வீதியா வேதநாயகம் என்ற சகோதரி சீமை தேசம் சென்று அவ்வூழியத்திற்கென விசேஷித்த பயிற்சி பெற்று தியாக்கோனிமார் விடுதிக்கு தலைமைத் தாயாராக இருந்து தியாக்கோனிமார் வகுப்புகளை நடத்தி அதினால் இவ்வூழியத்தை நிலைப்படுத்தினார்கள். இதன் கிளையாக பட்டுக்கோட்டையிலும் "பெத்லகேம்" என்ற அனாத பிள்ளைகளின் விடுதியொன்றும் நடந்து வருகிறது. இவ்வூழியம் இன்னும் பரம்பி செழித்தோங்க நமது சபைகளின் உற்சாகமான உதவி தேவை. கல்வியில் தேறிய தன்னலம் பாராட்டாத பெண்கள் இன்னும் இதில் சேருவது அவசியம்.

---

## 9. திருச்சினாப்பள்ளி, மேட்டுப்பட்டி.

லைப்சிக் மிசியோன் இத்தேசத்தில் வேலைசெய்ய வருமுன் திருச்சினாப்பள்ளியில் இருந்த சுவிசேஷசபையை லுத்தரன் குரு

வாகிய கி. பி. சுவார்ச் ஐயர் ஸ்தாபித்து, போலே ஐயர் (1778—1818) வளர்த்தாரென அறிவோம். அச்சபையார் 1826-ஆம் வருஷமளவும் லுத்தரன் சபை முறைமைப்படி ஆராதனை செய்து, லுத்தரன் ஞானப்பாட்டுகளைப் பாடி, லுத்தரன் ஞானோபதேசத்தைப் படித்து வந்தார்கள். அந்த வட்டாரத்துச் சபைகளை ஒப்புக்கொண்ட ஆங்கிலேய ஐயர்மார் லுத்தரன் ஆராதனை முறைமையை மாற்றி, பாவசங்கீர்த்தன முறைமையை ஒழித்து, தங்கள் சபை முறைமைப்படி ஆராதனை செய்யத் தொடங்கினபொழுது திருச்சிக் கிறிஸ்தவர்களில் அநேகர் தாய்ச் சபையாகிய லுத்தரன் சபையை நினைத்து அதன்பேரில் கவனமுள்ளவர்களாய் இருந்தார்கள். லெப்சிக் மிசியோன் ஐயர்மார் வருகையை அறிந்தவுடனே அவர்களில் சிலர் ஒரு உபதேசியார் மூலமாய்த் தங்கள் விருப்பத்தை 1850-ஆம் வருஷம் ஜனுவரி மீ புதுக்கோட்டைக்கு வந்த வொல்ப் (Wolff) ஐயருக்குத் தெரிவித்தார்கள்.

**Trichinopoly.**

தெய்வகதியாய் அக்காலத்தில் டிரெக்தர் கிரவுல் சாஸ்திரியார் (Dr. Graul) இத்தேசத்திற்கு வந்திருந்தார். 1850-ஆம் வருஷம் மே மாதம் 13-ஆம் தேதி கூடின ஐயர்மார் அவரையும் வைத்துக்கொண்டு, வேறு சபைகளிலிருந்து நமது சபையில் சேரமனதாயிருக்கும் கிறிஸ்தவர்களைக் குறித்துச் சில முக்கிய தீர்மானங்களைச் செய்தார்கள். ஜாதி வித்தியாச முகாந்தரத்தினால் அல்ல, லுத்தரன் சபையின் போதகத்தின் மேல் பிரியப்பட்டவர்களாய் வந்து, அதன் அறிக்கைகளுக்கும் முறைமைகளுக்கும் தங்களைக் கட்டுப்படுத்தும் பேர்களைமாத்திரம் சேர்க்கவேண்டுமென்பது அத்தீர்மானங்களின் சாரம்.

1850-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் வொல்ப் ஐயர் புதுக்கோட்டைக்கு மறுபடியும் போனபொழுது, முறையே இங்கிலீஷ் சபையாரான நாலு குடும்பத்தாரும், ரோமான் சபையாரான இரண்டு குடும்பத்தாரும் கையொப்பமிட்ட இரண்டு விண்ணப்பங்கள் அங்கே வந்திருந்தன. இது விஷயத்தை நேரில் விசாரித்துப் பார்க்கும்படி ஐயர் திருச்சிக்குப் போனார். தரங்கன்பாடி தஞ்சாவூர் கிறிஸ்தவர்களின் வமிசத்தாரான மூன்று குடும்பத் தலைவர்கள் தாங்கள் இங்கிலீஷ் சபையை விட்டுத் தங்கள் தாய்ச் சபையான லுத்தரன் சபைக்கு வருவதாகத் தெரிவித்தார்கள். அவர்கள் மறுபடியும் தீர்க்கா

லோசனை செய்து மறுபடியும் கான்பரான்ஸ் கூட்டத்தாருக்கு விண்ணப்பம் எழுதும்படி அவர்களுக்கு ஐயர் புத்தி சொன்னார்.

அந்த விண்ணப்பம் வந்தபின் செப்டெம்பர் மீ 20-ஆம் வ. கோர்தேஸ் ஐயர் கிரவுல் சாஸ்திரியாரோடு திருச்சிக்குப் போய், விண்ணப்பக்காரர்களை இங்கிலீஷ் குருவுக்கு முன்னிலையில் வைத்துக்கொண்டு பேசினபின் 29-ஆம் வ. ஞாயிற்றுக்கிழமை அவர்களை லூத்தரன் சபையில் ஏற்றுக்கொண்டார். அப்பொழுது ஏற்றுக்கொள்ளப்பட்டவர்கள் 14 பேர். இதுவே திருச்சியில் இப்பொழுது இருக்கும் லூத்தரன் சபையின் ஆரம்பம்.

1851-ஆம் ஸு முதல் 1859-ஆம் வருஷமளவும் திருச்சினாப்பள்ளி வட்டம் மற்ற மேற்கு வட்டங்களோடு சேர்த்து சுவார்ச் ஐயரால் விசாரிக்கப்பட்டது. அவர் 1854-ஆம் வருஷம் திருச்சியில் குடியேறினார். அவர் மேற்கு வட்டங்களை ஒழுங்குப்படுத்தி விர்த்திக்குக் கொண்டுவர வெகுவாய் பிரயாசப்பட்டார். 1859-ஆம் வருஷக் கடைசியில் திருச்சி வட்டத்துக் கிறிஸ்தவர்களின் தொகை 590.

J. M. N. Schwarz.

சுவார்ச் ஐயர் மாயூரத்துக்கு மாற்றப்பட்ட பின்னும் திருச்சினாப்பள்ளி அவருடைய விசாரணையில் சிலகாலம் இருந்தது. அவருக்குப்பின் 1866-ஆம் வருஷ மத்திவரையில் ஐரோப்பியரில் நொர்லின், வன்ஸ்கே என்ற ஐயர்மாரும், இந்தியர்களில் ஆ. ம. சாமுவேல், சாமிதாசன், ஞானேந்திரம் என்ற ஐயர்மாரும் திருச்சியில் வேலை செய்தார்கள்.

1866-ஆம் வருஷம் ஜூன் மாதம் 8-ஆம் தேதி முதல் அந்த வட்டம் R. ஹாந்துமன் ஐயர் விசாரணைக்குள்ளாயிற்று. அவர் கொள்ளிட நதியை நடுவெல்லையாக வைத்து திருச்சி வட்டத்தை வடக்கு வட்டம் தெற்கு வட்டமென இரண்டு பிரிவுகளாய்ப் பிரித்தார். மேட்டுப்பட்டியை மத்திபஸ்தானமாயுடைய வடக்கு வட்டம் ஒரு இந்திய குருவின் விசாரணையிலிருந்தது. 1863-ஆம் வருஷ முதல் ஆ. ம. சாமுவேல் ஐயரும், 1865-ஆம் ஸு எப்ரில் மீ முதல் சாமிதாசன் ஐயரும் மேட்டுப்பட்டியில் வசித்து வேலை பார்த்தார்கள். இவர்களுக்குப் பின் மேட்டுப்பட்டிக்குக் குருவாக வந்து தமது மரணநாள் மட்டும் அங்கிருந்து உழைத்தவர் V. கிறிஸ்தியான் ஐயர்.

திருச்சினுப்பள்ளியைத் தலைமையாக உடைய தெற்கு வட்டம் ஐரோப்பிய குருவுக்குட்பட்டிருந்தது. ஐயர் வசித்தது வாடகை வீடு. ஆராதனைத் தலமும் அப்படியே. 1855-ஆம் ௵ சிந்தாமணிப்பிள்ளை வீட்டை ஒத்திக்கு வாங்கியும், 1865-ஆம்௵ அதைக் கிரயத்துக்கு வாங்கியும் ஆராதனை வைத்து வந்தார்கள்.

கலெக்டர் பான்பெரி (Banbury) துரை தயவால் 1869-ஆம் வருஷம் மைலன் சந்தைக்குச் சமீபத்தில் இப்பொழுது கோயில் கட்டியிருக்கும் இடம் கிடைத்தது. 1870-ஆம் ௵ டிசம்பர் ௴ 28-ஆம் ௳ R. ஹந்துமன் ஐயரால் கோயிலுக்கு அஸ்திபாரம் போடப்பட்டு வெகு முயற்சியோடு கட்டப்பட்டது.

1871-ஆம் வருஷம் பள்ளிக்கூடம் புதிதாய்க் கட்டப்பட்டபின் மாணுக்கர் தொகை பெருகிற்று. ஆதரிப்புப் பாடசாலை ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. 1872-ஆம்௵ ஹந்துமன் ஐயரைப் பிறையாற்றுச் செமினேரிக்கு மாற்றினதால், கால் (O. Kahl) ஐயர் அதை ஒப்புக்கொண்டு வெகு சிரத்தையோடு வேலை பார்த்து வருகையில் 1874-ஆம் ௵ ஜூலை ௴ 28-ஆம் ௳ மரித்து, கொத்துங் குறையுமாயிருந்த அந்தக் கோயிலுக்குள் அடக்கம் பண்ணப்பட்டார். பிறகு அங்கு வந்த E. ஷெப்பர், வில்கொம், முக்கியமாய் மயர் என்ற ஐயர் அதிக சிரத்தையோடு கட்டட வேலையை நடத்தி, பலவிதத்திலும் பெருகி வந்த சபைக்குப் பிரயோசனமும் ஊருக்கு அலங்காரமுமான சீயோன் கோயிலை முடித்தார்கள். 1878-ஆம் ௵ எப்ரில் ௴ 11-ஆம் ௳ அந்தத் தெய்வாலயத்தின் பிரதிஷ்டை சிறப்பாய் நிறைவேறிற்று. அப்பொழுது சபை குருவாயிருந்தவர் கிரெம்மர் ஐயர். கோயில் பிரதிஷ்டையான வருஷத்திலே திருச்சினுப்பள்ளி வட்டத்தில் இருந்த ஆத்துமாக்கள் 840. பஞ்சத்தில் சேர்ந்த அகதிப் பெண்களுக்காகவும் ஒரு ஆதரிப்புச் சாலை ஏற்பாடாயிற்று.

Zion Church.

1879-ஆம் வருஷமுதல் பெர்க்ஸ்டெட் ஐயர் திருச்சினுப்பள்ளி வட்டத்திற்குக் குருவானர். மற்ற வட்டங்களிலிருந்து அநேகர் அங்கே குடியேறினதால் அங்கே சபை பெருகிற்று. 1886-ஆம் ௵ பெர்க்ஸ்டெட் ஐயர் வியாதிப்பட்டுச் சீமைக்குப் போகுமட்டும் பயனுற உழைத்தார்.

பிறகு சேரிங் ஐயர் 1886-ஆம் ௵ எப்ரில் ௴ அந்த வட்டத்தை ஒப்புக்கொண்டார். சில காலம் மைனர் ஐயரும் அவருக்கு உதவியாயிருந்தார். ஈச்சம்பட்டி கோயில் அவர் காலத்தில் கட்டப்பட்டது. அவருக்குப்பின் அவரது மைத்துனர் டக்செல்த் ஐயர் 1889-ஆம் வருஷ முதல் 1896-ஆம் வருஷமளவும் அந்த வட்டத்தில் வேலை செய்தார். அம்மட்டும் வாடகை வீட்டில் குடியிருந்து வந்த ஐயர்மாருக்கு அவர் காலத்தில் ஒரு மிசியோன் பங்களா கட்டப்பட்டு 1893-ஆம் ௵ ஜனுவரி ௴ 22-ஆம் ௳ பிரதிஷ்டை செய்யப்பட்டது. 1896-ஆம் ௵ மார்ச்சு ௴ ரீகர் ஐயர் அந்த வட்டத்தை ஒப்புக்கொண்டு 5 மாதங்களாய் வேலை பார்த்து வந்தார். பிறகு பேஸ்லர் ஐயர் 1896-ஆம் ௵ ஆகஸ்டு மாத முதல் விசாரணை ஒப்புக்கொண்டு 1898-ஆம் ௵ எப்ரில் ௴ 22-ஆம் ௳ சென்னை வைத்திய சாலையில் மரித்தார். இந்த பேஸ்லர் ஐயர் ஆபிரிக்காவில் கிலிமஞ்சாரோ மலைக்கருகில் நமது மிசியோன் வேலையைத் தொடங்கும்படி சில தமிழ் உபதேசிமாரோடு போய் சில ஆண்டுகள் அங்கே உழைத்துப் பிறகு தமிழ் நாடு திரும்பினார். பேஸ்லர் ஐயருக்குப் பின் கேஷிங் ஐயர் அந்த வட்டத்தை விசாரித்து வந்தார். இவருக்குப்பின் மறுபடியும் 1901-ஆம் ௵ மார்ச்சு மாத முதல் டக்செல்த் ஐயர் அந்த வட்ட விசாரணையை ஒப்புக்கொண்டு நடத்தினார்.

**Widows' Asylum.**

1902-ஆம் ௵ பெப்ருவரி ௴ 18-ஆம் ௳ அநாத பெண்களுக்கும் இளந்தலை விதவைகளுக்கும் அடைக்கல ஸ்தானமும், குடித்தன அப்பியாசக்கூடமுமாய் இருக்கும்படிக்கான ஒரு கட்டடம் பிரதிஷ்டை செய்யப்பட்டு, ஒரு டியாக்கோனி அம்மாள் விசாரணையிலிருந்தது. இக்கட்டடம் மாஜி என்ஜினீர் கெம்ப் (**Kemp**) துரை நமது மிசியோனுக்கு எழுதிவைத்த மரண சாதன நன்கொடை. இந்த கெம்ஸ்டவுன் ஸ்தாபனத்தில் ஏழைப் பிள்ளைகளுக்கென ஓர் ஆதரிப்புப் பாடசாலை ஏற்படுத்தி இந்நாள் வரைக்கும் நடந்து வருகிறது. அகுஸ்தா ஹென்-சொல்ற், எம்மா கார்பெர்க் என்ற ஜெர்மன் சகோதரிமாரும், யுத்த காலத்திற்குப் பின் குரோன்செல், ஹோல்ம், கிரேத்தா ஜான் துல்லியா, எங்குவிஸ்ற் முதலிய சகோதரிமாரும் இந்த தர்ம ஸ்தாபனத்தில் நீண்டகாலம் உழைத்து அநேக பெண்களின் ஆத்தும சரீர நன்மைகளுக்கு மிக்க உதவி புரிந்திருக்

கிறார்கள். தற்போது இங்கு தலைமை வகிப்பவர் திருமதி புஷ்பம் வில்லியம்ஸ் என்பவர்கள்.

திருச்சி வட்டத்தில் நமது சபை வேலை மிகவும் விரிந்து விசாலித்துவிட்டது.

1. சீயோன் கோவிலுக்கும், ஈச்சம்பட்டி சபைக்கும் சேவை புரிய ஒரு சபைகுரு மணிக்கூண்டிலுள்ள கம்பவுண்டில் குடியிருந்து வருகிறார். அங்கே இருந்து சென்ற 50 ஆண்டுகளில் ஞானபிஷேகம், J. ஆரோக்கியம், கு. சாமுவேல், D. தேவப்பிரியம், T. M. ராஜேந்திரன், A. M. தேவாச்சரியம், சாமுவேல் பாக்கியம், D. S. பிச்சை, S. ஞானமாணிக்கம், I. A. அப்பாதுரை, M. சாமுவேல், V. G. ஆசீர்வாதம், A. J. சத்தியநாதன், M. S. தனராஜ், G. G. ஆச்சரியம், A. S. ராஜேந்திரம் என்பார் ஊழியம் செய்தவர்கள். கள்ளத் தெருவில் ஒரு உயர்தர ஆரம்ப பாடசாலை நமது சபை குருவின் மேற்பார்வையில் நடந்து வருகிறது. ஏழைப் பிள்ளைகளுக்கென ஓர் சாப்பாட்டு விடுதி சர்க்கார் உதவி பெற்று நமது சபை குருவால் கோயில் கம்பவுண்டில் நடைபெறுகிறது.

2. முன் சீயோன் சபை குருவின் விசாரணையில் பொன்மலையில் ஒரு சிறிய சபையும், மணப்பாறைக்கு அப்பால் கல்பாளையத்தான்பட்டி, அஞ்சல்காரன்பட்டி, என்ற கிராமங்களில் இரு சபைகளும், கிராப்பட்டியில் ஒரு சபையும் இருந்தன. நமது அத்தியக்ஷர் குடியிருக்கும் தரங்கை வாசம் கம்பவுண்டில் பலபேர் குடியேறினது மன்றி நமது அத்தியக்ஷரால் கட்டப்பட்ட பெரிய ஜெப ஆலயத்தில் பலபேர் வேண்டினபடி ஞாயிறு, புதன்தோறும் தேவாராதனை நடப்பதால் தரங்கை வாசச் சபையொன்று ஏற்பட்டது. இவற்றை எல்லாம் மேல் விசாரணை செய்யும் சபை குருவின்கீழ் பொன்மலை குருசேகரம் ஏற்பட்டு, சீயோன் சபையைப்போல், பொன்மலை சபையும் பொருளாதார சுயாதீனம் பெற்ற சபையாய் நடந்து வருகிறது. இதன் சபை குருக்களாய் ஞானமாணிக்கம், துரைக்கண், I. A. அப்பாதுரை, G. G. ஆச்சரியம், V. தேவவரம் என்பார் உழைத்திருக்கிறார்கள். தற்போது சபை குருவாயிருப்பவர் மறைத்திரு. S. W. சவரிமுத்து அவர்கள்

தரங்கைவாச கம்பவுண்டில் நமது சபைகுருவின் மேல் விசாரணையில் கீழ் பிஷப் ஹெராய்மன் ஞாபகார்த்த உயர்தர ஆரம்ப பாடசாலை நடந்து வருகிறது. மேலும் இதே கம்பவுண்டில் நமது கல்வி அபிவிர்த்தி கழகமும் (Education Board) திரு. G. T. வில்லியம்ஸ் அவர்கள் தலைமையில் நடைபெறுகிறது. இக்கழகத்திற்கு முன் வருஷங்களில் கனம் K. ஹெல்லர், G. எரிக்ஸன், D. S. பிச்சை, ஹொல்ம்பெர்க் முதலிய ஐயர்மார்கள் தலைமை வகித்திருக்கிறார்கள்.

நமது சபைகளின் பொக்கிஷசாலையும் இதே தரங்கை வாச கம்பவுண்டில் திரு. M. D. சாலமோன் அவர்கள் தலைமையில் நடக்கிறது. முன்பு திரு. N. V. சின்னப்பா, S. பரஞ்சோதி என்பார் நீண்ட காலம் இவ்வேலையில் ஈடுபட்டிருந்தார்கள்.

சிறந்த கண் வைத்திய சாலையொன்று நமது கம்பவுண்டில் டாக்டர் G. ஜோசப் அவர்கள் தலைமையில் நடைபெறுகிறது. திருப்பத்தூர் டாக்டர் கூகல்பர்க் அவர்களிடம் பயிற்சி பெற்று, சுயாதீன கண் வைத்திய நிபுணராய் விளங்கும் டாக்டர் G. ஜோசப் அவர்கள் நீண்டகாலம் நமது ஆலோசனை சங்க அவயவமாய் சேவைபுரிந்து, நமது சபை அமைப்புத் திட்டம் குறைவற முடிய உதவி புரிந்திருக்கிறார்.

3. பெரம்பலூர் குருசேகரமொன்று புதிதாய்த் தொடங்கி கனம் H. ரேவர் (Röver) ஐயர் விசாரணையிலிருக்கிறது. அன்னமங்கலம் இச்சேகரத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. பெரம்பலூரில் ஓர் ஆரம்பபாடசாலையும் அனாதைப் பிள்ளைகளின் விடுதியும் H. ரேவர் ஐயரின் மேற்பார்வையில் அமைந்துள்ளது.

4. அரியலூரில் நமது குருசேகர வேலை ஆண்டிமடத்தைச் சேர்ந்து நடக்கிறது. சபைகுரு D. ஜேக்கப் என்பார். சுற்று கிராமங்களில் சுவிசேஷ வேலையும் செய்யப்படுகிறது.

மேட்டுப்பட்டியில் கிறிஸ்தியான் ஐயர் பிரயாசையால் ஒரு கோயில் கட்டப்பட்டது. மிகாயேல் கோயில் என்னப்பட்ட அந்த தெய்வாலயத்திற்கு 1883-ஆம் ஹூ மே மீ 23-ஆம் உ பிரதிஷ்டை நடந்தது. மற்றக் கிராமச் சபைகளும் விர்த்தியானதால் ஈச்சம்பட்டியில் 1887-ஆம் ஹூ மார்ச்சு மாதம் 21-ஆம் உ ஒரு கோயிலுக்கு அஸ்திபாரம் போட்டு அடுத்த வருஷம்

Mettupatty.

செப்டெம்பர் மீ 5-ஆம் உ கட்டடம் முடிந்து 5-ஆம் தேதி பிரதிஷ்டையாயிற்று. அதற்கு இரட்சகர் கோயிலென்று பெயரிட்டார்கள். அந்தக் கிராமத்தில் ஞானஸ்நானம் பெற்ற நெசவுகாரரான செட்டிகளுக்காகக் குடியிருப்புத் தலம் ஏற்பட்டது.

மறு வருஷம் அன்னமங்கலத்தில் ஒரு கோயிலுக்கு அஸ்திபாரம் போடப்பட்டது. அது 1891-ஆம் ஞு முடிந்து ஆகஸ்டு மீ 26-ஆம் உ பிரதிஷ்டையாகி, அபிஷேக நாதராலயம் என்னும் பெயர் பெற்றது. இது பெரம்பலூர் வட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

கிறிஸ்தியான் ஐயர் 1895-ஆம் ஞு ஆகஸ்டு மீ 12-ஆம் உ இறந்துபோனபின் தோ. தானியேல், S. ஆபிரகாம், J. ஆரோக்கியம், கு. சாமுவேல், M. யோசேப்பு, N. முத்துசாமி, S. சாலமோன், V. தேவவரம், M. ஞானசிகாமணி என்ற இந்திய குருமார்கள் மேட்டுப்பட்டியை விசாரித்திருக்கிறார்கள்.

---

## கோள்ளிட வட்டம்

R. J. ஞானவரம், T. M. ராஜேந்திரன் என்ற குருமாரின் அரும் பிரயாசையாலும் உழைப்பாலும் இவ்வட்டத்தில் சபைகள் சேர்க்கப்பட்டன. இப்போது அவை 3 குருசேகரங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. வட்டத்தின் தலைமை விசாரணை குரு: கனம் பவுல் சாந்தகிரேன் ஐயர். திருக்காட்டுப்பள்ளியில் R. D. சாமுவேல் ஐயர் சபை குருவாயிருக்கிறார். செங்கரையூரில் S. G. சாமுவேல் ஐயரும் லால்குடியில் V. J. பொன்னையா ஐயரும் சபை குருக்களாயிருந்து சுற்றுக் கிராமங்களிலுள்ள சபையாருக்கு ஆத்ம போஜனமளித்து சுவிசேஷ ஊழியமும் நடத்தி வந்திருக்கிறார்கள்.

ரோமான் சபையை விட்டுப் பிரிந்து நாஸ்திகத் தன்மையுள்ள சுயமரியாதைக் கட்சியில் சேர்ந்து விட்டவர்களை சுவிசேஷ சபையில் கொண்டுவர எடுத்துக்கொண்ட முயற்சியின் பலனே கொள்ளிட வட்ட சபைகள். இதையன்றி சில இந்துக்களும் கிறிஸ்தவ சபையில் சேர்ந்திருக்கிறார்கள்.

---

## 16. புதுக்கோட்டை

தொண்டமான் அரசரின் ஆளுகைக்குட்பட்ட புதுக்கோட்டையில் முதல் முதல் மிசியோன் வேலையை ஆரம்பித்தவர்கள் சென்னையில் எற்பட்ட "இந்திய சர்ச் மிசியோன் சங்கத்தார்." இவர்கள் வேலை தொடங்கினது 1836-ஆம் ௵. அங்கே சுவிசேஷ வேலை செய்தவர்களில் விசேஷித்தவர் தாவீது பிள்ளை என்பவர்.

**Pudukkotah.**

அங்கே ஆரம்பித்த மிசியோன் வேலைக்கு அரசரும் அனுகூலஞ் செய்து, முக்கியமான இரண்டு கிராமங்களில், கிராமம் ஒன்றுக்கு 2000 குழி சர்வமானியமாக விட்டுக் கொடுத்தார். 1845-ஆம் ௵ அமெரிக்கன் மிசியோன் சங்கத்தார் அதை ஒப்புக்கொண்டு நடத்தினார்கள். அவர்களும் மதுரை ஜில்லாவில் மாத்திரம் தங்கள் ஊழியத்தை நடப்பிக்கக் கருதி, புதுக்கோட்டை மிசியோனை லேப்சிக் மிசியோன் சங்கத்தாருக்கு 1848-ஆம் ௵ டிசம்பர் ௴ 16-ஆம் ௳ ஒப்புவித்தார்கள்.

ஆரம்பத்தில் அந்த வட்டம் ஒக்ஸ், ஷ்மைசர், வொல்ப் என்ற ஐயர்மார் விசாரணையில் இருந்தது. பிறகு 1852-ஆம் வருஷ முதல் 1855-ஆம் வருஷ மட்டும் அது சுவார்ச் ஐயர் பார்வையில் இருந்தது. அதற்கு மேல் சுவீடிஷ்காரராகிய அக்டர்லோனி ஐயர் அதை ஒப்புக்கொண்டார். இவரே புதுக்கோட்டையைத் தமக்கு வாசஸ்தலமாக்கின முதல் குரு. அவர் அங்கே 1860-ஆம் ௵ வியாதிப்படும் மட்டும் ஒரு கூரை வீட்டில் குடியிருந்தார். அக்காலத்தில் புதுக்கோட்டை மேற்பாகத்திலும், முத்துநாட்டிலும் புதுச் சபைகள் உண்டாயின. 1861-ஆம் வருஷ முதல் 1867-ஆம் வருஷ மட்டும் அதை நெர்லின் (Nerling) ஐயர் ஒப்புக்கொண்டு நடத்தினர். பிறகு மூன்று வருஷச் காலம் R. ஹந்துமன் ஐயரும், அவருக்குப் பின் 1872-ஆம் வருஷமளவும் கால் (C. Kahl) ஐயரும் விசாரித்து வந்தார்கள். 1862-ஆம் ௵ புதுக்கோட்டையில் கட்டத் தொடங்கின மிசியோன் பங்களா கால் ஐயர் முயற்சியால் கட்டி முடிந்து, 1871-ஆம் வருஷம் ஜனுவரி ௴ 18-ஆம் ௳ பிரதிஷ்டையாயிற்று. கால் ஐயர் புதுக்கோட்டையிலிருக்கும்போது தான் திருச்சி வட்டத்தைச் சேர்ந்த கோட்டைக்காரன்பட்டி புதுக்கோட்டை சபையோடு சேர்க்கப்பட்டது. 1872-ஆம் வருஷ முதல் 1876-ஆம் வருஷ மட்டும்

சொர்ன் (Zorn) ஐயரும் அவருக்குப்பின் 7 வருஷக்காலம் பேஸ்லர் ஐயரும் அந்தச் சேகரத்தை நடத்தி வந்தார்கள். 1883-ஆம் வருஷ முதல் 1900-ஆம் வருஷ மட்டும் 6 ஐயர்மார் ஒருவர்பின் ஒருவராய் அங்கிருந்தார்கள்.

1900-ஆம் வருஷக் கடைசியில் பெக்சல் ஐயர் புதுக்கோட்டைக்குப் போய்க் குடியேறினார். அவ்வருஷம் ஜூன் மீ அது சுவேதிஷ் வட்டமாயிற்று. 1909-ஆம் ஸு வரையில் பெக்சல் ஐயர் புதுக்கோட்டையில் திருப்பணி நடத்தினார். அங்கிருந்த இங்கிலீஷ் பள்ளிக்கூட சம்பந்தமாய் ஒரு ஆதரிப்புச்சாலை 1903-ஆம் வருஷம் கட்டி முடிந்தது. அந்த லோயர் செக்கண்டரி இங்கிலீஷ் பாடசாலை ஹைஸ்கூலாக உயர்த்தப்பட்டு 1904-ஆம் வருஷம் ஹொய்மன் (Dr. Heumann) சாஸ்திரியார் விசாரணையில் வைக்கப்பட்டது. அதே வருஷத்தில் புதுக்கோட்டைக் கோயில் சற்றுப் பெரிதாக்கப்பட்டது. அடுத்த வருஷத்தில் ஒரு புதிய மிசியோன் பங்களா முடிவாயிற்று. 1906-ஆம் ஸு ஜனுவரி மீ 6-ஆம் தேதியாகிய மகிமை விளங்குதலின் பண்டிகையன்று அங்கே ஒரு புதுக்கோயிலுக்கு அஸ்திபாரம் போடப்பட்டது. இதைத் தரங்கை மிசியோன் இரண்டாம் சதாப்த மகோற்சவ ஞாபக சின்னமாய்க் கட்டி, அதே வருஷம் நொவம்பர் மீ 6-ஆம் உ சீயோன் ஜூபிலி தேவாலயமென்னும் பெயரால் பிரதிஷ்டை செய்தார்கள். இத்தெய்வாலயம் கட்டி முடிய ஹொய்மன் சாஸ்திரியார் எடுத்துக் கொண்ட பிரயாசை அதிகம். நமது உயர்நிலைப் பள்ளியின் புதிய கட்டடத்துக்கு வேண்டிய நிலத்தைச் சம்பாதித்து, அக்கட்டடத்தின் பெரும்பாகத்தைக் கட்டினவரும் இவரே. அக்காலத்தில் நமது உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியராயிருந்த திரு. J. K. மாணிக்கம் என்பவர் பள்ளிக்கூடத்தின் முன்னேற்றத்திற்காக 1928-ஆம் ஸு தாம் அதை விட்டுப் போகும்வரையில் உற்சாகமாக உழைத்தார். பெக்சல் ஐயர் 1909-ஆம் ஸு சீமைக்குப் போயிருக்கையில் Victor Johnson ஐயர் இங்கே மூன்று வருஷம் வேலைபார்த்து புதுக்கோட்டையிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் மிகவும் ஊக்கமாய் சுவிசேஷப் பிரசங்க ஊழியம் நடத்தினார். G. தானியேல் ஐயர் 1909-ஆம் ஸு குருப்பட்டம் பெற்று 1912-ஆம் ஸு வரையில் புதுக்கோட்டை வட்டத்து கிராம சபைப் பள்ளிக்கூடங்களுக்கு பொறுப்பாளியாயிருந்தார்.

. ஹொய்மன் ஐயர் தாய்நாடு போயிருந்த காலத்தில் கார்ல் சாந்தகிரேன் ஐயர் அவருக்குப் பதிலாக வேலை பார்த்தார். 1913-ஆம் ஆு ஹொய்மன் சாஸ்திரியார் புதுக் கோட்டைக்குத் திரும்பி வந்து கர்மானிய மிஷனெரிமார் ராஜாங்கத்தாரால் தாய்நாட்டுக்கு 1915-ஆம் ஆு திரும்ப அனுப்பப்பட்டபோது திருச்சிக்குப் போய் வேலையை ஒப்புக் கொண்டார். 1914-ஆம் ஆு முதல் 1916-ஆம் வருஷம் வரையும் ஹெர்மன் சாந்தகிரேன் துரை நமது உயர்நிலைப் பள்ளியின் தலைவராயிருந்து, தமது சுகவீனத்தின் பொருட்டு தாய்நாடு திரும்பிப்போக நேரிட்டது. பெக்சல் ஐயர் மீண்டும் இவ்வேலையை ஒப்புக்கொண்டு 1922-ஆம் ஆு வரையில் இங்கே திருப்பணி நடத்தினர். அவருக்குப்பின் 1924-ஆம் ஆு வரை சோடர்ஸ்ற்ரோம் ஐயர் வேலையின் பொறுப்பை வகித்தார். பிரிக்கோல்ம் ஐயர் அவருக்குப் பின் ஒப்புக்கொண்டு சபை பள்ளிக்கூட வேலையோடு சுவிசேஷப் பிரசங்க ஊழியத்தையும் குறைவின்றி நடத்தினர். அவருக்குப்பின் Bjerrum, ஹோர்ட், B .Fr. திலியாண்டர், O. A. யோகான்சன், R. அனேர் என்ற ஐயர்மார் சேவை புரிந்திருக்கிறார்கள்.

இங்கே G. தானியேல் ஐயருக்குப்பின் நீண்டகாலம் திருப் பணி நடத்தியிருக்கும் இந்திய குருமார் A. D. ஞானநிக்கம், V. G. ஆசீர்வாதம், சா. ஞானமாணிக்கம், R. தேவசகாயம், சாலமோன் தனராஜ் என்போர்.

நமது உயர்நிலைப் பள்ளியில் 1929-ஆம் ஆு முதல் 1942-ஆம் ஆு வரை திரு. M. தேவசகாயம் என்பவர் தலைமை ஆசிரிய ராக உழைத்திருக்கிறார். அவருக்குப்பின் S. தேவநேசன் பிரசங்கியாரும், G. மதுரம் மார்ட்டீன், A. N. தேவநேசன், S. துரைசாமி என்போர் முறையே அவ்வுத்தரவாதத்தை வகித்துவந்தனர்.

---

## 11. அணைக்காடு, பட்டுக்கோட்டை.

பூர்வம் கோலோப் ஐயரால் ஸ்தாபிக்கப்பட்டு சுவி. பிர. சங்க மிசியோனுக்குட்பட்டிருந்த சபையின் அவயவங்களில் 56 பேரை தஞ்சை அக்டர்லோனி ஐயர் 1861-ஆம் ஆு சூலை

மாதம் 21-ஆம் உ சுவி. லுத்தரான் சபையில் ஏற்றுக்கொண்ட தால், அணைக்காட்டில் நமது மிசியோன் ஸ்தாபிக்கப்பட்டு, தஞ்சாவூர் சேகரத்தைச் சேர்ந்திருந்தது. ஆரம்பத்தில் வெகு காலமாய் அச்சபை உபதேசிமார் விசாரணையில் இருந்து வந்ததால் அதிக விர்த்தி யடையாதிருந்தது. 1861-ஆம் வருஷ முதல் 1874-ஆம் வருஷத்திற்குள் 54 பேர்போல் சபையை விட்டுப் போனார்கள். பிறகு ஈலபெல்ட் ஐயர் முயற்சியால் அநேகர் சேருவதற்கு இடமாயிற்று.

Anaikadu.

அதற்கு முதல் முதல் ஈஸ்பாவில் வாசஞ்செய்யும் சபை குருவாக நியமிக்கப்பட்டவர் க. தேவசகாயம் ஐயர். அவர் 1879-ஆம் வருஷ முதல் 1888-ஆம் வருஷமளவும் அங்கே வேலை பார்த்தார். அவருக்குப்பின் அந்தச் சபைக்குக் குருவாக வந்த முதல் ஐரோப்பியர் கேஃஷிங் ஐயர்.

1901—ஆம் ௵ மே ௴ 23-ஆம் தேதிமுதல் சுவேதிஷ் மிசியோன் சேகரங்களில் ஒன்றாகி புளும்ஸ்திராண்டு ஐயர் விசாரணைக்குட்பட்டது. இவருடைய பிரயாசையால் ஒரு அழகிய புதிய கோயில் அமைந்து, 1903—ஆம் ௵ மார்ச்சு ௴ 10-ஆம் உ பிரதிஷ்டையாயிற்று.

அணைக்காட்டு வட்டத்து குருவானவர் வசிப்பதற்கான பங்களாவுக்கு 1905-ஆம் ௵ சூலை ௴ 3-ஆம் உ அஸ்திபாரம் போடப்பட்டது. புதுக் கட்டடத்தின் கிரகப்பிரவேசம் 1906-ஆம் வருஷம் ஜனுவரி ௴ 12-ஆம் உ நடந்தது. அந்நாள் முதல் வட்டத்துக் குருவாகிய பிரிக்ஷோலம் ஐயர் அணைக்காட்டை விட்டுப் பட்டுக்கோட்டையில் வசித்தார். அவருக்குப்பின் கார்ல் சாந்தகிரேன் ஐயர் சபை குருவானார். பட்டுக்கோட்டையில் ஒரு கோயில் கட்டப்பட்டு அங்கேயே சபை குருவின் வீடுமிருப்பதால், இரு சபைகளும் ஒரே குருவின் விசாரணைக்குட்பட்டிருக்கின்றன. அங்கே நீண்டகாலம் குரு வேலை செய்திருப்போர்: சாமுவேல் பாக்கியம், A. D. ஞானதிக்கம், J. D. பர்வதம், S. துரைக்கண், M. ஜேம்ஸ், M.D. வில்லியம், D. பெலவேந்திரம் என்ற ஐயர்மார். நக்ஷத்திரராஜ் என்பவர் இப்போது அங்கு சபை குருவாயிருக்கிறார். "பெத்லகேம்" என்ற அனாதைப் பிள்ளைகளின் விடுதியொன்று அங்கே தியாக்கோனி சகோதரிகளால் நடத்தப்படுகிறது.

---

## 12. கோயமுத்தூர்.

சுவிசேஷ லுத்தரன் மிசியோன் வேலை கோயமுத்தூரில் ஆரம்பித்தது 1856-ஆம் வருஷம். அவ்வாண்டில் சுவார்ச் ஐயர் செய்த அறிக்கையின்படி வேறு சபைகளிலிருந்து நமது சபையில் சேர்ந்தவர்கள் 130, ஞானஸ்நான ஆயத்தக்காரர் 50. 1860-ஆம் வருஷமளவும் அந்தச் சேகரத்திலேயே குடியிருக்கும் குரு ஏற்பட்டதில்லை. அந்த வருஷந்தான் நல்லதம்பி ஐயரை அங்கே அனுப்பினார்கள். அவ்வூரில் ஸ்தல குருவாயிருந்த முதல் ஐரோப்பிய குரு ஷான்ஸ் (Schanz) ஐயர் (1863). 1865-ஆம் ஹூ நமது மிசியோனில் சேர்ந்த ஹெரே ஐயர் மறு வருஷத்தில் கோயமுத்தூர் வட்டத்துக்கு குருவானார். 1863-ஆம் ஹூ அங்கே வாங்கியிருந்த தோட்டத்தில் 1867-ஆம் ஹூ ஒரு பள்ளிக்கூடம் கட்டப்பட்டு, கோயிலாகவும் உபயோகிக்கப் பட்டு வந்தது. 1868-ஆம் ஹூ ஐயர் வீடு கட்டப்பட்டது. பிறகு சுண்டக் கோயமுத்தூர் என்ற கிராமத்தில் வெகுபேர் ஞானஸ்நானம் பெற்றதால் 1869-ஆம் ஹூ அங்கேயும் ஒரு கோயில் கட்டப்பட்டது. ஆகிலும், அவர்கள் பிற்காலத்தில் மருள விழுந்தார்கள். வெள்ளலூர், பொள்ளாச்சி, விருதலைப்பட்டி, முதலிய கிராமங்களிலும் சிறு ஜெப வீடுகளும் பள்ளிக்கூடங்களும் உண்டாயின. திருப்பூரிலும் அதற்குச் சமீபமான அனுப்பப் பாளையம் என்ற கிராமத்திலும் அநேக இந்துக்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள். 1862-ஆம் வருஷ முதல் ஐயர்மாருக்கு வெயில்காலத் தாபரஸ்தலமாய் ஏற்பட்ட ஏற்காடு என்ற மலைச்சேகரம், ஏற்கனவே ஹெரே ஐயருடைய ஊழியஸ்தலமாயிருந்ததால், அது கோயமுத்தூர் வட்டத்தோடு சேர்த்து விசாரிக்கப்பட்டது. அங்கே 1867-ஆம் ஹூ ஒரு கோயில் கட்டப்பட்டது. அது இப்போது திருப்பூர் குருசேகரத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

Coimbatore.

Yercaud

1872-ஆம் வருஷக் கடைசியில் ஹெரே ஐயர் வியாதிப் பட்டுச் சமுசார சகிதம் சீமைக்குப் போகையில் கோயமுத்தூர் வட்டத்தை அக்டர்லோனி ஐயரிடம் ஒப்புவித்தார். அப்பொழுது சபையின் ஆத்துமாக்கள் 427. இவர் அதை C. J. சாந்தகிரேன் ஐயருக்கு ஒப்புவிக்க, அவர் விசாரணையில் அது 1881-ஆம் ஹூ சீமைக்குப் போகுமளவும் இருந்தது. 1880-ஆம் ஹூ துவக்கத்தில் பொள்ளாச்சி ஜெபவீடு பிரதிஷ்டை ஆயிற்று.

அதே வருஷத்தில் கோயமுத்தூர் சபை புதிதாய் ஏற்பட்ட சபையொழுங்கை அனுஷ்டானத்துக்குக் கொண்டு வந்தது. இச்சபை யொழுங்கின்படி அந்தச் சேகரத்திற்கு முதற் சபை குருவாயேற்பட்டவர் ஆசீர்வாதம் ஐயர். 1883-ஆம் ௵ அக்டோபர் ௴ 5-ஆம் ௳ மரித்த இவருக்குப் பின் அங்கே வேலை செய்த சபை குருக்களில் பெரியநாயகம் ஐயர் நெடுநாள் அங்கே உழைத்தார். அவர் காலத்திலே ஹேர்பெர்க் ஐயர் மேல் விசாரணையில், 'கிறிஸ்துநாதர் ஆலயம்' என்ற அழகிய கோயில் கட்டி முடிந்து 1892-ஆம் வருஷம் நொவம்பர் ௴ 10-ஆம் தேதி பிரதிஷ்டை ஆயிற்று. இக்கட்டடச் செலவுக்காகச் சென்ற 11300 ரூபாயில் சபையார் சற்றேறக் குறைய பாதியை உற்சாகமாய் செலுத்தினார்கள். ஹேர்பெர்க் ஐயர் கட்டட வேலையில் உழைத்த உழைப்பினால் மிகவும் வியாதிப்பட்டுச் சீமைக்குத் திரும்பினார். பெரியநாயகம் ஐயரும் பலவிதத்திலும் சங்கடமும் சஞ்சலமும் அடைந்து, வியாதியாகி, 1895-ஆம் ௵ மார்ச்சு மாதம் 7-ஆம் ௳ இறந்துபோனார்.

Christ Church.

ஹேர்பெர்க் ஐயருக்குப்பின் 1899-ஆம் வருஷமட்டும் பெக்சல் ஐயர் விசாரணை குருவும், பெரியநாயகம் ஐயருக்குப் பின் 1902-ஆம் வருஷமட்டும் தி. யோசேப்பு ஐயர் சபை குருவுமாக வேலை பார்த்தார்கள். பிறகு A. B. யோகான்சன், மத்தேஸ், ஹொப்மன் என்ற ஐயர்மார் ஒருவர்பின் ஒருவராய் கோயமுத்தூர் வட்டத்தை விசாரித்தார்கள். வெளி வட்டத்தில் புறமதத்தினருக்குள் அசைவுண்டானதால் அவர்களுக்குள் அதிக வேலை நடத்தக் கருதி, அந்த வட்டத்தை இரண்டாய்ப் பிரித்து, கோயமுத்தூர் சேகரத்தை ரைகார்ட் ஐயருக்கும், உடுமலைப்பேட்டைச் சேகரத்தை ஹொப்மன் ஐயருக்கும் ஒப்புவித்தார்கள். சுயபரிபாலன சபையாகிய கோயமுத்தூர் உள்ளூர்ச் சபைக்கு நீண்ட காலம் குருவாயிருந்தோர்: D. தேவப்பிரியம், கு. சாமுவேல், S. முத்துசாமி, A. P. சாமுவேல், சா. ஞானச்சரியம், D. எபனேசர், A. R. தியாபிலஸ், S. M. அப்பாதுரை முதலியோர்.

Udumalapet.

சென்ற 50 ஆண்டுகளில் இந்த ஜில்லாவில் பல மாறுதல்களும், புதிய குருசேகரங்களும் உண்டாகி இருக்கின்றன. கோயமுத்தூரில் மோசஸ் ஞானாபரணம் கண் வைத்திய

சாலையும், அதன் கிளையாக போத்தனூரில் ஒரு கண் வைத்திய சாலையும் ஏற்பட்டிருக்கின்றன. இதில் ஊக்கத்தோடு டாக்டர் S. குருபாதம், I. பிச்சை ராபர்ட் என்பவர்கள் உழைத்து வந்திருக்கிறார்கள். முன் கோயமுத்தூரைச் சேர்ந்திருந்த உதகமண்டலத்தில் சபை இப்போது தனித்த குருசேகரமாகி விட்டது.

கோயமுத்தூர் ஜில்லாவில் Pioneer area என்றழைக்கப் படும் ஆரம்ப சபை வட்டத்தை 4 பிரிவுகளாகப் பிரித்திருக் கிறார்கள். இவைகளில் திருப்பூரில் M. தானியேல் ஐயர் முயற் சியால் குருவின் வீடொன்றும் தேவாலயமொன்றும் கட்டப் பட்டிருக்கின்றன. A. சாலமோன் ஐயர் அங்கே ஊழியம் நடத்தி வருகிறார். பொள்ளாச்சியில் G. T. வேதமாணிக்கம் ஐயர் சபை குரு. அங்கே பூர்வத்தில் S. D. ஞானச்சரியம், A. S. முத்தையா, D. A. ஜேக்கப், J. அருள்தாஸ், M. சாமு வேல் முதலியோர் திருப்பணி நடத்தி இருக்கிறார்கள். P. குனுட்சன் ஐயர் இங்கே மிஷனெரியா யிருக்கையில் 1949 -ஆம் ௵ நவம்பர் மாதத்தில் ஒரு புதிய கோயிலைக் கட்டி முடித்தார். அங்கே இப்போது A. அன்றேன் ஐயர் மிஷனெரி யாயிருக்கிறார். பெண்களின் ஆதரிப்புப் பாடசாலை A. தூன்பி ளாட் மிசியம்மாள் மேற்பார்வையிலிருக்கிறது. வேதாகம ஸ்திரீகளின் பாடசாலையை E. விம்மர்கிரான்ஸ் மிசியம்மாள் நடத்துகிறார்கள். இவர்களையன்றி V. G. ஆசீர்வாதம், A. R. தியாபிலஸ், A. S. முத்தையா, A. T. பொனிபாசியு, S. C. டேவிட், A. மினுசோன் என்னும் இந்திய குருமார் அங்கே திருப்பணியாற்றுகிறார்கள். கருணாகரபுரியிலும் அதன் சுற்றுப்புறங்களிலும், A. இர்பே மிசியம்மாளும், G. ஸ்றீவன் ஐயரும் தொடங்கிய வேலை நாளொரு வண்ணம் வளர்ந்து வருகிறது.

---

## 13. சென்னைப்பட்டணம்.

சூல்ச்சே, பாவரீஸ், கேரிக்கே முதலிய லுத்தரன் ஐயர் மார்களால் சென்னையில் சேர்க்கப்பட்ட சபைகள் லுத்தரன் சபைகளாயிருந்ததால், தரங்கை முதலிய இடங்களிலிருந்து சென்னைக்கு ஜீவனார்த்த முகாந்திரமாய்ச் சென்ற கிறிஸ்த வர்கள் அங்கிருந்த சபையோடு சேர்ந்திருந்தார்கள். 1826-ஆம்

௵ சுவி. பிரபல்லிய சங்கத்தார் விசாரணைக்குட்பட்டும், அங்கே கடைசி ஹல்லே மிசியோனாரியாகிய ரொட்லர் ஐயர் உயிரோடிருக்கும் மட்டும் எல்லாம் அமைதலாயிருந்தது. அவர் பொதுவான ஜெப புத்தகத்தை மொழிபெயர்த்து அதன்படி தேவாராதனை செய்யத் தொடங்கினாரேயன்றி, வேறு மாற்றங்கள் செய்யவில்லை. இதைப் பொறுக்கமாட்டாதிருந்த சபையார்

Madras.

நடுவே, ரொட்லர் ஐயரின் மரணத்திற்குப்பின் (1836), ஒருபக்கம் நியாயப்பிரமாணப் போங்கில் காரியாதிகளைச் சீர்படுத்த வேண்டுமென்கிற அபிப்பிராயமுடையவர்களும், மறுபக்கம் ஆங்கிலேய அத்தியட்ச சபையின் போதகங்களையும் சடங்காசாரங்களையும் வற்புறுத்த வேண்டுமென்கிற அபிப்பிராய முடையவர்களும் புகுந்து நெருங்கவே, ஜாதி வித்தியாச விஷயத்தில் பழமையைப் பிடித்துக்கொண்டு நின்றவர்களும், போதக விஷயத்தில் பூர்வ லூத்தரன் ஐயர்மாரை அனுசரித்து நின்றவர்களும் மனவருத்தமடைந்து, 1846-ஆம் ௵ புரசைச் சுயாதீன தமிழ்ச்சபை எனப் பிரிந்து, சொந்தத்துக்கு ஒரு கல்லறைத் தோட்டம் வாங்கி, அடைக்கலம்பிள்ளை என்பவரைத் தங்களுக்கு உபதேசியாராக நியமித்துக்கொண்டு, ஒரு வீட்டில் ஆராதனை செய்து வந்தார்கள். தொகையில் 400 போாகிய இவர்கள் 2 வருஷகாலம் இப்படிச் செய்து வந்தார்கள்.

Purasawalkam.

புரசை சுயாதீன தமிழ்ச் சபையைச் சேர்ந்தவர்கள் தங்கள் நடுவே வந்திருந்த டிரெக்தர் கிரௌல் சாஸ்திரியார் மூலமாய் 1847-ஆம் ௵ ஆகஸ்டு ௴ 26-ஆம் ௳ தரங்கை லூத்தரன் மிசியோன் கான்பரன்ஸ் சங்கத்தாருக்குத் தங்கள் விஷயாதிகளை எழுதி, தங்களைச் சேர்த்து ஆதரிக்க ஐயர்மாரை அனுப்புவிக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். கான்பரன்ஸ் சங்கத்தார் மெத்த சாவதானத்தோடு அவர்கள் சங்கதிகளை எல்லாம் விசாரித்து "ஏழு கேள்விகள்" மூலமாய் அவர்களிடம் வாக்குறுதி வாங்கினார்கள். அந்த ஏழு கேள்விகளுக்கு உத்தரவாக அவர்கள் கொடுத்த உறுதிமொழியின் சாரம்:

1. அந்தச் சபை போதகத்திலும் நடக்கையிலும், லூத்தரன் திருச்சபை போதிக்கிறபடியே தேவ வசனத்துக்குத் தன்னை முற்றிலும் கீழ்ப்படுத்தவும்,

2. ஒரு பஞ்சம உபதேசியின் தள்ளுதலையும் தங்களைப் பிரத்தியேகமான ஒரு சங்கமாக எண்ணுதலையும் பற்றிய முந்தின தீர்மானங்களை ரத்து செய்யவும்,

3. தெய்வாலயத்திலும், முக்கியமாய் திரு இராப்போசனப் பந்தியிலும் ஜாதி வித்தியாசம் பாராதிருக்கவும்,

4. தரங்கன்பாடி சங்கத்தார் தங்களால் கூடிய அளவு மாத்திரம் கிருபையெத்தன பரிமாறுதலுக்கு ஏற்பாடு செய்வதை அங்கிகரிக்கவும்,

5. கோயில் கட்டடம், கோவிலூழியர் சம்பளம் முதலிய விஷயங்களுக்குந் தேவையான செலவுக்காக ஒழுங்காய்க் காணிக்கை செலுத்தவும்,

6. சங்கத்தார் குறிக்கிறபடி சுபாசுப காரியங்களில் செலுத்தும் காணிக்கைகளைக் கோயில் பொக்கிஷமாய்ச் சேர்க்கவும்,

7. சபையின் ஏழைகளைத் தன் சுய செலவில் பராமரிக்கவும் சம்மதிக்கிறது என்பதே.

இவ்வுறுதிமொழியின் பேரிலே புரசபாக்கத்துச் சபையை லுத்தரன் சபையில் சேர்த்துக் கொள்ளுகிறதென்று 1848-ஆம் ௵ செப்டெம்பர் ௴ சங்கத்தார் தீர்மானித்து, அக்டோபர் ௴ கிரெம்மர் ஐயரை அதற்குக் குருவாக நியமித்து அனுப்பினார்கள். அவர் அக்டோபர் ௴ 30-ஆம் ௳ தரங்கையிலே ஒரு பல்லக்கிலேறி, நொவம்பர் ௴ 6-ஆம் ௳ சென்னை போய்ச் சேர்ந்தார்.

Kremmer.

அவர் அந்தச் சபையை ஏற்றுக்கொண்டு, பத்து வருஷ காலம் மிகுந்த கஷ்டத்தோடு அதை நடத்தி வந்தார். அவர் ஆரம்பத்தில் குடியிருந்தது சாதாரணமாய் இந்தியர்கள் குடியிருக்கும் வீடு. அதிலேதான் ஆராதனையும் நடந்து வந்தது. பிறகு அதிக சௌகரியமான வீடு குடிக்கூலிக்குப் பிடிக்கப்பட்டது.

1856-ஆம் ௵ டிசம்பர் ௴ 6-ஆம் ௳ அடைக்கலநாதர் கோயிற் கட்டடம் முடிந்து பிரதிஷ்டையாயிற்று. இந்தக் கட்டட வேலையில் விசேஷித்த சிரத்தை எடுத்துக்கொண்டவர்கள் சொரணம் பிள்ளையும், இராசப் பிள்ளையும். அதேக் தோட்டத்தில் 1858-ஆம் ௵ அக்டோபர் ௴ 31-ஆம் ௳



**The Rev. C. F. Kremmer,**

born at Smalkalden in Hesse-Cassel on 8-9-1817, arrived in India and was ordained on 18-10-1847 and died at Tranquebar on 24-7-1887.



**The Rev. C. J. Sandegren,**

born at Naesinge in Sweden on 1-10-1841, ordained in 1868, arrived in India on 17-11-1869, pensioned in 1916 and died in Madurai 1929.



**The Rev. S. Zehme, D. D.,**

born at Lengefeld in Saxony on 7-9-1864, ordained on 17-5-1891, arrived in India on 26-9-1891 and died at Radebeul, Saxony on 8-3-1940.

பள்ளிகூடக் கட்டடத்திற்குப் பிரதிஷ்டை நடந்தது. ஜெப வீரராகிய கிரெம்மர் ஐயர் ஊழியத்தால் உண்டான பயன் கொஞ்சமல்ல. அவர் தமது பயணங்களில் செய்த பிரசங்கங்களால் சதுரங்கப்பட்டணத்தில் 1854-ஆம் ஸு ஒரு சபை சேர்ந்தது.

Adaikalanather Church.

1858-ஆம் வருஷக் கடைசியில் அவர் சென்னைப்பட்டணத்து விசாரணையைக் கெல்பர் (Kelber) ஐயரிடம் ஒப்புவித்து விட்டுத் தரங்கைக்குப் போனார். கெல்பர் ஐயரோ சீக்கிரத்தில் வியாதிப்பட்டுச் சீமைக்குப் புறப்பட்டதால் சென்னைச் சபை சிலகாலம் சுவார்ச் ஐயர் பார்வையிலும் சிலகாலம் தேடர்லேன், மயர், ஷான்ஸ் ஐயர்மார் பார்வையிலும் இருக்கவேண்டியதாயிற்று. தேடர்லேன் ஐயர் காலத்தில் (1862-ஆம் ஸு செப்டெம்பர் ஸ்ரீ 19-ஆம் உ) ஐயர்மார் குடியிருப்புக்கென்று ஒரு வீடு வாங்கப்பட்டது.

சீமைக்குப் போன கிரெம்மர் ஐயர் திரும்பி வந்தபின் 1865-ஆம் ஸு அவர் சென்னை அடைக்கலநாதர் சபையை மறுபடியும் ஒப்புக்கொண்டார். அதுமுதல் பத்து வருஷக் காலம் அங்கே உண்மையாய் உழைத்துச் சபையில் மிகுந்த ஆசீர்வாதத்தை உண்டுபண்ணினார். (அவருக்கு உதவியாக கிரால், குருபெர்ட் என்ற ஐயர்மாரும் சிலகாலம் வேலை செய்தார்கள்.) பிறகு அவர் சீமைக்குப் போகும்பொழுது சென்னை ஈலபெல்ட் ஐயர் விசாரணைக்குள்ளாயிற்று. 1876-ஆம் 1877-ஆம் வருஷப் பஞ்சத்தில் சென்னைக்கு மேற்கிலுள்ள வளர்புரம், நயப்பாக்கம், கூத்தப்பாக்கம் என்ற கிராமங்களிலிருந்து சீவனத்துக்காகப் பட்டணத்துக்கு வந்த ஜனங்கள் ஈலபெல்ட் ஐயரால் கிறிஸ்து மார்க்க உபதேசம் பெற்று, ஞானஸ்நானம் செய்விக்கப்பட்டார்கள். பஞ்சம் தெளிந்து அவர்கள் தங்கள் சொந்த ஊர்களுக்குத் திரும்பினதால் அவர்களே காஞ்சீபுரம் தாலுக்காவில் முதற் சபைகளானார்கள்.

ஈலபெல்ட் ஐயர் 1887-ஆம் ஸு பிறையாற்றுச் செமினேரிக்கு மாற்றப் பட்டதால், சீமைக்குப் போய்த் திரும்பின ஹந்துமன் ஐயர் சென்னைச் சபையை ஒப்புக்கொண்டார். அவருக்கு அங்கே பல இடையூறுகள் உண்டாகியும் 1887-ஆம் வருஷ மட்டும் அங்கேயே வேலை செய்தார். அவர் அங்கிருந்த காலத்தில் சென்னைச் சபையிலே போதுமான தொல்லைகள் இருந்ததால் வெளிக் கிராமங்களில் வேலைகள் அதிகமாய் நடக்கக் கூடாதிருந்தது. ஆயினும், அவர் முந்திச் சேர்த்திருந்த

சபைகளைச் சிதறவிடாமற் காத்து வந்தார். அவருக்கு உதவி குருவாக அமிர்தம் ஐயரும், பிறகு தே. தாவீது ஐயரும் புரச பாக்கத்தில் வேலை பார்த்தார்கள். இராயபுரத்தில் விடிவெள்ளிக் கோயில் கட்டப்பட்டது அவர் காலத்தில்தான். அது 1882-ஆம் ௵ அக்டோபர் ௴ 15-ஆம் தேதி பிரதிஷ்டையாயிற்று. முன் அங்கிருந்த செல்வராய பிள்ளை கோயில் விஷயத்திலும் சபை விஷயத்திலும் சிரத்தை யுள்ளவராயிருந்ததுபோல் அவர் பிள்ளைகளும், விசேஷமாய்த் தம்பிப்பிள்ளை என்பவரும் சிரத்தை யுள்ளவராய் ஹூந்துமன் ஐயருக்குத் துணை நின்றார்கள்.

Rayapuram Morning Star Church.

ஹூந்துமன் ஐயருக்குப் பின் சென்னைக்கு வந்த பல ஐயர் மாருள் அங்கே அதிககாலம் வேலை செய்து, செங்கற்பட்டு ஜில்லாவில் சுவிசேஷ பரம்புதலுக்கு விசேஷித்த கருவியாயிருந்தவர் 1887-ஆம் ௵ அந்த வட்டத்தை ஒப்புக்கொண்ட காபீஸ் ஐயர். புரசையில் ஐரோப்பிய குருமாருக்குத் துணையாய் நின்று வேலை செய்த சுதேச குருமார் அநேகர். அவர்களுள் அதிக காலமாய் அங்குழைத்தவர் ஞா. தேவசகாயம் ஐயர். இவரே புதிய சபையொழுங்கின்படி புரசபாக்கத்துக்கு முதற் சபை குருவாகி (1889) 1911-ஆம் ௵ வரையில் அச்சபையை விசாரித்து வந்தார். 1898-இல் சபையின் 50 வருட யூபிலி கொண்டாடப்பட்டது. அவருக்குப்பின் C. S. பாக்கியம், G. தானியேல், A. D. ஞானதிக்கம், I. A. அப்பாதுரை, D. S. பிச்சை, D. D. ரேனியுஸ், R. தேவசகாயம், D. சின்னப்பன் என்ற இந்திய குருமார் சபையை நடத்தி வந்திருக்கிறார்கள். இவர்களில் I. A. அப்பாதுரை ஐயரின் அரும் பிரயாசையால் நமது கோயில் பெரிதாய் விஸ்தரித்துக் கட்டப்பட்டு, 1936-ஆம் ஆண்டு பெப்ருவரி மாதம் 23-ஆம் ௳ பிரதிஷ்டை செய்யப்பட்டது. 1948-இல் சபையின் சதோற்சவம் R. தேவசகாயம் ஐயர் காலத்தில் ஆசரிக்கப்பட்டது; நூற்றாண்டு ஞாபகார்த்த மண்டபமொன்றும் ரூ. 35,000 செலவில் கட்டி முடிந்தது.

காபீஸ் ஐயருக்குப் பின் சென்னையில் தங்கி ஊழியம் நடத்தின கர்மானிய குருமார்களில் முக்கியமானவர்கள்: மைனர், பவர் சாஸ்திரியார், E. புருட்சர், R. புரோலிக் சாஸ்திரியார் முதலிய ஐயர்மார். இவர்களில் புருட்சர் ஐயர் நமது

ஆலயத்துக்கு முன்பாக ஒழுங்காய்ச் சுவிசேஷப் பிரசங்கம் செய்தார். காஞ்சீபுரம் முதலான இடங்களுக்குப் போய் இந்த ஊழியம் நடக்க மிகவும் கருத்தாயிருந்தார். நமது சபைக் கணக்குகள் சீராய் வைக்கப்பட நல்ல ஒழுங்குகளை வைத்துப் போனவர் இவரே.

காபீஸ் ஐயர் முயற்சியால் Fabricius பாடசாலை 8 வகுப்புகளுடன் கட்டிமுடிந்தது. அது பிறகு High School-ஆக உயர்ந்து புதிய கட்டடங்களோடு நிறைவாயிற்று. அதில் தலைமை வகித்தவர்களில் ஐயாப்பிள்ளை, M. A. வேதநாயகம், M. D. மாணிக்கம், M. தேவசகாயம் என்பவர்கள் விசேஷித்தவர்கள்.

எம்மா வொன் சோடன் என்ற முதல் தியாக்கோனியம்மாள் 1896-ஆம் ஸ்ரீ சென்னை வந்து நமது பெண் பாடசாலைக்குத் தலைமை வகித்தார்கள். அவர்களுக்குப்பின் அகுஸ்தா ஹென்சொல்ற் என்ற தியாக்கோனியம்மாளும், மரியா பம்பரீன் மிசியம்மாளும் இவ்வேலையைத் தொடர்ந்து நடத்தினார்கள். இப்போது M. மத்தேஸ் என்ற தியாக்கோனியம்மாள் பல்லாண்டுகளாக வெகு திறமையுடன் அவ்வேலையை நடத்தி வருகிறார்கள்.

சென்னை சபை ஆத்மீக கண்காணிப்பின் பொருட்டு 1952-ஆம் ஸ்ரீ மார்ச்சு மாதத்தில் இரு பிரிவாகப் பிரிக்கப்பட்டது. இப்போது புரசைச் சபையின் ஆத்துமாக்கள் 1814 பேர். கீழ்ப்பாக்கம் சபையின் ஆத்துமாக்கள் 1062 பேர். கீழ்ப்பாக்கம் கோயிலுக்கென்று நிலம் வாங்க சங்கத்தார் கொடுத்தது ரூ, 24000. கோயில் கட்ட மதிப்பு ரூ. 1,50,000.

சென்னை கீழ்ப்பாக்கத்தில் வேதசாஸ்திரப் பயிற்சிக்கென Dr. சாந்தகிரேன் ஐயர் 1927-ஆம் ஸ்ரீ குருக்கள் வகுப்பை ஏற்படுத்தினார். அதுமுதல் நான்கு வகுப்புகளில் குரு ஊழியத்திற்கென மாணவர் பயின்றிருக்கிறார்கள்.

இராயபுரம் விடிவெள்ளிக் கோயிற் சபை சுதேச குருவினால் நடத்தப்படுகிறது. G. ஈசாக்கு, J. ஆரோக்கியம், C. S. பாக்கியம், T. S. S. யாக்கோபு, ஞா. தேவசகாயம், S. D. ஞானச்சரியம், S. தேவப்பிரசாதம், K. A. தாவீது, A. P. சாமுவேல், D. S. பிச்சை, D. ராஜரீகம், J. குமரேசன், D. எபனேசர் என்ற குருமார் இங்கே ஊழியம் செய்திருக்கிறார்கள்.

---

## 14. செங்கற்பட்டு ஜில்லா.

லைப்சிக் மிசியோன் சம்பந்தமாய் செங்கற்பட்டு ஜில்லாவில் வேலை ஆரம்பித்தவர் கிரெம்மர் ஐயர். 1848-ஆம் ௵ அவர் சென்னை புரசபாக்கம் சபையின் குருவானபின் பிரயாணங்களில் அவர் செய்த பிரசங்க வேலையினால் சதுரங்கப் பட்டணத்தில் ஒரு சபையை 1854-ஆம் வருஷத்தில் சேர்த்தார். 1876-ஆம் 1877-ஆம் வருஷ பஞ்சத்தில் காஞ்சீபுரம் தாலுக்கா நயப்பாக்கம், வளர்புரம், கூத்தப்பாக்கம் என்ற கிராமங்களிலிருந்து வந்த ஜனங்களைப் போதித்து ஞானஸ்நானங் கொடுத்து, சபையில் சேர்த்தவர் ஈலபெல்டு ஐயர். இதற்குப் பின் பத்து வருஷகாலமாய்ப் புதிய சபைகள் அவ்வளவாய்ச் சேர்ந்ததில்லை. 1887-ஆம் ௵ புரசபாக்கம் சபையின் விசாரணை குருவான காபீஸ் ஐயர் கிராமங்களில் செய்த சுவிசேட வேலையைக் கர்த்தர் ஆசீர்வதித்ததால் 1889-ஆம் 1890-ஆம் வருஷங்களில் அநேகர் ஞானஸ்நானம் பெற்றார்கள். இப்படியே சென்னைக்கு வெளியே சபைகள் பெருகத் துவக்கினதால் 1891-ஆம் ௵ செங்கற்பட்டு சேகரம் சென்னையினின்று பிரித்துப் பிரத்தியேகமாக்கப்பட்டு, அத்தோடு சதுரங்கபட்டணம், காஞ்சீபுரம், கூத்தப்பாக்கம் முதலிய ஊர்களும் சேர்க்கப்பட்டன. அந்த வட்டத்தை விசாரணை செய்த குருமார் வாடகை வீட்டில் குடியிருந்ததால், 1897-ஆம் ௵ மிசியோனுக்குச் சொந்தமான பங்களா ஒன்று செங்கற்பட்டில் கட்டப்பட்டது. அதில் கன்னகீசர் ஐயர் குடியேறினார். அது பிற்காலத்தில் விற்கப்பட்டது. சதுரங்கப்பட்டணத்தில் கோயில் இடிந்து உபயோகமற்றுப் போனதை சென்னைவட்ட காரியதரிசி C. H. தானியேல் என்பவர் முயற்சி எடுத்து சென்னை சபையும் சிநேகிதரும் அளித்த தொகையோடு ஆலோசனை சங்கத்தாரின் உதவியும் பெற்று அதை மீண்டும் 1955-ஆம் ௵ எப்ரல் ௴ கட்டிமுடிக்க அத்தியக்ஷர் J. சாந்தகிரேன் அவர்கள் அருள்நாதர் ஆலயம் என்ற பெயரோடு அதைப் பிரதிஷ்டை செய்தார்.

Chingleput.

சீமைக்குப் போயிருந்த காபீஸ் ஐயர் திரும்பி வந்து ஆலோசனைச் சங்கத் தலைவராகச் சிலகாலம் வேலை பார்த்தபின் 1893-ஆம் ௵ சென்னை வட்டத்தை மறுபடியும் ஒப்புக்கொண்டு ஸ்ரீபெரும்பூதூருக்குச் சமீபமான வளர்புரம், நயப்பாக்கம், மப்பேடு, கொண்டஞ்சேரி என்ற புதுக்கிராமச் சபைகளை விசாரணை செய்ததுமல்லாமல் விசேஷமாகத் திருவள்ளூர் தாலுக்காவில் சுவிசேஷ வேலை ஆரம்பித்தார்.

தேவதயவால் 1893-ஆம் ஹு டிசம்பர் மாதம் 31-ஆம் வ திருவள்ளூர் தாலுக்காவின் இந்துக்களில் முதல் விசையாக 42 பேருக்குப் பட்டரைப் பெரும்புத்தூரில் ஞானஸ்நானங் கொடுக்கப்பட்டது. அப்படியே 1894-ஆம் ஹு நவம்பர் மீ 18-ஆம் வ கன்னங்காரணையில் அநேக இந்துக்களுக்கும், 1895-ஆம் ஹு சூலை மீ 12-ஆம் வ பாண்டூர் இந்துக்களில் பலருக்கும், கைவண்டூரில் அநேக இந்துக்களுக்கும் ஞானஸ்நானங் கொடுக்கப்பட்டது. ஆக 1893-ஆம் வருஷமுதல் 1901-ஆம் வருஷ மட்டும் ஞானஸ்நானம் பெற்றவர்கள் 3000-க்கு அதிகம். இந்தக் கிறிஸ்தவர்கள் வசித்த கிராமங்களை திருவள்ளூர், ஸ்ரீபெரும்பூதூர், அரக்கோணம், என்ற மூன்று சேகரங்களாகப் பிரித்து, மூன்று சுதேச குருமாருடைய பார்வையில் வைத்து, திருவள்ளூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபமாய் பெரிய குப்பத்தில் ஐரோப்பிய குருவுக்கு வாசஸ்தானம் ஏற்படுத்தலாயிற்று. காபீஸ் ஐயர் 1901-ஆம் ஹு சீமைக்குப் போகும்போது திருவள்ளூர் வட்டத்தைத் தனிச் சேகரமாக்கி, கேப்ளர் ஐயர் விசாரணைக்கு ஒப்புக்கொடுத்தார். திருவள்ளூர் குருவின் வீடு 1901-ஆம் ஹு சூலைமீ 5-ஆம் வ கிரகப்பிரவேசமாகவே, கேப்ளர் ஐயர் அதில் வசிக்கலானார்.

Tiruvallore.

இதுவும் ஒரு குருவின் விசாரணைக்கு மிஞ்சின விஸ்தீரணமான சேகரமென்று மேலானவர்கள் கண்டு, பாண்டூர் வட்டத்தை ஏற்படுத்தி, அவ்வூரைத் திருவள்ளூரின் 14 கிராமங்களுக்கும் மத்திய ஸ்தலமாக்கினார்கள். சீமைக்குப்போன காபீஸ் ஐயர் 1903-ஆம் வருஷம் திரும்பி வந்து, பாண்டூர் மிஷன் பங்களாவை 1904-ஆம் ஹு செப்டெம்பர் மாதம் 8-ஆம் வ பிரதிஷ்டை செய்து, அதுமுதல் இப்புதிய சேகரத்தை விசாரணை செய்து வந்தார்.

Tiruvallore.

இந்த வட்டத்திலே மற்ற வட்டங்களுக்கு வித்தியாசமாய் நடந்திருக்கிற ஒருமுக்கிய விசேஷம்: அங்குள்ள ஏழைக் கிறிஸ்தவர்கள் வேலை செய்து முன்னுக்கு வரும்படிக்கான கருத்தோடு கனகவல்லிபுரம், பாண்டூர், கைவண்டூர், கன்னங்காரணை என்ற கிராமங்களில் மிசியோனுக்குப் பூஸ்திதிகள் ஏற்பட்டிருப்பதே. அவர்கள் சரீரப் பிழைப்புக்குள்ள குறைவுகளால் அவர்கள் ஆத்தும சுகத்துக்குப் பங்கம் வராது தடுப்பதே

Mission Farms.

மேலோர் இவ்வழியில் புகுந்த நோக்கம். இதனால் ஒருவாறு நன்மை விளைந்தும், அதிக நன்மை விளையக்கூடியதாயிருந்தும், ஆரம்பமுதல் மறைக்குறைவினால் மிகுந்த சங்கடம் உண்டாகியிருக்கிறது. K. ஹெல்லர் ஐயர் முயற்சியால் காரியங்கள் விர்த்தியடைந்துவருகிறது.

தாம்பரத்திற்கு சென்னை கிறிஸ்டியன் காலேஜ் இடம் பெயர்ந்ததால் இங்கு பல கிறிஸ்தவ குடும்பங்கள் குடியேற நேரிட்டது. காலேஜைச் சேர்ந்த வீடுகளில் சிலகாலம் தேவாராதனை நடந்தது. 1953-ஆம் ௵ ஜூலை ௴ சுவீடன் தேச பிரதம அத்தியக்ஷரால் ஒரு புதிய தேவாலயத்திற்கு அஸ்திபாரம் போடப்பட்டது. 1956-ஆம் வருஷ முடிவுக்குள் கட்டடம் முடியுமென நம்புகிறோம். தாம்பரம் சபையில் 326 ஆத்துமாக்களுண்டு. இங்கு J. D. ஆசீர்வாதம், R. S. தேவானுக்கிரகம், A. J. சத்தியநாதன் என்ற குருமார் பணியாற்றி இருக்கிறார்கள்.

---

## 15. ஈரோடு, ஏற்காடு

ஈரோடு வட்டம் 1888-ஆம் ௵ ஏற்படுத்தப்பட்டு, முதல் முதல் ஹோர்பர்க் ஐயருக்கு ஒப்புவிக்கப்பட்டது. அப்போது ஈரோடு கஸ்பாவில் இருந்த சுவி. லுத்தரன் சபைக் குடும்பங்கள் 3. சுற்றுக் கிராமங்கள் உள்பட முழு வட்டத்திலும் இருந்த நமது கிறிஸ்தவர்களின் தொகை 149.

Erode.

ஆரம்பத்தில் ஐயர் குடியிருப்புக்காக ஒரு சிறு பங்களாவை வாங்கி அதிலே சங்கடத்துடன் தேவாராதனை நடத்தி வந்தார்கள். பிறகு பள்ளிக்கூடம் ஒன்றைக் கட்டி அதில் ஆராதனையும் நடக்கும்படி ஹோர்பர்க் ஐயர் ஏற்பாடு செய்தார். அவருக்குப்பின் அங்கே வந்தவர் ரீகர் ஐயர். அவர் விசாரணையிலிருந்த கிறிஸ்தவர்கள் 167.

ஈரோடுக்குச் சமீபமான பெரிய அக்கிரகாரம் என்ற கிராமத்தில் பெரிய சாந்தகிரேன் ஐயரால் ஞானஸ்நானம் பெற்ற ஒரு கிறிஸ்தவ சக்கிலியன் குடியிருந்தான். மிகுந்த வியாதியாயிருந்த அவனை ஹோர்பர்க் ஐயர் அடிக்கடி சந்தித்து வந்தார். அச்சமயங்களில் அவர் அங்கிருந்த மற்றச் சக்கிலியர்களுக்கும் சுவிசேஷம் பிரசங்கித்ததால், பிற்பட்டு அவர்

களுக்குள் அசைவுண்டாகி அவர்களில் பலர் சபையில் சேர ஏதுவாயிற்று. இப்போது ஈரோடும், எற்காடும், திருப்பூர் குருசேகரத்தில் சேர்ந்திருக்கின்றன.

ஹோர்பர்க், ரீகர் என்ற ஐயர்மாருக்குப்பின் பெக்சல், யோகான்சன், ஹைமர், ஷேபர், பவர், புளும்ஸ்திராண்டு என்ற ஐயர்மார் அந்த வட்டத்தை விசாரித்து வந்தார்கள். யோகான்சன் ஐயர் முயற்சியால் 1899-ஆம் வருஷம் ஒரு சௌகரியமான பங்களா கட்டி முடிந்ததுமன்றி ஊருக்குள் ஒரு புதிய பள்ளிக்கூடமும் ஸ்தாபிக்கப்பட்டது. அவைகள் பிற்காலத்தில் விற்கப்பட்டன.

---

## 16. தென் ஆற்காடு ஜில்லா.

ஆதி ஐயர்மார்களால் கூடலூரில் சபை உண்டான வயணத்தை எற்கனவே தெரிவித்திருக்கிறோம். ஆயினும், கூடலூரைச் சார்ந்த தூக்கணாம்பாக்கம் வாசியாகிய ஒரு விருத்தாப்பியன் 1851-ஆம் ஹூ எப்ரில் மீ 27-ஆம் உ கிரெம்மர் ஐயரால் சென்னையில் ஞான ஸ்நானம் பெற்றதே கூடலூரில் லைப்சிக் மிசியோன் வேலையின் ஆரம்பமாம். அது தொட்டு அதே கிராமத்தில் பலரும் ஞானஸ்நானம் பெற்றுச் சபையில் சேர்ந்தார்கள். அன்றியும் வெகுகாலத்துக்கு முன் தரங்கையிலிருந்து வந்து கூடலூரிலும் புதுச்சேரியிலும் குடியேறியிருந்த சில கிறிஸ்தவர்கள் சென்னையிலிருந்து தரங்கன் பாடிக்குப் பயணமாய்ப் போகிற கிரெம்மர் ஐயரைக் கண்டு தங்கள் சங்கதியை அவருக்குத் தெரிவித்து, தங்களைச் சபையில் ஏற்று விசாரணை செய்யும்படி கேட்டுக்கொள்ள, அவர் அப்படிப்பட்டவர்களை 1853, 1854-ஆம் வருஷங்களில் ஏற்றுக் கொண்டார். ஆகவே 1856-ஆம் வருஷத்தில் சதுரங்கப்பட்டணம் உள்பட கூடலூர் வட்டத்தில் இருந்த கிறிஸ்தவர்கள் 170.

Cuddalore.

Sadras.

1854-ஆம் வருஷமுதல் சதுரங்கப்பட்டணத்தில் வாசஞ் செய்து, அங்கிருக்கும் கோயிலைக் (1855) கட்டின பயர்லேன் ஐயர் 1857-ஆம் ஹூ மார்ச்சு மீ முதல் கூடலூரிலேயே வசித்து, அந்த வட்டத்தை விசாரிக்கத் துவக்கினார். தேவ தயவால் அவருடைய வேலை ஆசீர்வாதம் பெற்று, சபை பெருகிற்று. பள்ளிக்கூடமும் முன்னுக்கு வந்தது.

ஆயினும், ஆராதனைக்குத் தகுந்த இடமும், கல்லறைத் தோட்டமும் இல்லாமல் சங்கடப்பட்டார். போகுமிடமெல்லாம் இந்துக்களும் ரோமானித்தாரும் இடையூறு செய்தார்கள்.

Semmandalam.

கடைசியாக, செம்மண்டலமென்னும் நகர்ப்புறத்தில் காடாய்க்கிடந்த ஒரு துண்டு நிலம் சர்க்கார் உதவியால் கிடைத்தது. பயர்லேன் ஐயர் காட்டையழித்து, தமது குடியிருப்புக்காக ஒரு கூரை வீட்டைக்கட்டி 1859-ஆம் வருஷம் குடியேறினார். அதே வருஷம் கர்த்தர் பிறந்த பண்டிகையில் கோயில் கட்டடத்தையும் பிரதிஷ்டை செய்யக் கூடியதாயிற்று. அதன் பக்கத்தில் கல்லறைத் தோட்டமும் ஏற்படுத்தப்பட்டது. பிற்பட்டு, கூரை வீடு மெத்தைவீடும், கோயில் மணிக்கூண்டு கோபுரமுள்ளதுமாகக் கர்த்தர் கிருபை செய்தார். சபையில் அநேக இந்துக்களும், ரோமானித்தாரும் சேர்ந்தார்கள். கூடலூருக்கு வெளியேயும் கர்த்தர் மிசியோன் வேலையை வாய்க்கப்பண்ணினார். சிதம்பரத்துக்கடுத்த கிராமங்களில் இந்துக்கள் 40 பேரும் 50 பேருமாக வந்து உபதேசமடைந்து ஞானஸ்நானம் பெற்றார்கள். கூடலூர் வட்டத்துக் கோயில் தஸ்தாவேசுகளின்படி 1857-ஆம் வருஷமுதல் 1870-ஆம் வருஷமட்டும் ஞானஸ்நானம் பெற்றவர்கள் 700, ரோமான் சபையை விட்டு வந்தவர்கள் 200.

சபை பெருகப் பெருக, வட்ட விசாரணை குருவின் வேலையும் அதிகரித்ததால், முந்திச் சதுரங்கப்பட்டணத்தைச் சென்னை வட்டத்தோடு சேர்த்து, பிறகு சிதம்பரத்தை பிரத்தியேகமான வட்டமாக்கினார்கள். இதனால் அப்பொழுது கூடலூர் வட்டத்துக் கிறிஸ்தவர்களின் தொகை 200 ஆயிற்று. ஆயினும், 1872, 1873, 1877, 1878-ஆம் வருஷங்களில் அநேக ஜனங்கள் ஞானஸ்நானம் பெற்றுச் சபையில் சேர்ந்தார்கள். பயர்லேன் ஐயருக்குப்பின் வந்த பல ஐயர்மார்களில் ஹெரே ஐயர் அங்கே நெடுநாள் (1876—1886) வசித்து கிறிஸ்தவர்கள் நடுவிலும், இந்துக்கள் நடுவிலும் அதிகவேலை செய்தார்.

Panruti.

தென் ஆற்காட்டுக் கலெக்டர் ரீட் துரை பண்ணுருட்டியில் தமது செலவில் மிசியோன் வேலைக்காக கட்டியிருந்த பங்களா, கோயில், பள்ளிக்கூடம் முதலிய கட்டடங்களை 1886-ஆம் ஹு நமது மிசியோனுக்கு வெகுமதியாகக் கொடுத்ததால், அதுமுதல் அங்கேயும் நமது ஐயர்மார் திருப்பணி செய்து வந்தார்கள்.

சிதம்பரம் பிரத்தியேகமானது 1866-ஆம் வருஷம். அந்த வருஷம் ஒரு சிறு கோயில் கட்டி அதில் ஆராதனை நடத்தப்பட்டது. அந்தச் சேகரத்தை நல்ல நிலைமைக்குக் கொண்டு வருவதற்கு வொல்ப் ஐயர் மிகவும் பிரயாசைப்பட்டார். அவர் முந்தக் குடியிருந்தது ஒரு சத்திரத்தில், பிறகு அவர் ஒரு மிசியோன் பங்களாவைக் கட்டத் துவக்கி 1869-ஆம் ஸ்ரீ அக்டோபர் மீ முடித்தார். மன்னார்குடி, வீரசோழகம், தெம்மூர், கொமராக்ஷி, இளங்கம்பூர், பெருமாத்தூர், கூடுவெளி முதலியவைகள் சிதம்பர வட்டத்திலுள்ள கிராமங்களில் விசேஷித்தவை. வொல்ப் ஐயர் 1884-ஆம் ஸ்ரீ மரிக்கும்போது அந்த வட்டத்திலுள்ள கிறிஸ்தவர்களின் தொகை 893.

Chidambaram.

அவருக்குப்பின் அது பல ஐயர்மார் விசாரணையில் இருந்திருக்கிறது. அவர்களில் முக்கியமானவர் R. ஷொமேருஸ் ஐயர். இப்பொழுது சிதம்பர வட்டத்தில் சபையார் தொகை 2550. அங்கு திருப்பணி செய்திருக்கும் இந்திய குருமாரில் விசேஷித்தவர்கள்: D. ஞானதிக்கம், G. தானியேல், S. தேவப்பிரசாதம், S. தாவீது, D. A. யாக்கோபு, S. W. சவரிமுத்து, G. சாமுவேல் அந்திரேயா என்பவர்கள். சபை குருவின் மேல் விசாரணையின்கீழ் ஒரு உயர்தர ஆரம்ப பாடசாலையும் மாணவர் விடுதியும் உண்டு.

விழுப்புரமும் கூடலூர் வட்டத்திலிருந்து பிரிந்த புதுச் சேகரமே. ஷெப்பர் ஐயர் கூடலூர் வட்டத்தை விசாரித்து வருகிறகாலத்தில் விழுப்புரத்திலே அநேக ஜனங்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, அவர்களைச் சபையிற் சேர்த்தார். நாள்வட்டத்தில் பெருகிவந்த சபையைக் கூடலூரிலிருக்கிற ஐயர் விசாரிப்பது கஷ்டமாயிருந்ததால் அதைப் பிரத்தியேக வட்டமாக்குவது உசிதமென்று சீமைச் சங்கத்தார் 1874-ஆம் ஸ்ரீ தீர்த்தார்கள். அப்பொழுது அங்கிருந்த கிறிஸ்தவர்கள் 230. திண்டிவனத்தை மத்திப ஸ்தானமாக்கி, பைசன்ஹெர்த்ஸ் ஐயர் அதை விசாரிக்கிறதென்று எற்பாடு செய்தும், தகுந்த இடமில்லாமையால், அவர் கூடலூரில் இருந்தே விசாரிக்க வேண்டியதாயிருந்தது.

Villupuram,

1879-ஆம் ஸ்ரீ புருஞேட்டே ஐயர் விழுப்புரம் விசாரணை குருவாகி, 1894-ஆம் ஸ்ரீ தாம் பென்ஷன் பெற்றுச் சீமைக்குப்

போகிறவரையில் அங்கே வசித்தார். அவரால் ஞானஸ்நானம் பெற்றுச் சபையில் சேர்ந்தவர்கள் ஏராளம். 1875-ஆம் வருஷ முதல் 1894-ஆம் வருஷமட்டும் அந்த வட்டத்தில் ஞானஸ்நானம் பெற்றவர்கள் 800-க்கு அதிகம். ஆயினும், இப்பொழுது அங்கிருக்கும் கிறிஸ்தவர்கள் 500. புருனொட்டே ஐயருக்குப் பின் அந்த வட்டத்தை விசாரித்த மத்தேஸ் ஐயர் புதுக் கிறிஸ்தவர்களிடத்திலும் மிசியோனாழியரிடத்திலும் வெகு உண்மைத் தாழ்ச்சியைக் கண்டு விசனமுற்றார். இவர் காலத்தில் விழுப்புரத்திலே மிடில்ஸ்கூல் ஸ்தாபகமாயிற்று. அவருக்குப்பின் ஷொமேருஸ் ஐயர் அங்கே மாற்றப்பட்டார். அவரால் பாடசாலைக் கட்டடம் கட்டப்பட்டது. பிறகு ரீகர், கேப்ளர், பிரோலிக் ஐயர்மார் அங்கு உழைத்திருக்கிறார்கள். சென்ற பல ஆண்டுகளாய் இவ்வட்டம் இந்திய குருமாரின் விசாரணைக்குள்ளாக இருக்கிறது. அவர்களில் விசேஷித்தவர்கள்: S. சாலமோன், R. தேவசகாயம், P. சமாதானம், B. கார்ல் சாமுவேல், D. S. பிச்சை, T. சவரிநாதன், S. A. ஆரோக்கியசாமி என்பவர்கள்.

---

## 17. மதுரை.

பூர்வம் தரங்கை மிசியோன் ஆரோன் முதலிய இந்திய குருமாரும், கி. பி. சுவார்ச் ஐயர் முதலிய ஐரோப்பிய குருமாரும் பாண்டிய நாட்டிற்குப் பலமுறை வந்து போனதும், அங்கே சுவிசேஷ லுத்தரன் கிறிஸ்தவர்கள் இருந்ததும் உண்டு. சிலகாலத்துக்குப்பின் யாழ்ப்பாணத்து அமெரிக்க மிசியோனெரிகளும், S. P. G. ஐயர்மார்களும் மதுரைக்கு வந்து அங்கே வேலை தொடங்கினார்கள். 1855-ஆம் ௵ S. P. G. ஐயர்மார் மதுரையை விட்டு இராமநாதபுரம் சீமைக்குப் போய்விடவே, மதுரையில் அமெரிக்கன் மிசியோன் மாத்திரமே வேலை செய்யும்படியாயிற்று.

Madura.

இப்படியிருக்க, திருச்சினாப்பள்ளியில் நமது மிசியோன் ஸ்தாபகமானபின், அங்கிருந்த நமது கிறிஸ்தவர்களில் பலர் மதுரைக்கு வந்து குடியேறினார்கள். அன்றியும், திண்டுக்கல்லுக்குச் சமீபமான பஞ்சம்பட்டியில் ஒரு சிறு சபை உண்டாயிருந்தது. இவர்களுடைய ஆத்தும விசாரணை திருச்சி

வட்டத்துக் குருவுக்குட்பட்டேயிருந்தது. இக்காலத்தில் அமெரிக்கன் மிசியோனில் அதிருப்தியடைந்திருந்த நடுக்கோட்டைக் கிறிஸ்தவர்களில் சிலர் நமது சபையில் சேர விரும்பி, சங்கத்தாருக்கு விண்ணப்பம் அனுப்பினார்கள். ஐயர்மார் இருபுறத்து நியாயங்களையும் கேட்டறிந்தபின், ஹந்துமன் ஐயர் 1868-ஆம் ௵ சூலை ௴ 16-ஆம் ௳ மூன்று குடும்பங்களைச் சுவி. லுத்தரன் சபையில் ஏற்றுக்கொண்டார். அதுமுதல் மதுரை, திருச்சி வட்டத்துக் கிளைச் சேகரமாயெண்ணப்பட்டது. மதுரைக்கும் திருச்சிறாப்பள்ளிக்கும் அக்காலத்தில் இருப்புப் பாதைச் சம்பந்தம் இல்லாதிருந்தும், ஹந்துமன் ஐயர் அடிக்கடி அவ்விடம் வந்து ஆத்ம விசாரணை செய்துபோனார். வேலையில் அவருக்கு உதவியாளாயிருந்தவர் கிறிஸ்தியான் ஐயர்.

1872-ஆம் ௵ திருச்சியில் ஹந்துமன் ஐயரின் இடத்துக்கு வந்தவர் கால் ஐயர். வரமிகுத்த இந்த குருவோ 2 வருஷத்தில் இறந்து போனாலும், அக்குறுகிய காலத்திலே நன்றாயுழைத்தார். கால் ஐயருக்குப்பின் திருச்சிக்கு வந்த வில்கொம் ஐயர் மதுரையில் குடியிருந்து அதைப் பிரத்தியேக சேகரமாய் விசாரிக்க உத்தரவு பெற்று, 1875-ஆம் வருஷ ஆரம்பத்தில் அவ்விடம் வந்து ஒரு வாடகை வீட்டில் குடியிருந்தார். மதுரைக் கஸ்பாவில் ஏற்கனவே இருந்த நமது சபையார் இரண்டே விதவைகள். 1874-ஆம் ௵ சிலபேர் சபையிற் சேர்ந்தார்கள். 1875-ஆம் வருஷமுடிவில் ஐயரும், உபதேசியாரும் உள்பட மதுரையில் சபையார் தொகை 30. பஞ்சம்பட்டி, அம்மாபட்டி, நடுக்கோட்டை, செம்பட்டி, அத்திப்பட்டி, ராமநாதபுரம் என்ற சுற்றுக் கிராமங்களில் இருந்தவர்களைச் சேர்த்தால் 96 ஆகும். வில்கொம் ஐயர் அங்கிருந்தது ஒரு வருஷ காலந்தான். பிறகு அவர் வேறு சில ஐயர்மாரோடு நமது மிசியோன் சம்பந்தத்தை விட்டுச் சீமைக்குத் திரும்பினார்.

இதனால் மதுரை வட்டம் மறுபடியும் திருச்சிறாப்பள்ளி ஐரோப்பிய குருவாகிய மயர் ஐயரின் விசாரணைக்குள்ளாயிற்று. இந்திய குருவாகிய சாமிதாஸ் ஐயர் மதுரையில் வசித்து சபை வேலை பார்த்துவந்தார். அவர் திருநெல்வேலியில் இருந்த நமது கிறிஸ்தவர்களையும் விசாரித்து வந்தார்.

மயர் ஐயர் சீக்கிரத்தில் திருச்சி, மதுரை விசாரணையை விட்டு, 1877-ஆம் ௵ மார்ச்சு ௴ இரங்கூனுக்குப்போக உத்தரவாயிற்று. அவர் இரங்கூனிலிருந்து சூன் ௴ திரும்பி வந்து

கிரெம்மர் ஐயருக்கு மேற்படி வட்டங்களை ஒப்புவித்தார். மயர் ஐயர் மதுரையை விசாரித்தது சொற்பகாலமாயினும், அவர் சில ஆத்துமாக்களைச் சபையில் சேர்க்கக் கூடியதாயிற்று.

சாமிதாஸ் ஐயர் 1877-ஆம் ஷூ அக்டோபர் மீ 25-ஆம் உ விஷபேதியால் மரித்தார். அவருக்குப்பின் ஆசீர்வாதம் ஐயர் திருச்சியில் இருந்த கிரெம்மர் ஐயருக்கு உதவியாக மதுரையில் வேலை பார்த்தார். 1878-ஆம் ஷூ மே மீ முன்போல் மதுரை ஒரு ஐரோப்பிய குரு வசிக்கும் சேகரமாகி, கிரெம்மர் ஐயர் அவ்விடம் வந்து சேர்ந்தார். முப்பது வருஷத்து அனுபவமுள்ள உழைப்பாளியாகிய அவர் 1884-ஆம் வருஷமளவும் அந்த வட்டத்தில் செய்த வேலையால் ஆசீர்வாதமுண்டாயிற்று. விசேஷமாய் 1878-1879-இல் உண்டான பஞ்சத்திலே நடுக்கோட்டை, காடனேரி, செம்பட்டி, பேரையூர், வண்டாரி, வண்ணான் குளம் முதலிய இடங்களில் சற்றேறக்குறைய 800 பேர் ஞானஸ்நானம் பெற்றார்கள். இந்தக் காலத்தில் கிரெம்மர் ஐயருக்கு உதவியாக முந்த பெரியநாயகம் ஐயரும், பிறகு அமிர்தம் ஐயரும் அனுப்பப்பட்டார்கள். இவர் பேரையூரில் வாசஞ் செய்தார்.

Villages.

1879–1880-ஆம் ஷூ-த்தில் வெங்கிடாசலபுரம், மல்லான் கிணறு என்ற இடங்களில் சபைகள் உண்டாயின. 1881-ஆம் வருஷ முடிவில் மதுரை கஸ்பாவையும், நடுக்கோட்டையையும் தவிர மற்றிடங்களில் இருந்த கிறிஸ்தவர்களின் தொகை 999. அப்போது அந்தோனிப் பிரசங்கியார் அங்கே அனுப்பப்பட்டார். அவர் குருப்பட்டம் பெற்ற பின்னும் வெகுகாலம் மதுரை வட்டத்தில் வேலைசெய்தார்.

ஆங்காங்குண்டான சபைகளுக்கு ஆராதனை ஸ்தலங்களைச் சவதரிப்பதும், பள்ளிக்கூடங்களை ஸ்தாபிப்பதும் அவசியமாயிற்று. 1880-ஆம் ஷூ பேரையூர், காடனேரி, என்ற இடங்களிலும், 1881-ஆம் ஷூ வெங்கடாசலபுரத்திலும், மறவர்பட்டியிலும் ஜெபவீடுகள் கட்டப்பட்டன. அதே வருஷத்தில் பேரையூரிலும், காடனேரியிலும் பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிக்கப்பட்டன. 1877-ஆம் ஷூ பஞ்சத்தில் சேர்ந்த பிள்ளைகளுக்காகத் திருச்சினாப்பள்ளியில் ஸ்தாபித்திருந்த பெண் பாடசாலை 1882-ஆம் ஷூ டிசம்பர் மீ மதுரைக்குக் கொண்டுவரப்பட்டது. அப்பொழுது அதில் இருந்த பெண்கள் 16.

1882-ஆம் வருஷம் அக்டோபர் மாதத்தில் சீமையிலிருந்து திரும்பின C. J. சாந்தகிரேன் ஐயர் மதுரைக்கு மாற்றப்பட்டு அந்த வட்டத்தின் வடபாகத்தைப் பார்த்து வந்தார். அடுத்த வருஷக் கடைசியில் அமிர்தம் ஐயர் இறந்துபோனார். 1884-ஆம் வருஷம் கிரெம்மர் ஐயர் தரங்கைக்குப் போகவே, மதுரை வட்டம் முழுவதும் சாந்தகிரேன் ஐயர் விசாரணைக்குள்ளாயிற்று. இவர் காலத்திலே மதுரை கஸ்பாவில் மிசியோனுக்கு அவசியமான கட்டடங்கள் ஒன்றன்பின் ஒன்றாய்க் கட்டப்பட்டு, மிசியோன் வேலை அங்கே உறுதிப்பட ஏதுவாயிற்று. வெளிக் கிராமங்களிலும் அப்படியே. 1890-ஆம் வருஷம் சின்னையாபுரத்தில் 22 பேர் ஞானஸ்நானம் பெற்றதால் சபை பலப்பட்டது. ஆயினும் அவர்களுக்கு இந்துக்களால் உண்டான இடைஞ்சல் கொஞ்சமல்ல. மறுவருஷம் அங்கே 'சிலுவைக் கோயில்' கட்டப்பட்டது. சோளாண்டி, கொரண்டி, மங்கம்பட்டி என்ற இடங்களிலும் சபைகள் உண்டாயின. 1891-ஆம் வருஷம் டிசம்பர் மீ மதுரைக் கோயிலுக்கு அஸ்திபாரம் போடப்பட்டது. அது 1893-ஆம் ஹூ மே மீ 24-ஆம் உ முடிந்து இரட்சணிய கோயில் என்று பெயர்பெற்று பிரதிஷ்டையாயிற்று.

இந்து ஸ்திரீகளுக்குள் திருப்பணி நடப்பதற்கு ஏற்பாடாகி 1890-ஆம் வருஷம் பேத்தர்சன் மிசியம்மாள் அதற்காக அனுப்பப்பட்டார்கள். அவர்கள் நல்முயற்சியோடு துவக்கின வேலையைத் தொடர்ந்து செய்யக்கூடாமல் வியாதிப்பட்டதால் 1894-ஆம் ஹூ சீமைக்குப் போகவே, அவர்களுக்கு உதவிக்காக இருந்த இந்திய ஸ்திரீகள் அதை நடத்திவந்தார்கள். 1896-ஆம் வருஷம் புரொத்செல் மிசியம்மாள் அதைத் தொடர்ந்து சுவேதிஷ் மிசியோன் கிளை வட்ட ஏற்பாடான 1901-ஆம் வருஷமட்டும் நடத்தினார்கள்.

Zenana work.

1894-ஆம் வருஷம் சாந்தகிரேன் ஐயர் இடத்துக்கு Th. புளும்ஸ்திராண்டு ஐயர் வந்தார். சாந்தகிரேன் ஐயர் சீமைக்குப் போனார். அப்பொழுது மதுரை வட்டத்தில் இருந்த ஆத்துமாக்கள் 933. புதிதாய் வந்த Th. புளும்ஸ்திராண்டு ஐயர் பல சங்கடங்களினிடையில் வேலைசெய்ய வேண்டியதாயிற்று. பேரையூரில் 1894-ஆம் ஹூ அஸ்திபாரம் போடப்பட்ட கோயிலை அவர் கட்டி முடித்து 1898-ஆம் ஹூ

பிரதிஷ்டை செய்தார். பேரையூரிலும், காடனேரியிலும் பலர் ஞானஸ்நானம் பெற்றார்கள். 1894-ஆம் வருஷமுதல் 1898-ஆம் வருஷமட்டும் ஞானஸ்நானம் பெற்றவர்கள் தொகை 217.

1899-ஆம் வருஷம் புளூம்ஸ்திராண்டு ஐயர் ஈரோடுக்கு மாற்றப்பட்டு, ஷாட் ஐயர் மதுரைக்கு வந்தார். அவர் வந்த சிலகாலத்திற்குள் சாணார், மறவர் கலகம் உண்டானதால், மிசியோன் வேலைக்கும் கிறிஸ்தவர்களுக்கும் அநேக சங்கடங்கள் உண்டாயின. அது விஷயத்தில் ஷாட் ஐயர் கிறிஸ்தவர்களுக்குத் துணைநின்றார். அவர் 1900-ஆம் வருஷம் மாற்றப்பட்டு, அவர் இடத்திற்கு A. B. யோகான்சன் ஐயர் வருமளவும் சில மாதக்காலம் மதுரை வட்டம் திண்டுக்கல்லில் இருந்த எல்வைன் ஐயர் விசாரணைக்குள்ளிருந்தது. சென்ற 50 வருஷங்களில் மதுரையில் ஏற்பட்ட மாறுதல்களும் விர்த்தியும் ஏராளம். இரட்சணியக் கோயிலைச் சிலுவைக் கோயிலாக J. சாந்தகிரேன் ஐயர் மாற்றியமைத்து விஸ்தீரணப்படுத்தினார். நமது கிறிஸ்தவர்களின் குடியிருப்புக்கென்று கிரம்மர்புரம் ஒரு ஜெப வீட்டோடு அமைக்கப்பட்டிருக்கிறது. பழைய மிஷன் பங்களாக்கள் இரண்டும், ஆண், பெண்கள் ஆதரிப்புப் பாடசாலைகளும், சபை குருவின் வீடும் பஞ்சாலைக்கு விற்கப்பட்டு சபை குருவின் வீடு கிரம்மர்புரத்தில் அமைந்திருக்கிறது.

மேலவாசலில் இருந்த அமெரிக்கன் மிஷன் பாடசாலை J. சாந்தகிரேன் ஐயரால் வாங்கப்பட்டு Union Christian High School என்ற பெயரோடு வளர்ந்தோங்கி வருகிறது. அதில் தலைமை ஆசிரியராகப் புகழ்பெற்ற G.S. ஆபிரகாம் என்பவருக்குப்பின் திரு. தாஸ் மாணிக்கம், மனுவேல், K.S. சுவாமிநாதன் என்போர் தலைமை வகித்திருக்கிறார்கள். மாணவர் விடுதியொன்றும், மிஷனெரி பங்களா ஒன்றும் J. சாந்தகிரேன் ஐயர் முயற்சியால் வாங்கப்பட்ட "அரசரடி" என்ற விசாலமான இடத்தில் கட்டப்பட்டன. சுவீடன் தேசத்து இளவரசர் இந்த இடத்தில் அடிவைத்ததால் "அரசரடி" என்னும் பேரிடப்பட்டது. ஊழியர் குடியிருப்புக்கேற்ற பெரிய சிறிய வீடுகள் பல இங்கே கட்டப்பட்டு உபயோகத்திலிருக்கின்றன.

A. B. யோகான்சன், பெக்சல் ஐயர்மாரின் ஓயா உழைப்புக்குப்பின் மதுரையில் மிஷனெரிமாராய் உழைத்தவர்கள் J. சாந்தகிரேன், அல்ம்கிரேன், அல்ம், B. Fr. டிலியந்தர்,

O. A. யோகான்சன் துரை, A. அந்திரேன், R. அனேர், C. G. டீல், G. எரிக்ஸன் என்ற ஐயர்மார். N. லூகிரென் மிசியம்மாள் மிஷன் பொக்கிஷதாரியாக இங்கு சேவைபுரிந்தார்கள்.

கிரம்மர்புரத்துக்குப் பக்கத்தில் யுவபுரியென்னும் வாலிபர் சங்க நிலயம் O. A. யோகான்ஸன் முயற்சியால் ஆரம்பித்து ஸ்வீடிஷ் உபகாரிகளின் உதவியால் J. D. ஆசீர்வாதம் என்பவரின் தலைமையில் செழித்தோங்கி வளருகிறது.

மதுரைச் சபையில் மனுவேல், முத்தியப்பன் ஐயர்மாருக்குப் பின் G. தானியேல், I. A. அப்பாதுரை, M. P. அருளப்பன், M. தானியேல் ஐயாதுரை என்ற ஐயர்மார் சேவைபுரிந்திருக்கிறார்கள். சபைப் பெருக்கத்தால் மதுரை நகர்ச் சபையை இரண்டு பகுதிகளாகப் பிரித்து இரட்சணிய சபைக்கு R. தேவசகாயம் ஐயரும், தெற்கு சபைக்கு J. W. தானியேல் ஐயரும் குருமாராயிருக்கிறார்கள். மதுரை வடக்கு சபையின் ஆத்துமாக்கள் 1100, தெற்கு சபையின் ஆத்துமாக்கள் 413.

---

## 18. விருதுநகர்

தகப்பன் C. F. கிரெம்மர், அவரது மருமகன் C. J. சாந்தகிரேன் சாஸ்திரியார், A. B. யோகான்சன் ஐயர்மார் மதுரையிலேயே தங்கி, கிறிஸ்துவின் சுவிசேஷத்தை பல இடங்களிலும் பரப்பி வந்தனர். தகப்பன் C. J. சாந்தகிரேன் சாஸ்திரியார் மதுரைக்கு வடக்கேயும், மேற்கேயும் சென்று பல இடங்களிலும் புதிய சபைகளை நிறுவினர். தகப்பன் C. F. கிரெம்மர் மதுரைக்குத் தெற்கே சென்று நடுக்கோட்டை, காடனேரி, பேரையூர் முதலிய இடங்களில் ஊழியம் செய்து வந்தார். தென்பாகத்து வேலைக்கென்று நடுக்கோட்டையை ஒரு புதிய மிஷனெரி ஸ்தானமாக்க நினைத்தும் பணக்குறைவு ஏற்பட்டதால் அவ்வெண்ணம் பல வருஷங்களாகக் கைகூடவில்லை. முன்சொன்ன தடைகள் நிவர்த்தியாகி மிஷன் வேலை விருதுபட்டிக்குத் தெற்கேயும் அதிகரித்தபொழுது நடுக்கோட்டை தன் செல்வாக்கை இழக்கவே 1902–ஆம் வருஷம் விருதுபட்டி ஒரு புதிய மிஷனெரி தங்கி வேலை செய்யும் மத்திப ஸ்தானமாக்கப்பட்டது. A. B. யோகான்சன் ஐயரால் இங்கு நிலம் வாங்கப்பட்டு மிஷனெரி தங்குவதற்கு ஒரு பங்களாவும் கட்டப்பட்டது.

விருதுபட்டி என்ற விருதுநகரில் குடியேறிய முதல் மிஷனெரி தகப்பன் C. J. சாந்தகிரேன் சாஸ்திரியார். இவரும் இவருடைய மக்களாகிய கனம் கார்ல், ஹெர்மன், யொகானஸ், பவுல் ஐயர்மாரும், எப்பா, பெர்த்தா என்ற இவர்களுடைய சகோதரிகளும் சேர்ந்து சுமார் இருபது ஆண்டுகளாக இவ்விடத்தில் தெய்வ ஊழியம் செய்து வந்திருக்கிறார்கள். இவர்கள் சபை ஊழியத்திற்கென்று திடமான அஸ்திபாரத்தைப் போட்டார்கள். ஜனங்கள் C. J. சாந்தகிரேன் சாஸ்திரியாரையும், அம்மாளையும், "பெரிய ஐயர், பெரிய அம்மாள்" என்றும் இவர்களுடைய மகன் யொகானஸ் சாந்தகிரேன் ஐயரை "சின்ன ஐயர்" என்றும் அழைத்தார்கள். அந்த சின்ன ஐயரே இப்போது நமது சபையின் அத்தியட்சராக விளங்கும் பெருமையை நாம் அடைந்துள்ளோம்.

கனம் C. J. சாந்தகிரேன் சாஸ்திரியாரும், அம்மாளும் விருதுநகரிலுள்ள இந்து சிநேகிதர்களை அவர்களுடைய வீடுகளில் அடிக்கடி சந்தித்து அவர்களுடைய மகிழ்ச்சியிலும், துக்கத்திலும் பங்குபெற்று கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து வந்தார்கள். சில குடும்பங்கள் ஞானஸ்நானம் பெற்றன. சாஸ்திரியார் அடிக்கடி கிராமங்களுக்குச் சென்று சுவிசேஷத்தைப் பிரசங்கித்து வந்தார். முத்துராமன்பட்டி, சின்னையாபுரம், காரியாபட்டி, கரியனேந்தல் என்ற கிராமங்களில் சபைகளை நிறுவினார். கார்ல் சாந்தகிரேன் ஐயர் சமீபமான கிராமங்களுக்கும் திருச்சுளி, பேரையூர் முதலிய தூர இடங்களுக்கும் சென்று சுவிசேஷ ஊழியத்தைத் தொடர்ந்து நடத்திப் பல சபைகளை நிறுவினர்.

இளமையும், சுவிசேஷ வேலையில் ஆர்வமும் துன்பத்தில் தைரியமும் கொண்ட கனம் J. சாந்தகிரேன் ஐயர் தூரமான இடங்களுக்குப் பிரயாணம் செய்து, கிராமங்களில் பல நாட்களாகத் தங்கி சுவிசேஷ வேலை செய்து ஆண்டவருக்கென்று முன்றலபுரம், மருளூத்து, சங்கரலிங்கபுரம், அழகாபுரி, சிவல்பட்டி, பாலவனத்தம், குட்டுஹுட்டி, சின்னக்கொல்லபட்டி முதலிய கிராமங்களில் சபைகளை நிறுவி, கோயில்களையும், பள்ளிக்கூடங்களையும் கட்டினார். விருதுநகரிலும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் சபைகள் வளர்ச்சியடைவதற்கு ஒரு கோவிலையும், மாணவர் விடுதியையும் கட்டுவதற்குப் போதுமான இடம் தேவை என்று எண்ணி இக்கம்பவுண்டின் பக்கத்திலுள்ள நிலங்களையும் வாங்கினார். மேலும் ஊரின் நடுவி

விருந்த "சக்கிலியன் குண்டு" என்ற இடத்தைப் பள்ளிக்கூடத்திற்காக வாங்கினார். இவருக்கு உதவியாக கனம் முத்தியப்பன், மனுவேல், S. சுவாமிதாசன், T. M. இராஜேந்திரன், S. ஞானமாணிக்கம் என்ற இந்திய குருக்கள் வெகு உற்சாகத்தோடு ஊழியம் செய்து வந்தார்கள்.

கனம் P. சாந்தகிரேன் ஐயர் உசிலம்பட்டி, பேரையூர், சாத்தூர், திருச்சுளி முதலிய தூரமான இடங்களுக்குச் சென்று சுவிசேஷ வேலை செய்து அநேக கிராமங்களில் புதிய சபைகளை உண்டாக்கினார். உசிலம்பட்டி, பேரையூர், சாத்தூர், திருச்சுளி தனிப்பட்ட குருசேகரங்கள் ஆகக்கூடிய நிலைமைக்கு சபைகள் விருத்தியாயின. விருதுநகரைச் சேர்ந்த நாட்டார்மங்கலம், குராயூர், மெட்டுக்குண்டு, ரோசல்பட்டி, சொக்கலாஞ்சேரி, மலைப்பட்டி முதலிய கிராமங்களிலும் சபைகளை ஸ்தாபித்து முந்தின 4 இடங்களில் பள்ளிக்கூடங்களையும் கட்டினார். இவர் காலத்தில் 1922-ஆம் வருஷம் உசிலம்பட்டியும், சாத்தூரும், திருச்சுளியும் தனிப் பாஸ்ட்டரேட்டுகளாக விருதுநகரிலிருந்து பிரிக்கப்பட்டன. கனம் S. தாவீது ஐயர் சுவிசேஷ வேலையில் இவருக்கு வலது கைபோல் விளங்கினார். கனம் P. சமாதானம், S. சாலமோன், M. சாமுவேல் என்ற ஐயர்மாரும் இவருடைய ஊழியத்தில் அதிக உதவியாயிருந்திருக்கிறார்கள். இவர் காலத்தில் இங்கிருந்த ஆரம்பப் பாடசாலை 1922-ஆம் வருஷத்தில் உயர்தர ஆரம்பப் பாடசாலையாக மாற்றப்பட்டது. இதில் வேலை செய்யும் ஊழியர்களுக்கென்று முத்துராமன் பட்டியில் நிலம் வாங்கி வீடுகளைக் கட்டினார். இந்தக் காம்பவுண்டில் ஒரு மாணவர் விடுதியும் கட்ட ஆரம்பித்து வைத்தார். கோட்டைப்பட்டியில் நமது சபையார் குடியிருப்புக்காக ஒரு நிலத்தை வாங்கி அவர்களைக் குடியேற்றினதுமன்றி, அவர்களுக்கு ஒரு ஆரம்ப பள்ளிக்கூடத்தையும் கட்டி வைத்தார்.

J. இம்மல்ஸ்ட்ராண்டு ஐயர் மைட்டான்பட்டியில் ஒரு சபையை உண்டாக்கினார். விருதுநகரில் சபைகுருவுக்கென ஒரு வீட்டையும், இப்பொழுதுள்ள மாணவர் விடுதியையும் 1923-ஆம் வருஷத்தில் கட்டி முடித்தார். அதன் பின் இவர் உசிலம்பட்டிக்கு மாற்றப்பட்டார்.

இவருக்குப்பின் கனம் G. எரிக்ஸன் ஐயர் இங்கு மூன்று முறை ஊழியம் செய்திருக்கிறார். இவர்காலத்தில் பெரிய

பேரொலி, ரெட்டியாபட்டி, சின்னவள்ளிக்குளம், பெரியவள்ளிக் குளம், சின்னமூப்பன்பட்டி, தார்காடு முதலிய கிராமங் களிலும், திருச்சுளியைச் சேர்ந்த பிள்ளையார்நத்தம், மேலேந்தல், கோரைக்குளம், பள்ளிமடம் என்ற இடங்களிலும் சபைகளும், பள்ளிக்கூடங்களும் உண்டாயின. இவர் இங்குள்ள உயர்தர ஆரம்பபாடசாலை கட்டிடத்தை விஸ்தரித்தார். சீர் திருத்த ஜூபிலி ஆலயத்தின் கோபுரத்தை கட்டிமுடித்தார். கோவிலுக்கும் சபைகுரு வீட்டிற்கும் மின்சார விளக்குகள் அமைத்தார். பக்கத்திலுள்ள இடங்களை வாங்கி இந்தக் கம்பவுண்டைப் பெரிதாக்கினார். இவர் ஏழைகளுக்கும், துயரப்பட்டவர்களுக்கும், நோயாளிகளுக்கும் நண்பராக விளங் கினார். கனம் G. L. ராஜேந்திரம், S. A. ஆரோக்கியசாமி, A. S. முத்தையா, V. G. ஆசீர்வாதம் என்ற இந்தியகுருக்கள் இங்கு உழைத்து வந்தார்கள்.

கனம் C. G. Diehl ஐயர் இங்கு மிஷனெரியாகவும், மிஷன் சங்கத் தலைவராகவும், வட்டசங்கத் தலைவராகவும் இருந்து உற்சாகமாக உழைத்தார். O. கிளாசன், B. என்வால், J. உல்ரிசி, H.A. வொக்ஸ்புளும், G. தானியேல், O. வால்தர் என்ற ஐயர்மார் உழைத்து வந்திருக்கிறார்கள். G. தானியேல் ஐயர் திருச்சுளியிலுள்ள விடத்தகுளம், முத்தனேரி என்ற கிராமங்களிலும், விருதுநகரைச் சேர்ந்த அரசன்பட்டியிலும் புதிய சபைகளை நிறுவினார். முன் இருமுறை இங்கு திருப்பணி செய்த S. ஞானமாணிக்கம் ஐயர் இப்போது சபை குருவா யிருக்கிறார்.

இங்கு தெய்வ ஊழியம் ஆரம்பமான சமயத்தில் இக்கம் பவுண்டின் தென்மேற்கே உள்ள சிறு பள்ளிக்கூடக் கட்டி டத்தில் தேவாராதனை நடைபெற்று வந்தது. சபை விர்த்தி யாக அக்கட்டிடம் போதாது என்று கண்டு தகப்பன் C. J. சாந்தகிரேன் சாஸ்திரியார் சீர்திருத்த ஜூபிலி ஆலயத் திற்கு 1917-ஆம் ஷு அஸ்திபாரம் போட்டார். கனம் பவுல் சாந்தகிரேன் ஐயர் இக்கோவிலை விருதுநகர் பாஸ்டரேட் சபையார் ஊழியரின் பணத்தைக் கொண்டே 1919-ஆம் வருஷத்தில் கட்டி முடித்தார். பிரசங்கத் தொட்டியும், உபதேசியார் வாசிப்பு மேஜையும் இக்கட்டிடத்தில் வேலை செய்த கொத்தனும் ஆசாரியாரும் நன்கொடையாகக் கொடுத்தவை. கனம் G. எரிக்ஸன் ஐயர் இக்கோபுரத்தை

சபையார் ஊழியரின் பணத்தைக் கொண்டே 1939-இல் கட்டி மின்சார விளக்கும் அமைத்தார். இதில் முழங்குகின்ற மணி தியோடோரா சாந்தகிரேன் பெண் பாடசாலை மாணவிகள் கொடுத்த பணத்தைக் கொண்டு வாங்கப்பட்டது. இப்போது இக்கோவிலைச் சேர்ந்த டவுன் சபையின் ஆத்துமாக்களின் தொகை 430, பாஸ்டரேட்டிலுள்ள மொத்த ஆத்துமாக்களின் தொகை 780. விருதுநகர் மாவட்டத்திலுள்ள ஆத்துமாக் களின் தொகை சுமார் 4600.

1902-ஆம் வருஷத்தில் தியோடோரா சாந்தகிரேன் அம்மையார் காலத்திலிருந்து பெண்களிடையே செய்யும் ஊழியம் இச்சேகரத்தில் நாளது வரை இடையூறின்றி நடந்து வருகிறது. இவ்வூழியத்தில் பெரியம்மாள் சிறப்பான வரம் பெற்றவர்கள். பெண்களுக்கென்று ஒரு ஆரம்பப் பாட சாலையை இவ்வூர் மத்தியில் அமைத்து வைத்தார்கள். ஸ்ரீமதி பெர்த்தா சாந்தகிரேன் அம்மையார் வைத்திய ஊழியம் செய்து வந்தார்கள். இவர்களுக்குப்பின் ஸ்ரீமதி ஒஸ்ற்றர் லின்ட் கிரேட்டா யான், துல்லியா, R. எரிக்ஸன் அம்மை யார்களால் கிராமப் பெண்களுக்கென்று திடப்படுத்தல் வகுப்புகள் நடத்தப்பட்டன. இவ்வகுப்புகள் கிராம சபை களின் ஞானவளர்ச்சிக்கு மிக்க அனுகூலமாயிருந்தன. உணவு ரேஷன் எற்பட்ட காலத்தில் இந்த வகுப்புகள் நடத்த முடியாமல் தடைபட்டன. விருதுநகரைச் சுற்றியுள்ள கிராம சபைகளும் பேரையூர், உசிலம்பட்டி, சாத்தூர் வட்டாரங்களில் சபைகளும் அதிகரிக்க, அங்குள்ள கிறிஸ்தவ பிள்ளைகள் இங்கு வந்து படிக்கத்தக்கதாக இப்போதுள்ள மாணவர் விடுதி 1923-இல் கனம் J. இம்மல்ஸ்ட்ராண்டு ஐயரால் கட்டப் பட்டது.

விருதுநகரில் வசித்த மிஷனெரிகளும் இந்திய குருமாரும் பல இடங்களுக்கும் பிரயாணம் செய்து சுவிசேஷ ஊழியம் செய்ததின் பலனாக **சாத்தூரிலும்** அதன் சுற்றுப்புறங்களி லுள்ள **கிராமங்களிலும்** சிறிய சபைகள் ஏற்பட்டன. சின்ன கொல்லபட்டியில் கற்கட்டடமான கோயிலுண்டு. சின்னையா புரத்தின் பூர்வீகசபை இக்குருசேகரத்தில் சேர்க்கப்பட்டிருக் கிறது. இங்கே சபை குருவாய் முதலில் நியமிக்கப்பட்டவர் S. தாவீது ஐயர். அவருக்குப்பின் இங்கு சேவை புரிந்திருப்

போர் A. S. முத்தையா, J. E. ஜூபிலி, K. தேவசகாயம் என்போர். இச்குருசேகரத்தில் 1053 ஆத்துமாக்களுண்டு.

திருச்சுளியில் நீண்டகாலமாய் சுவிசேஷ ஊழியம் செய்யப் பட்டிருக்கிறது. இங்கு V. மனுவேல் ஐயர் 1904-ஆம் ௵ முதல் 1908-ஆம் ௵ வரையில் சபைகுருவாகத் தங்கி சுவிசேஷ ஊழியம் செய்திருக்கிறார். S. சாலமோன் ஐயர் 1922-1926 ஆண்டுகளில் இங்கு சேவை புரிந்தார். D.D. ரேனியுஸ் ஐயரும் இங்கே உழைத்திருக்கிறார். விருதுநகரில் வசித்த மிஷனெரி மார், இந்திய குருக்கள் திருச்சுளிக்குப் போய் ஊழியம் நடத்தி வந்திருக்கிறார்கள். இதைச் சேர்ந்த 12 கிராமங்களில் 655 கிறிஸ்தவர்களுண்டு. P. குனுட்சன் ஐயர் விருதுநகரில் தங்கி திருச்சுளி வட்டத்தின் சபைகுருவாய் உழைக்கிறார்.

**பேரையூரில்** கிறிஸ்தவ சபை பூர்வ மதுரை மிஷனெரி மாரின் முயற்சியால் உண்டானது. (1883) V. M. அந்தோனி ஐயர் 1884-1898 வரையிலும் பிறகு முத்தியப்பன், மனுவேல், S. சாலமோன் ஐயர்மாரும் இங்கு உழைத்திருக்கிறார்கள். இக்குருசேகரத்தைச் சேர்ந்த 16 இடங்களுண்டு. ஆத்துமாக் களின் தொகை 943. இப்போது சபை குருவாயிருப்பவர் J. S. ஆசீர்வாதம் ஐயர்.

**உசிலம்பட்டியில்** நீண்ட காலம் இம்மல்ஸ்திராண்டு, பவுல் சாந்தகிரேன் ஐயர்மார் தங்கி உழைத்திருக்கிறார்கள். T. M. ராஜேந்திரன், D. A. ஜேக்கப், N. சாமுவேல், D. சின்னப்பன், S. துரைக்கண், சாம் ஜான் ராஜா, A. தேவ சகாயம் என்ற இந்திய குருமார் இங்கு சேவை புரிந்திருக் கிறார்கள். 11 இடங்களில் 774 ஆத்துமாக்களுண்டு. இந்திய சிற்ப முறையில் கட்டப்பட்ட விசாலமான ஆலயம் இம்மல் ஸ்திராண்டு ஐயர் முயற்சியால் கிறுவப்பட்டது. மாவட்ட ஊழியத்தின் சார்பாக உசிலம்பட்டியில் பெண்களுக்கென்று ஓர் உயர்தர பாடசாலையும் (High School) ஆதாரக் கல்வி போதனுமுறைப் பாடசாலையும் மாணவிகளுக்காக விடுதிகளும் ஸ்ரீமதி E. நார்ட்மார்க் அம்மையாரின் பெரும் முயற்சியால் ஏற்பட்டு திறம்பட நடத்தப்பட்டுவருகின்றன.

இலங்கைத் தீவிலுள்ள லுத்தரன் கிறிஸ்தவர்களைச் சந்தித்து வருவதற்கு 1895-ஆம் ௵ முதல் நமது குருமாரில்

ஒருவர் ஆண்டுதோறும் இருமுறை போய்வரும் வழக்க மிருந்தது. 1903-ஆம் ஆ A. B. யோகான்சன் ஐயரும் அவருக்குப்பின் கார்ல் சாந்தகிரேன் ஐயரும் நியமிக்கப்பட்டு கொழும்பிலேயே குடியிருந்து இலங்கையில் சிதறியிருக்கும் லுத்தரன் சபைக் கிறிஸ்தவர்களை விசாரித்து வந்தார்கள். பிறகு J. சாந்தகிரேன் ஐயர் அவ்வேலையை விருதுநகரிலிருந்து கொண்டு செய்துவந்தார். பிறகு இவ்வேலை நிறுத்தப்பட்டது.

---

## 19. கமுதி, பரமகுடி.

தகப்பன் A. B. யோகான்சன் ஐயர் மதுரையிலுள்ள D. பெக்சல் ஐயர் பங்களாவில் குடியிருந்துகொண்டு காரியா பட்டி, கரியனேந்தல், திருச்சுளி மார்க்கமாய் மாட்டு வண்டியிலேறி கமுதிவரையில் பிரயாணம் செய்து ஆங்காங்கு சபைகளை ஏற்படுத்தினர். அவரைப்போலவே J. சாந்தகிரேன் ஐயரும் சுவிசேஷ வேலையில் ஆர்வமுள்ளவராய் கமுதியிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் சேவைபுரிந்ததின் பலனாக சபைகள் உற்பத்தியாயின. கமுதியிலேயே தங்கி S. சாமிதாசன், சா. ஞானமாணிக்கம், T. M. ராஜேந்திரன், V. ஆசீர்வாதம், M. S. தனராஜ், S. G. சாமுவேல், ஆரோக்கியசாமி, சாம் ஜான்ராஜா முதலிய குருமார் திருப்பணி செய்திருக்கின்றனர். A. B. யோகான்சன் ஐயரால் ஒரு பாடசாலை கமுதியில் கட்டப்பட்டது.

ஒஸ்ற்றர்லின்ட் (Osterlind) மிசியம்மாள் இங்கே தங்கி பெண்களிடம் ஆரம்பித்த வேலை சகோதரி துல்லியா எங்குவிஸ்ற், கிரேற்ரூ ஜான் என்பவர்களால் முன்னேற்ற மடைந்தது. ஒரு பெண் பாடசாலையும், அநாத பிள்ளைகளின் ஆதரவுசாலையும் ஏற்பட்டு சர்க்கார் ஆதரவும் கிடைத்தது. 1932-ஆம் ஆ ஒரு மிஷன் பங்களாவும் நிறுவப்பட்டது. திருமதி புஷ்பம் வில்லியம்ஸ் பத்தாண்டுகளாக சேவை புரிந்ததின் பலனாக இப்பாடசாலையும், அநாதைகளின் விடுதியும் உன்னத நிலைக்கு வந்தது. அவர்களுக்குப்பின் இவ்வேலைக்காக

உற்சாகமாய் உழைத்த சாம் ஜான் ராஜா ஐயரின் மனைவி அகால மரணமடைந்தார்கள். M. ஹாபக் மிசியம்மாள் இந்த பாடசாலைக்கு இப்போது தலைமை வகிக்கிறார்கள். கமுதி வட்டத்தில் ஆத்துமாக்களின் தொகை 710.

கமுதி வட்டத்தில் A. B. யோகான்சன் ஐயரும், J. சாந்தகிரேன் ஐயரும் தொடங்கின வேலை பரமகுடி, ராமநாதபுரம், செல்லூர், முதலூர் முதலிய ஊர்கள் வரையும் பரம்பி, பரமகுடியில் ஒரு மிஷனெரி தங்கி வேலைசெய்யும்படி நிலங்கள் வாங்கி இந்திய குருவுக்காகவும், மிஷனெரிக்காகவும் வீடும் பங்களாவும் பாடசாலைக் கட்டடங்களும் நிறுவப்பட்டன. நீல்சன், ப்ளையல், திலியான்டர், வொக்ஸ்புளும், அன்ட்ரேன், வால்தர் முதலிய ஐயர்மார் அங்கே திருப்பணி நடத்தியிருக்கிறார்கள். G. T. வில்லியம்ஸ் அவர்களும் பரமகுடி வட்டத்தின் வேலையை விர்த்திசெய்ய முயன்றிருக்கிறார். P. மாணிக்கம் ஐயர் இங்கே நீண்டகாலம் சேவைபுரிந்திருக்கிறார். உயர்தர ஆரம்ப பாடசாலையும், மாணவர் விடுதியும் இங்கே உண்டு. இப்போது சபைகுரு G. தானியேல் ஐயர். ஆத்துமாக்களின் தொகை 705.

முதுகுளத்தூரும், இளையாங்குடியும் முறையே 1082 ஆத்துமாக்களும், 835 ஆத்துமாக்களுமுள்ள குருசேகரங்களாகும். இவைகளில் சபை குருக்களாயிருப்போர் N. சாமுவேல், D. S. மாணிக்கம் என்போர்.

---

## 20. திண்டுக்கல்.

முந்த மதுரை வட்டத்தின் ஒரு பங்காயிருந்த திண்டுக்கல் 1889-ஆம் வருஷம் முதல் பிரத்தியேகமான சேகரமாயிற்று. அதைச் சேர்ந்த ஊர்களில் முக்கியமானவை பஞ்சம்பட்டி, அம்மாபட்டி, பெரியகுளம், கோடைக்கானல், போடிநாய்க்கனூர், ஆனைமலையான்பட்டி என்பவை. 1881-ஆம் வருஷத்தில்

ஸ்தாபகமான போடிநாய்க்கனூரில் ஒரு இந்திய குரு வாசஞ் செய்து திருஊழியம் பார்த்துவந்தார். போடிநாய்க்கனூர் பக்கத்திலுள்ள திருவாங்கோட்டு இராச்சியத்தைச் சேர்ந்த தேவிக்குள மலைகளில் தேயிலை, காப்பிக் கொட்டை, ஏலம் முதலியவை விளையும் தோட்டங்களில் நமது சபையார் சிதறியிருக்கிறார்கள். இப்போது போடிநாய்க்கனூரில் S. J. சத்தியமூர்த்தி ஐயர் குடியிருந்துகொண்டு இவ்வூழியத்தை நடத்துகிறார்.

Dindigul.

திண்டுக்கல் சேகரத்தில் உள்ள அம்மாபட்டியில் 1868-ஆம் வருஷமுதல் நமது கிறிஸ்தவர்கள் இருக்கிறார்கள். அம்மா பட்டிச் சபையார் நமது புதிய சபையொழுங்கை அனுஷ்டித்து முகாமைச் சங்கம் ஏற்படுத்தி, கோயில் காணிக்கைகளைக் கிரமமாய்ச் சேர்த்து வருகிறார்கள். திண்டுக்கல் சேகரத்தில் கோடைக்கானல் இருக்கிறது. அங்கே நமது ஐரோப்பிய குருக்கள் கோடை காலத்தில் முறைமுறையாய் ஏறி இளைப்பாறிப் பலமடைவதற்காக ஏற்பட்ட நமது மிசியோனுக்குச் சொந்தமான பல பங்களாக்கள் உண்டு. அங்கே தரங்கை மிசியோன் 2-ஆம் சதோற்சவ ஞாபகார்த்தமாக ஒரு அழகிய கோயில் சிற்ப நிபுணர் ஷூமெல்ஸ் துரையின் திட்டப்படி கட்டப்பட்டிருக்கிறது.

Ammapatti.

திண்டுக்கல்லில் குடியிருந்து அந்த வட்டத்தை விசாரிப்பதற்கு முதல்முதல் நியமிக்கப்பட்ட ஐரோப்பிய குரு பெக்சல் ஐயர். அவர் நல்முயற்சியோடு செய்துவந்த வேலையைத் தொடர்ந்து செய்தவர் எல்வைன் ஐயர். அவர் அங்கே பல வருஷங்களாய் வசித்து, புறமதஸ்தருக்குச் சுவிசேஷத்தை அறிவித்து வந்தார். அவருக்குப்பின் அங்கே மிசியோனரியாக பேல்பார்க் ஐயர் உழைத்தார். இப்போது அங்கே மிஷனெரியாயிருப்பவர் T. Holmberg ஐயர். அவருக்குமுன் B. என்வால், Y. பிரிக்கொல்ம் ஐயர்மார் இங்கே சேவை புரிந்திருக்கிறார்கள். நெடுநாளாய்க் கோயில் இல்லாதிருந்த திண்டுக்கல்லில் ஒரு கோயில் கட்டப்பட்டு, 1905-ஆம் ௵ ஜுன் ௴ 18-ஆம் ௳ பிரதிஷ்டையாகி, திரித்துவ தேவாலயம் என்று பெயரிடப்பட்டது. திண்டுக்கல்லில் ஒரு உயர்தர ஆரம்ப பாடசாலையும், ஆதரிப்புப் பாடசாலையும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. S. ஆபிரகாம், D. தேவப்பிரியம், D. ஞானதிக்கம், G. ஜான்

தாவீது, T. M. ராஜேந்திரன், D. S. பிச்சை, D. எபனேசர், V. தேவவரம் முதலிய குருமார் இங்கு சேவை புரிந்திருக்கிறார்கள். இப்போது R. S. தேவானுக்கிரகம் ஐயர் சபைகுரு. தற்சமயம் திண்டுக்கல் வட்டத்தில் 838 கிறிஸ்தவர்களும், உத்தமபாளையம் வட்டத்தில் 880 கிறிஸ்தவர்களும் இருக்கிறார்கள். கொங்கநாட்டில் 470 ஆத்துமாக்களுள்ள சபை ஹொல்ம்பர்க் ஐயர் மேற்பார்வையிலிருக்கிறது. டாக்டர் தோமாஸ் ஆசீர்வாதம் குஷ்டரோகிகளின் வைத்தியசாலையை நடத்துகிறார். திண்டுக்கல் கைத்தொழிற் பாடசாலையின் தலைவர் திரு. J. கார்ல் ஐசக் என்பவர்.

---

## 21. திருப்புத்தூர்.

ராமநாதபுரம் ஜில்லாவில் மதுரைக்கு 40 மைல் கிழக்கே இருக்கும் திருப்புத்தூர் நமது மிசியோன் சரித்திரத்தில் முக்கியமான இடமாகிவிட்டது. அங்கே 1909-ஆம் ஹு கண் வைத்திய நிபுணராகிய கூகல்பர்க் டாக்டர் வந்து சுவீடிஷ் மிஷன் வைத்திய நிலையத்தை ஏற்படுத்தினார். சுவிசேஷ பிரபல்லிய சேவையில் மிக்க ஆர்வங்கொண்ட H. பிரிக்கோல்ம் ஐயர் அவரோடு இங்குவந்து திருப்பணியாற்றினார். இவ்விருவரின் மனைவிமாரும் அன்பின் தொண்டில் ஈடுபட்டார்கள். வைத்திய நிலையத்தில் தமக்கு உதவிசெய்ய சென்னையிலிருந்து P. ஆரோக்கியசாமிப் பிள்ளையை நியமித்தார். அவரையன்றி டாக்டர் T. டேவிட் என்பவரையும் 4 ஆண்டுகள் வைத்து உதவி பெற்றார். பிறகு S. குருபாதம் G. ஜோசப், J. S. விக்டர், ஆரோக்கியம் பீற்றர், D. தானியேல், அதிசயம், திருமதி மாசிலாமணி முதலிய டாக்டர்மார்கள் இங்குள்ள வேலையில் பங்கு பெற்று பின்னால் வேறிடங்களில் வைத்திய நிலயங்களை ஏற்படுத்தினார்கள். கூகல்பர்க் டாக்டரின் மனைவியும் நோயாளிகளுக்கு உதவிபுரியும் வேலையில் சலிப்பின்றி ஈடுபட்டார்கள்.

ஆஸ்பத்திரி வேலையில் உதவிசெய்ய சுவீடன் தேசத்திலிருந்து ஊல்சன், வெர்ன், வில்கே, எல்சா வொன் சீடோ, லார்சன், பெர்சன், என்பவர்கள் இங்கே உழைத்திருக்கிறார்கள்.

அவர்களில் வில்கி அம்மையார் முயற்சியால் 1926-ஆம் ஞூ தாதிமாருக்குப் பயிற்சி யளிக்கும் நிலையம் ஏற்பட்டு அதிலிருந்து நூற்றுக்கணக்கான ஆண் பெண் நர்ஸ்மார் வெளியேறியிருக்கிறார்கள்.

வேதாகம ஸ்திரீகள் வேலை, சுவிசேஷ வேலையை நடத்த எஸ்தர் பீற்றர்சன், அமி லாகர்குவிஸ்த், எலன் ஓஸ்ற்றர் விண்ட், பியர்லிங்சன், சேவன்பொர்க் என்ற மிசிமார் இங்கே திருப்பணி செய்திருக்கிறார்கள்.

மீண்டும் சுவீடனிலிருந்து டாக்டர் இசாண்டர் 1925-ஆம் ஆண்டில் வந்து நமது வைத்திய நிலையத்தில் சகல நோய்களுக்கும் சிகிச்சை செய்யப்பட வழிதிறந்தார். ரசாயன, இரத்த, சிறுநீர், மலம் முதலியவற்றைப் பரிசோதனை செய்யும் நிலையமொன்றை ஏற்படுத்தி அதிலிருந்து பலமாணவர் பயிற்சி பெற்று வெளியேற ஏதுவாயிற்று.

டாக்டர் சென்டால் 1935-ஆம் ஞூ வந்ததிலிருந்து பெரிய சத்திர சிகிச்சை இங்கே முக்கியம் பெற்றது. அதே ஆண்டில் டாக்டர் எரிக்சன் அம்மாள் வந்து, பெண்களுக்காக பிரசவ வார்ட் விசாலிக்க இடம்பண்ணினதால் இப்போது 20 பேருக்கு அங்கே பிரசவ வசதியுண்டு. அவர்களே ஆஸ்பத்திரியின் தலைமை டாக்டர். 1953-ஆம் வருஷம் கடைசியில் சத்திர சிகிச்சையில் நிபுணரான டாக்டர் வல்டேன் வந்து பெயர்பெற்று விளங்குகிறார். சென்ற 46 ஆண்டுகளில் வார்டுகளும், கட்டடங்களும் புதிதாய் உண்டாகி வைத்திய நிலையத்தின் வேலை பெருகிக் கொண்டே வருகிறது.

பிரிக்கோல்ம் ஐயருக்குப்பின் இங்கே ஹிம்மல்ஸ்திராண்டு, அல்ம்கிரென், ப்ளேயல் என்ற சுவீடிஷ் ஐயர்மாரும், A. S. முத்தையா, D. டேவிட், J. S. ஆசீர்வாதம், J. அருள்தாஸ், D. பெலவேந்திரம் முதலிய இந்திய குருமாரும் சபைவேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

பிரிக்கோல்ம் ஐயரால் கட்டப்பட்ட ஆரோக்கியநாதர் ஆலயத்தில் இடம் போதாமையால் பின்னல் விஸ்தரிக்கப் பட்டும் இன்னம் இடக்குறைவுண்டு. நோயாளிகள் முதலியவர்களின் தனி ஜெபத்திற்கென்று ஓர் அழகிய சிறியஆலயம் வைத்திய நிலயத்திற்கு அண்மையில் கட்டப்பட்டிருக்கிறது

இப்போது டாக்டர் மனுவேல், சாமுவேல் சுந்தரராஜ் என்ற இந்தியர்கள் எரிக்சன், வல்டேன் என்ற டாக்டர்களோடு ஒத்துழைத்து வருகிறார்கள். திருப்புத்தூர் சபையின் ஆத்துமாக்கள் தொகை 470.

---

## 22. பங்களூர்.

பங்களூர் கன்னட தேசமாகிய மைசூர் நாட்டிலுள்ளது. அங்கே தமிழ் நாட்டிலிருந்து உத்தியோக சம்பந்தமாய்ப்போன அநேக கிறிஸ்தவர்களுண்டு. அவர்களில் முன்னமே தரங்கையினின்று போன வியாபாரியாகிய பர்த் துரை ஒருவர். இவர் மிகுந்த வியாதிப்பட்டிருந்த காலத்தில் சேர்வராய மலையிலிருந்து தேடர்லேன் ஐயர் (1863-ஆம் ஹு) அவரைப் பார்க்கப்போனார். அச்சமயத்தில் அக்கிருந்த மற்ற லுத்தரன் கிறிஸ்தவர்களும் ஐயரைக் கண்டு, தங்கள் ஆத்தும விசாரணைக்காக ஏற்பாடு செய்யும்படி கேட்டுக்கொண்டார்கள். இது முகாந்திரமாய் பங்களூருக்கு முதல் முதல் போனவர் கோயமுத்தூர் ஹெறே ஐயர். இதற்குப்பின் சென்னைச் சபையினின்று போனவர்களைச் சந்திப்பதற்கு கிரெம்மர் ஐயர் அங்கு சென்றார். பிறகு அவரோடு சுவார்ச் அக்டர்லோனி என்ற ஐயர்மார் பங்களூர் சபையின் ஆத்தும விசாரணைக்காக நிலைவரமான ஏற்பாடு செய்வது அவசியமோ என்று யோசனை செய்ய அவ்விடம் சென்றார்கள். அது அவசியந்தானென்று கண்டபொழுது சீமைக்குப் போய்த் திரும்பின பயர்லேன் ஐயர் சுகத்துக்குக் குளிர்ச்சி பொருந்திய பங்களூரே தகுதியென்று சங்கத்தார் யோசனைபண்ணி, அவரை அவ்விடத்திற்கு நியமித்தார்கள்.

Bangalore.

1873-ஆம் வருஷம் வருஷப் பிறப்பில் பயர்லேன் ஐயர் அவ்விடம் போய், பிறகு ஒரு துரையின் உதவியால் ஒரு இடத்தை 550 ரூபாய்க்கு வாங்கி, ஆராதனைக்கும் பள்ளிக்கூடத்திற்கும், மிசியோனூழியர் குடியிருப்புக்கும் அவசியமான கட்டடங்களைக் கட்டி, தாம் ஒரு வாடகைவீட்டில் குடியிருந்துகொண்டு, அங்கிருந்த சொற்பக் கிறிஸ்தவர்களைப் பார்வையிட்டு, புறமதஸ்தருக்குப் பிரசங்கம் செய்துவந்தார். அவர் அங்கே ஊழியம் ஆரம்பித்த காலத்தில் சபை வெகு சொற்பமா

யிருந்தது. மேற்கூறிய ௵ ஜனுவரி ௴ 5-ஆம் ௳ ஞாயிற்றுக் கிழமை வைத்த முதல் ஆராதனைக்கு வந்தவர்கள் ஐயரும் உபதேசியாருந்தான். அடுத்த ஞாயிற்றுக்கிழமை உபதேசியார் குடும்பமும், ஒரு விதவையும் வேறிரண்டு ஆண்பிள்ளைகளும் வந்திருந்தார்கள். இப்படியே நாளுக்கு நாள் ஆராதனைக்கு வருவோர் தொகை அதிகரித்தது. கர்த்தர் உயிர்த்தெழுந்த பண்டிகை தினத்தில் 5 இந்துக்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, 13 கிறிஸ்தவர்களுக்குப் பரிசுத்த இராப்போசனம் பரிமாறக் கூடியதாயிருந்தது. வருஷக் கடைசியில் சபையார் தொகை 80 ஆயிற்று.

பிறகு அவர் வசதியான ஒரு இடத்தில் தமது குடியிருப்புக்கு ஒரு பங்களா கட்டினதுமன்றி சமீபத்தில் ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தி, பெருகின சபைக்காக ஒரு புதிய ஜெப வீட்டையுங் கட்டினர். பிறச் சேகரத்துச் சனங்களின் வாத்துப் போக்குக்குத் தக்கபடி சபை பெருகுவதும் சிறுகுவதுமாயிருந்தது. இதில் பயர்லேன் ஐயர் சளைக்காமல், தாம் பென்ஷன் பெற்றுச் சீமைக்குத் திரும்புமளவும் (1886) உழைத்து அநேகருக்கு உபகாரியாய் விளங்கினர்.

அவருக்குப்பின் அதற்கு விசாரணை குருவானவர் ஹெரே ஐயர். (1886-1893) இவர் காலத்தில் சபை பெருகியே வந்தது. பங்களூருக்குத் தென்கிழக்கிலுள்ள குப்பம் என்ற இடத்தில் சுவிசேஷ வேலை தொடங்கி ஒரு பள்ளிக்கூடமும் ஸ்தாபிக்கப்பட்டது. ஆயினும் இப்பொழுது அங்கே கிறிஸ்தவர்களும் இல்லை, பள்ளிக்கூடமும் இல்லை. அன்றியும் பங்களூருக்கு 40, 50 மைல் தூரத்திலுள்ள கோலார் என்ற இடத்தில் பொன் எடுக்கும் வேலை ஆரம்பித்தபின் அங்கே வெகு ஜனங்கள் குடியேறினதால் அவர்கள் நடுவிலும் நமது சபை வேலை நடக்கிறது.

பங்களூர் வட்டம் (1894-99) ஐந்து வருஷக்காலம் வன்ஸ்கே ஐயர் விசாரணையில் இருந்தது. அவர் மற்றிடங்களில் இந்துக்களுக்குள் நடப்பித்துவந்த சுவிசேஷ பிரசங்க வேலையை இங்கும் விடாது நடப்பித்தார்.

இவருக்குப்பின் மைகார்ட் ஐயரும், வன்ஸ்தாடன் ஐயரும் யேகர் ஐயரும் ஒருவர்பின் ஒருவராய் வேலை பார்த்தார்கள். இப்பொழுது அங்கே சபை குருவாயிருப்பவர் J. W. அப்பாவு

ஐயர். அவருக்கு முன் K. A. தாவீது, J. D. பர்வதம், D. பெலவேந்திரம், J. அருள்தாஸ், R. தேவசகாயம், M. சாமுவேல், L. எஸ்டர்ராஜ், A. J. சத்தியநாதன் என்பவர்கள் சபை குருக்களாய் உழைத்திருக்கிறார்கள். அந்த வட்டத்து கிறிஸ்தவர்களின் தொகை 531

செங்கற்பட்டு ஜில்லா (155-ஆம் பக்கம்)

இங்கே பாண்டூர், திருவள்ளூர் என்ற குரு சேகரங்களையன்றி ராமன்சேரி என்ற குரு சேகரமும் உண்டு. இது 1927-ஆம் வருஷம் ஏற்பட்டது. இதில் சேர்ந்த கிராமங்கள் 13. சேகரத்தின் ஆத்துமாக்கள் 977.

---

## 23. இரங்கூன்.

அக்கரை இந்தியாவில் இருக்கும் இரங்கூனிலும் நமது மிசியோனுக்குட்பட்ட சபையும் குருவும் உண்டு. இந்தச் சபை சுவிசேஷ பிரசங்கத்தினால் பிறமதத்தினரினின்று சேர்க்கப் பட்டதல்ல. பிழைப்புக்கென்று சென்னை முதலிய இடங்களினின்று அவ்வூருக்குப் போன லுத்தரான் சபையாருடைய ஆத்ம விசாரணைக்காக மிசியோன் கவலை கொண்டதனால் அச்சபை சேர்ந்தது. 1871-ஆம் ௵ சென்னை புரசபாக்கத்தில் குருவாயிருந்த கிரெம்மர் ஐயரே தன் வட்டத்திலிருந்து போயிருந்த கிறிஸ்தவர்கள் விஷயமாய் சிரத்தை எடுத்த முதல் குரு. இரங்கூனில் இருந்த சென்னைச் சபையாரும் தங்கள் ஆத்ம விஷயத்தில் கவலை கொண்டவர்களாய் தங்களுக்கு ஞான திரவியங்களைப் பரிமாறுவதற்காக யாரையாவது அனுப்பும்படி கேட்டார்கள். இதை ஆதாரமாகக் கொண்டு, (டிரெக்தர் ஹார்தெலாந்து சாஸ்திரியார் இந்தியாவுக்கு வந்திருந்த சமயத்தில்) தீவாந்திரங்களுக்குப் போயிருக்கும் நமது கிறிஸ்தவர்களின் ஆத்ம விசாரணை விஷயத்தைக் குறித்துத் தரங்கைக் குருமார் கூட்டத்திலே பேசப்பட்டது.

**Rangoon.**

அச்சமயம் இந்தப் பெரிய வேலையை மயர் ஐயர் ஒப்புக் கொண்டு மா. வேதமாணிக்கம் உபதேசியாரோடு 1877-ஆம் வருஷம் மார்ச்சு ௴ 13-ஆம் ௳ புறப்பட்டு 18-ஆம் ௳ இரங்கூன் துறைமுகம் போய்ச் சேர்ந்தார். மார்ச்சு ௴ 19-ஆம் ௳ முதல் எப்ரில் ௴ 21-ஆம் தேதி வரையில் அவர் இரங்கூனில் தங்கியிருந்து, கிறிஸ்தவர்களைக் கூட்டிச்சேர்த்து ஆராதனைகள்

நடத்தி, ஞானஸ்நானம் கொடுத்து, பரிசுத்த இராப்போசனம் பரிமாறி, குடும்பத் தலைவர்களோடு சபைக் காரியங்களைக் குறித்துப் பேசினார். சபை ஏற்பாட்டுச் சட்டங்களுக்கு 19 பேர் கையெழுத்து வைத்தார்கள். அவர்களில் 3 பேர் சபையின் மூப்பர்களாகத் தெரிந்துகொள்ளப்பட்டார்கள். 35-ஆம் நம்பர் தெருவில் ஒரு வாடகை வீட்டில் தெய்வாராதனை நடக்க ஒழுங்கு செய்யப்பட்டது.

பிறகு மயர் ஐயர் மோல்மேன், பினாங்கு, சிங்கப்பூர் முதலிய இடங்களிலுள்ள நமது கிறிஸ்தவர்களைச் சந்தித்துக் கொண்டு ஜூன் மீ 13-ஆம் வ நாகபட்டணம் வந்துசேர்ந்தார். ஆலோசனைச் சங்கத்தாருக்கு அவர் செய்த அறிக்கையின் பேரில், இரங்கூனுக்கு ஒரு மிசியோனரியை அனுப்புவது அவசியமென அவர்கள் கண்டு, அவரையே அதற்கு நியமித்தார்கள். அவர் குடும்ப சகிதம் 1878-ஆம் ஹு ஏப்ரில் மாதம் 11-ஆம் வ புறப்பட்டு, 19-ஆம் வ இரங்கூன் போய்ச் சேர்ந்தார். அவர் அங்குள்ள சபையை ஒழுங்குப்படுத்தவும், சபைப் பொக்கிஷம் சேர்க்கவும் பட்ட பிரயாசை அதிகம். ஒரு கர்மானிய துரையினால் கொடுக்கப்பட்ட ஓர் சிறிய வீட்டைச் சற்றே மாற்றி, ஆராதனை ஸ்தலமாக்கினார்.

1878-ஆம் ஹு ஆகஸ்டு மீ இங்கிலீஷ் தமிழ் பள்ளிக்கூடம் ஸ்தாபகமாயிற்று. துவக்கத்தில் படித்தவர்கள் 8 பிள்ளைகள். பிறகு கோவிலும் பள்ளிக்கூடமும் கட்டவேண்டுமென்கிற நோக்கமாய் ஒரு தொகை சேர்த்து, வண்ணான் குளத்துக்குச் சமீபத்திலுள்ள ஒரு முக்கோண வடிவமான நிலத்தை அதிலுள்ள 40 பழைய கட்டடங்களோடு ஏலத்திலே வாங்கினார். நகராதிபதியால் ஐயருக்குக் கொடுக்கப்பட்ட ஒரு வீட்டைப் பிரித்து, அதன் தளவாடங்களைக் கொண்டு கோயில் பள்ளிக்கூட கட்டட வேலைகள் தொடங்கக் கூடியதாயிற்று:

1881-ஆம் வருஷக் கடைசியில் ஏறக்குறைய 100 லுத்தரன் கிறிஸ்தவர்கள் அங்கிருந்தார்கள். ஆரம்பமுதல் அவ்வருஷ மட்டுமுள்ள 4 வருஷ காலத்தில் சபையார் சேர்த்த தொகை ரூ. 2098. இதில் ஐரோப்பியரால் சேர்ந்தது ரூ. 672.

மறுவருஷம் மயர் ஐயர் சீமைக்குப் போகவே, கேரிங் ஐயர் இரங்கூனுக்குப் போய் ஏறக்குறைய 2 வருஷகாலம் அச்சபையை நடத்தி வந்தார். மயர் ஐயர் திரும்பி வந்து

1886-ஆம் வருஷமத்திமட்டும் அங்கிருந்தார். ஒரு வருஷகாலம் ஞா. தேவசகாயம் ஐயர் சபை குருவாயிருந்தபின், தேவா சீர்வாதம் ஐயர் அதற்குக் காயமான குருவாக நியமிக்கப்பட்டார். இரங்கூனில் இந்த குரு 1890-ஆம் வருஷம் மார்ச்சு மீ கர்த்தருக்குள் மரித்தபின், தே. தாவீது ஐயர் அச்சபையின் குருவாகி, 14 வருஷகாலம் அங்கே வேலை செய்தார்.

மேலே சொன்ன முக்கோண நிலத்திலிருந்த பழைய கட்டடங்களை எடுத்துப்போட்டு, தாழ்வான நிலமட்டத்தை உயர்த்தி, அதிலே வீடுகளைக் கட்டுவதில் தாவீது ஐயர் பட்ட பிரயாசை அதிகம். சென்ற செலவு ரூ. 35,000. சபையார் கொஞ்சங் கொஞ்சமாய் இச்செலவைக் கொடுத்துத் தீர்த்தபின் இது சபைகுரு முதலியவர்களுக்குச் சம்பளம் கொடுப்பதற்கான வரும்படிகொடுக்கும் பொக்கிஷ வைப்பாம் என்ற நம்பிக்கை நிறைவேறவில்லை. D. தாவீது ஐயர் தஞ்சைக்கு மாற்றப்பட்டபின் C. S. பாக்கியம் ஐயர் அவருடைய இடத்துக்கு வந்தார். ஏற்கனவே கோவிலும் வீடுகளும் கட்டியிருந்த முக்கோண நிலம் ரெங்கூன் ரெயில்வே ஸ்டேஷன் விஸ்தரிப்புக்குத் தேவையானதால் அதைக் காலி பண்ண 1909-இல் துரைத்தனத்தார் கட்டளைபண்ணினார்கள். இதிலே சர்க்கார் கொடுக்கவேண்டிய தொகையைப்பற்றி முடிவுகட்ட வட்ட சீனியர் மத்தேஸ் ஐயர் ரங்கூனுக்கு வந்து கலெக்டரிடம் பேசினார். அவர் வந்திருந்த மூன்று நாட்களில் மாலை நேரத்தில் 'சத்தியம்' என்ற பொருளின் பேரில் கிறிஸ்தவரும் இந்துக்களும் பயன்பட (Bapist) மிஷன் ஹாலில் பேசினார். சர்க்கார் கொடுத்த தொகை சங்கத்தாருக்கு அனுப்பப்பட்டது. C. S. பாக்கியம் ஐயருக்குப்பின் வந்தவர் S. D. ஞானச்சரியம் ஐயர். சர்க்கார் எடுத்துக்கொண்ட நிலத்துக்குப் பதிலாக ஒரு நிலம் கொடுத்தார்கள். பிரிக்கப்பட்ட பழைய பலகை வீடு புது இடத்துக்குக் கொண்டுவந்து நாட்டப்பட்டது. பழைய பள்ளிக்கூடத்தைப் பிரித்துப் புது இடத்தில் நாட்டி தேவாலயமாக உபயோகிக்கப்பட்டது. சபை குருவுக்கு வைசூரி கண்டு இரண்டு மாதக்காலம் ஆஸ்பத்திரியில் தங்க நேரிட்டபோது வட்ட சீனியராகிய ரீகர் ஐயர் பினங்கிலிருந்து வந்து குருவுக்குச் சுகம்ஆகும் வரையில் சபைக்கு உற்சாகமாய் ஆத்தும போஜனம் அளித்துச் சபையைக் கண்காணித்தார். 1914-ஆம் வருஷத் துவக்கத்தில் S. முத்துசாமி ஐயர் சபை குருவானார். அவருக்குப்பின் வந்த K. A. தாவீது ஐயர் முயற்சியால்

'பெத்லகேம்' எனும் நாமம் சூடிய ஒரு அழகிய தேவாலயம் கட்டப்பட்டது. 1921-இல் கனம் E. ஹொய்மன் அத்தியக்ஷரால் அது பிரதிஷ்டைசெய்யப்பட்டது. 1926-ஆம் வருஷத்தில் சபையின் சமாதானத்துக்கென்று கனம் J. சாந்தகிரேன் ஐயரோடு S. D. ஞானுச்சரியம் ஐயர் ரங்கூன் போய்ச் சேர்ந் தார். கனம் சாந்தகிரேன் ஐயர் சிலநாள் தங்கிச் சபையா ருக்கு நற்புத்தி புகட்டி ஊருக்குத் திரும்பினார். கர்த்தர் சபை யில் சமாதானத்தைக் கட்டளையிட்டார். 1928-ஆம் வருஷத் தில் இரங்கூன் சபையின் 50-ஆம் வருட ஜூபிலி கொண்டா டப்பட்டது; மகாகனம் பெக்ஸெல் அத்தியக்ஷரும் அம்மாளும் வந்திருந்து இவ்வைபவத்தைச் சிறப்பித்தார்கள். ஜூபிலி ஞாபகார்த்தமாக ஒரு மண்டபமும் கட்டப்பட்டது; இதைக் கட்ட விசேஷித்த முயற்சி எடுத்தவர் திரு. டேவிட் அதிஷ்டம் M.A.B.L. 1931-ஆம் வரு ஆரம்பத்தில் J. D. பர்வதம் ஐயர் சபை குருவானார். அவர் சிலகாலத்துக்குள் உடல் நலம் குன்றியதால் மாற்றப்பட்டு D. எபனேசர் ஐயர் சபை குரு வானார். இவருக்குப்பின் வந்தவர் R. தேவசகாயம் ஐயர்; இரண்டாம் பெரிய யுத்தத்தில் ஏற்பட்ட ஜப்பானிய குண்டு வீச்சினால் சபையார் அநேகர் வெளியேறும்போது அவரும் வெளியேற வேண்டியதாயிற்று. வெளியேறாமல் தங்கிவிட்ட வர்களுக்காக திரு. G. யோசேப்பு என்பவர் தேவாராதனை, அடக்கம் முதலியவற்றிற்காக கரிசனைப்பட்டார். யுத்த காலத் தில் நமது தேவாலயம் யாதொரு சேதமில்லாமல் காக்கப் பட்டது தேவ கிருபையே. ஜூபிலி மண்டபத்தின் தளம் பழுதாகியும் அது நமது சபையார் பலருக்கு அடைக்கல ஸ்தல மாயிற்று. கனம் J. சாந்தகிரேன் அத்தியக்ஷர் அவர்களும் ரங்கூனுக்குப் போய் அதன் தற்கால நிலைமையை அறிந்து கொண்டார்கள். G. T. வேதமாணிக்கம் ஐயர் விரும்பியபடி அவர் சில வருஷம் ரங்கூன் சபையைக் கண்காணித்தார். தற்சமயம் அங்கே திருப்பணி நடத்துகிறவர் V. பிலிப்பு தேவ ராஜ் ஐயர். இப்பொழுது சபையார் தொகை 162.

## 24. மலாயா

மலாயா நாட்டில் பிழைப்புக்கென்று போய் கோலாலம் பூரிலும், பினாங்கிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் நமது கிறிஸ்த வர்கள் வேலைகளில் அமர்ந்திருந்தார்கள். அவர்களினிடையே

திருப்பணி நடத்த மறைத்திரு. T. ரீசர் அவர்கள் 1906-ஆம் ஹூ பினங்கில் தங்கி சேவைபுரிந்தார். 1908 முதல் 1910 வரையில் கனம் மத்தேஸ் ஐயர் பினங்கில் தங்கி, பல இடங்களுக்கு பயணம் பண்ணி, சிதறுண்ட ஆடுகளைச் சந்தித்து பல நல்ல ஒழுங்குகளைச் செய்தார். T. யோசேப்பு ஐயர் கோலாலம்பூரில் 1907—1921-ஆம் வருஷம் முடிய சபை குருவாயிருந்தார். அவருக்குப்பின் மறைத்திரு. S. முத்துசாமி அவர்கள் கோலாலம்பூரில் சபை குருவாயிருந்து ஒரு அழகிய கோயிலையும், சபை குருவுக்கு விடுதியையும் கட்டி சுகவீனத்தோடு திரும்பி 1926-ஆம் ஹூ கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். அவருக்குப்பின் D. எபனேசர் ஐயர் 1933-ஆம் வருஷ வரை திருப்பணி செய்தார். இவருக்குப்பின் G. T. வேதமாணிக்கம், G. G. ஆச்சரியம், A. S. முத்தையா என்றவர்கள் இங்கு உழைத்திருக்கிறார்கள். இப்போது கோலாலம்பூரில் சபை குருவாயிருப்பவர் D. ரேனியுஸ் தேவப்பிரசாத் ஐயர். பினங்கில் T. யோசேப்பு ஐயரும், பிறகு V. தேவவரம் ஐயரும் குருமாராய் உழைத்தார்கள். பினங்கில் தற்சமயம் M. D. வில்லியம் ஐயர் சபை குரு. கோலாலம்பூரிலும் அதை சேர்ந்த ஊர்களிலும் நமது சபையார் 776. பினங்கில் சபையாரின் தொகை 335.

---

## 25. இந்திய லூத்தரன் மிஷனேரி சங்கம். (N. M. S.)

இச்சங்க ஊழியம் 1916-ஆம் ஹூ கட்னியில் தங்கியிருந்த மறைத்திரு. S. ஞானாபரணம் அவர்களால் ஆரம்பிக்கப்பட்டது. டாக்டர் S. கோஸ்வாமியால் 1928-ஆம் ஹூ வரையில் தென் ரீவாவில் நடைபெற்றது. 1923-ஆம் ஹூ ஞானாபரணம் ஐயரும் டாக்டர் A. நல்லதம்பியும் முதல் யுத்தத்தினால் நிறுத்தப்பட்ட ஜார்சுகுதா மிஷன் சேகரத்தில் சுவிசேஷ வைத்திய வேலைகளைச் செய்து, 1928-ஆம் ஹூ ஜாஷ்பூர், காங்பூர் பாகங்களையும், பிறகு முழுவேலையையும் கோஸ்னர் சபைக்குத் திருப்பிக்கொடுத்தார்கள். 1928-ஆம் வருஷம் கிறிஸ்தவர்கள் தொகை 1800.

1929-ஆம் ஹூ முதல் மிஷன் வேலை பின்வரும் ஸ்தலங்களிலிருந்து செய்யப்பட்டுவருகிறது :

1. **மார்வாஹி:** 1929-ஆம் ௵ ஜனுவரி ௴ தொடங்கின வேலை உசாத், கர்ஹனி என்னும் இரண்டு கிராமங்களில் நடத்தப்பட்டுவருகிறது.

2. **கோட்மா:** ரீவாவில் 10—10—52-இல் முதல் தேவாராதனை ஞானஸ்நானம் நற்கருணையோடு நடத்தப்பட்டது. இங்கு ஒரு சிறு தேவாலயமும், மருத்துவசாலையும் கட்டப்பட்டுவருகின்றன.

3. **அம்பிக்காபூர்:** இங்கு வெகு ஊக்கத்துடன் திருப்பணி செய்யத் தொடங்கின B. J. கிருபாதானம் ஐயர் 1954-ஆம் ௵ ஆகஸ்ற் ௴ மறுமைக்குள் பிரவேசித்தார்.

மிஷனெரி ஞானபரணம் பென்ஷன் பெற்றபோதிலும் பென்ற்ரா ரோட்டில் தங்கிக்கொண்டு N. M. S. ஊழியத்தைத் தம்மாலியன்ற வரையிலும் தொடர்ந்து செய்கிறார். அவரையன்றி கோட்மாவில் மறைத்திரு. T. ஸ்பென்சர், திரு. D. தேவப்பிரியம் என்போர் திருப்பணி நடத்துகிறார்கள். குமாரி E. S. வேதநாயகம் ஊசாதிலிருந்து ஊழியம் செய்கிறார்கள். மறைத்திரு. ரெய்மண்ட் மார்ட்டின் ஐயர் பேதூலில் வேதாகம பாடசாலை நடத்துகிறார். காலஞ்சென்ற கிருபாதானம் ஐயரின் மனைவியும் N. M. S. ஊழியத்தில் பங்குபெற்று நடத்துகிறார்கள்.

ஆந்திர லுத்தரன் சபையார், ஆற்காட் லுத்தரன் சபை, தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபையார் கொடுக்கும் உற்சாக ஈவுகளைக்கொண்டு, தேவ கிருபையால் ரீவா மிசியோன் சங்க வேலை நடைபெற்று வருகிறது.

---

## 26. இந்தோனேசியா

தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபையைச் சேர்ந்த டாக்டர் வில்லியம்ஸ் அவர்கள் வைத்திய மிஷனெரியாகவும், S. தேவநேசன் ஐயர் குருமார் வகுப்புக்கு போதனாசிரியராகவும் இந்தோனேசியாவில் திருப்பணி செய்து வருகிறார்கள். இவர்களை அங்கு அனுப்புவதில் உயர்திரு J. சாந்தகிரேன் அத்தியக்ஷர் எடுத்துக்கொண்ட முயற்சி அதிகம்.

---

## B. சுவீடன் திருச்சபை மிசியோன்.

ஷீர்ஞ்தர் என்ற சுவீடிஷ் மிஷனெரி தரங்கை மிசியோன் சம்பந்தமாக 1740-ஆம் ஞு கூடலூரில் உழைத்து அவ்வூர் பிரெஞ்சுக்காரரால் பிடிபட்டபின் கல்கத்தாவுக்குப் போய் 1758-ஆம் ஆண்டில் அங்கே ஒரு கிறிஸ்தவ சபையை ஏற்படுத்தினதைக் குறித்து முன்பார்த்திருக்கிறோம். 1831-36 வரையில் பீற்றர் பியல்ஸ்டெட் (Peter Fjelstedt) என்ற மற்றொரு சுவீடிஷ் மிஷனெரி திருநெல்வேலியில் உழைத்து உடல்நலக் குறைவால் இந்தியாவை விட்டுப்போக நேரிட்டது. அவர் சுவீடன் திரும்பினபின் அவர் முயற்சியின் பலனாக 1845-ஆம் ஆண்டில் லுண்ட் (Lund) மிஷன் சங்கம் ஏற்பட்டது. பத்து ஆண்டுகளுக்குப்பின் அது சுவீடிஷ் மிஷன் சங்கத்தோடு இணைக்கப்பட்டது. அதற்குள்ளாக லுண்ட் மிஷன் லைப்சிக் மிஷன் சங்கத்தாரோடு இந்தியாவில் ஒத்துழைக்க உடன்படிக்கை செய்துகொண்டது. சுவீடிஷ் மிஷன் இவ்வொத்துழைப்பைத் தொடர்ந்து நடத்திக்கொண்டது.

முன் சொன்ன Fjelstedt ஐயரால் எழுப்புதல் பெற்ற கிளாசெல் (Glasell) என்ற வாமிகுத்த மிஷனெரி லைப்சிக் மிஷனைச் சேர்ந்து 1849-ஆம் ஞு மார்ச்சு மீ இந்தியாவில் கரையிறங்கினார். அவர் சுயவெறுப்பும் தியாக சிந்தையும் நிறைந்தவராயிருந்ததால் மிஷன் வேலையை அதிக ஆடம்பரமின்றியும் சிக்கன முறையிலும் சீர்திருத்தி அமைக்க விரும்பினார். தமது சாதுரியத்தால் உடன் மிஷனெரிகளை தமது திட்டத்திற்கு இசையும்படி ஏவிவிட்ட போதிலும் இதில் பல சிக்கல்கள் ஏற்பட்டதால் அவர் 1851-ஆம் ஆண்டில் சுவீடன் திரும்பினார்.

இரண்டு ஆண்டுகளுக்குப் பின் லுண்ட்கிரென் (Lundgren) அக்டர்லோனி (Ouchterlony) என்ற இரு மிஷனெரிமார்கள் லைப்சிக் மிஷன் வேலைக்கென வந்து சேர்ந்தார்கள். தஞ்சாவூரில் ஆங்கில மிஷனெரி போப் ஐயரைச் சந்திக்கப் போன ஓர்சமயம் லுண்ட்கிரென் ஐயர் அவர் கோயிலில் நற்கருணை விருந்தில் கலந்து கொண்டதை முன்னிட்டு, அவரையும் அவருடைய அபிப்பிராயத்தை ஆதரித்த அக்டர்லோனி ஐயரையும் ஜர்மன் ஐயர்மார் சபைக்குப் புறம்பாக்



**The Rev. E. M. Brutzer,**

born at Riga on 22-11-1873, ordained in January 1899, arrived in India on 8-10-1905 and died at Braunschweig, Germany on 23-2-1940.



**The Rev. A. Bäfverfeldt,**

*(The Mission Director of the Church of Sweden Mission from 1938-* )

கினர்கள். ஆதலால் அவர்கள் ஜர்மன் மிஷனை விட்டுப்பிரிந்து ஒரு சுயாதீன சுவீடிஷ் மிஷனைத் தொடங்கலாமோவென யோசித்தும் அப்படிச் செய்யவில்லை. லுண்ட்கிரென் ஐயர் சுவீடன் திரும்பினர். அக்டர்லோனி ஐயர் தன் பிசகான அபிப்பிராயங்களுக்காக ஜர்மன் ஐயர்மாரிடம் மன்னிப்புக் கேட்டு அவர்களோடு சமரசமானர்.

பிறகு அக்டர்லோனி ஐயர் புதுக்கோட்டைக்கும், பின்னல் தஞ்சாவூருக்கும் மாற்றப்பட்டார். தஞ்சாவூரில் ஒரு பெண்பாடசாலையை ஏற்படுத்தி, இப்போதிருக்கும் அழகிய தேவாலயத்தையும் கட்டினர். 1858-ஆம் ஆண்டில் வேதசாஸ்திரப் பண்டிதரான புளும்ஸ்திராண்ட் (Blomstrand) கிறிஸ்தவ நூற்களைப் பிரசுரிப்பதற்கென தரங்கம்பாடியில் அமர்ந்தார். அவரால் தொடங்கப்பட்ட "அருணோதயம்" என்ற மாதாந்திர பத்திரிகை சென்ற 92 ஆண்டுகளாய் நமது சபைகளில் சேவைபுரிந்துவருகிறது. ரிடேன் (Ryden) என்பவர் திருச்சியிலும் கூடலூரிலும் சேவைபுரிந்து, சில ஆண்டுகளுக்குப் பின் சுகவீனத்தின் காரணமாய் சுவீடன் திரும்பினர்.

1869-ஆம் ஆண்டில் C. J. சாந்தகிரேன் ஐயர் இந்தியாவுக்கு வந்து சென்னையில் சபைகுருவாயிருந்த பக்தி மிகுந்த ஜர்மன் மிஷனெரி C. J. கிரெம்மர் ஐயரோடு தங்கி, அவர் குமாரத்தி தெயொடோரா கிரெம்மர் மிசியம்மாளை மணந்தது பிற்கால மிசியோன் சரித்திரம் சித்திபெற நடப்பதற்கு ஏதுவாயிற்று என்று சொல்லலாம். இது ஆண்டவரின் அதிசய வழிகாட்டுதல் எனத் திட்டமாய்ப் புலப்படுகிறது. சுவீடிஷ் மிசியோனும் லைப்சிக் மிசியோனும் ஒத்துழைப்பதற்கு இது முதல் படியாயிற்று. தகப்பன் சாந்தகிரேன் ஐயர் பின்னல் கோயமுத்தூர், மதுரை, சீர்காழி, விருதுநகர் முதலிய இடங்களில் பயனுற உழைத்தார். மதுரையில் ஒருபுதிய மிஷன் பங்களாவையும், ஒரு பெண்பாடசாலையையும் நமது ரட்சணிய தேவாலயத்தையும் பொன்னகரத்தில் கட்டிக் கொடுத்தார். அவருடைய 4 குமாரரும் ஒரு குமாரத்தியும் மிஷன் வேலையில் ஈடுபட்டிருக்கிறர்கள். நமது சபைகளின் பிரயோசனத்திற்கென்று சுவிசேஷ வாக்கியங்கள்பேரில் ஒரு கேள்விப் பிரசங்க புத்தகத்தையும், ஞானஉபதேச விஸ்தரிப்பு நூல்கள் மூன்றையும் சுவீடிஷ் பாஷையிலிருந்து மொழி பெயர்த்துப் பிரசுரம் செய்தார்.

1885-ஆம் ஹோர்பர்க் (Peter Hörberg) ஐயரும், 1887-ஆம் பெக்சல் (D. Bexell) ஐயரும் தமிழ்நாடு சேர்ந்து தேவதிருப் பணியில் அமர்ந்தார்கள். ஹோர்பர்க் ஐயர் தான் கோயமுத்தூரில் நமது லுத்தரன் தேவாலயத்தைக் கட்டினவர்

இந்தியாவில் மற்ற மிஷன்களில் நடப்பதுபோல் நமது நடுவிலும் பெண்கள் நடுவில் திருப்பணி நடத்த சீமையிலிருந்து பெண்களையும் மிஷனெரி வேலைக்குத் தருவிப்பது அவசியமென்னும் பிரச்னையை வற்புறுத்தி சுவீடனிலிருந்து எஸ்தர் பீற்றர்சன் மிசியம்மாள் தமிழ்நாட்டுக்கு வர ஏற்பாடு செய்தவர் தகப்பன் சாந்தகிரேன் சாஸ்திரியாரே. முதலில் பெண் பாடசாலையை மேல்விசாரணை செய்து, பிறகு சபைப் பெண்களிடத்திலும், இந்துப் பெண்களிடத்தும் திருப்பணி செய்வதில் எஸ்தர் பீற்றர்சன் மிசியம்மாள் ஓயாமல் உழைத்திருக்கிறார்கள். அதுமுதல் சுவீடன் தேசத்திலிருந்து அநேக சகோதரிகள் வந்து தமிழ்நாட்டில் உழைக்கிறார்கள்.

முற்சொன்ன புளொம்ஸ்திராண்டு சாஸ்திரியாரின் குமாரன் Theodor Blomstrand ஐயர் 1893-ஆம் வருஷத்திலும். A. B. Johansson ஐயர் 1895-ஆம் ஆண்டிலும் தமிழ்நாட்டுக்கு பெரிய ஆசீர்வாதமூட்டும் கருவிகளாய் சேவைபுரியத் தொடங்கினார்கள். இந்தியாவில் நடக்கும் மிசியோன் வேலையைப்பற்றிய கரிசனை சுவீடன் தேசத்தில் அதிகரித்ததால் பணச் சேர்ப்பும் மேலும் மேலும் பெருகிற்று. ஆயினும் இப்பணமெல்லாம் லேப்சிக் கொல்லேகியும், தரங்கையிலுள்ள மிஷன் ஆலோசனை சங்கத்தாரின் திட்டப்படியே செலவிடப்பட்டதாலும், நீண்டகாலம் சுவீடிஷ் இடங்களாக எண்ணப்பட்ட மதுரை கோயமுத்தூர் என்னுமிடங்களிலுள்ள சுவீடிஷ் மிஷனெரிகளை மாற்றும் பாத்தியம் தரங்கை ஆலோசனை சங்கத்தாருக்கே இருந்ததாலும் இந்நிலை மாறவேண்டுமென்னும் பிரச்னை ஏற்பட்டது. இதுசம்பந்தமாக இரு சீமை சங்கத்தாரும் கலந்து பேசினதின் பலனாக 1901-ஆம் மதுரை, புதுக்கோட்டை, அணைக்காடு என்ற குருசேகரங்கள் சுவீடிஷ் வட்டமாகப் பிரித்துக் கொடுக்கப்பட்டன. இதுவும் தேவநடத்துதலென்பதை முதலாம் பெரிய யுத்தகாலத்தில் யாவரும் அறிந்துகொள்ளக்கூடியதாயிருந்தது.

சுயாதீனமுள்ள சுவீடிஷ் வட்டம் ஏற்பட்ட சில ஆண்டுகளுக்குள்ளாக 20 பேருக்கு மேல் சுவீடனிலிருந்து மிஷனெரிகளாக வந்தார்கள். இவர்களில் சாந்தகிரேன் சாஸ்திரியாரின் 4 குமாரர்கள், ஒரு குமாரத்தி, பிரிக்கொல்ம் ஐயர், ஹொய்மன் சாஸ்திரியாரும் அவர் மனைவியும் வந்தார்கள். ஹொய்மன் சாஸ்திரியார் இதற்குமுன் வடஇந்தியாவிலுள்ள சந்தால் மிஷனில் உழைத்தவர். மிஷனெரிமார் அதிகரிக்க சுவீடனில் பணச்சேர்ப்பும் விர்த்தியாயிற்று.

சுவிசேஷப் பிரபல்லிய முயற்சி மதுரையில் தொடங்கிச் சுற்றிலும் பரம்பிற்று. விருதுப்பட்டியில் (இப்போது விருதுநகர்) A. B. யோகான்சன் ஐயர் நிலங்களை வாங்கி ஒரு பங்களாவைக் கட்டினார். அதில் தகப்பன் சாந்தகிரேன் சாஸ்திரியாரும் அவர் பிள்ளைகளும் வசித்து, சுற்றுப்பிரயாணங்கள் செய்து, வேலையை விஸ்தீரணப்படுத்தினார்கள். புதுக்கோட்டையில் பெக்சல் ஐயர் தங்கியுழைத்தார். ஆண் பாடசாலையை விர்த்திசெய்து மாணவர் விடுதியொன்றைக் கட்டி, பெண் பாடசாலையொன்றையும் ஏற்படுத்தினார். ஹொய்மன் சாஸ்திரியார் புதுக்கோட்டைக்கு மாற்றப்பட்டு ஒரு அழகிய கோயிலைக் கட்டினார். அணைக்காட்டில் புளும்ஸ்திராண்டு, கார்ல் சாந்தகிரேன், பிரிக்கொல்ம் என்ற ஐயர்மார் ஒருவர் பின் ஒருவராய் உழைத்தார்கள். அணைக்காட்டில் ஒரு புதிய கோயில் கட்டப்பட்டது. பட்டுக்கோட்டையிலும் சபை உண்டாயிற்று.

சுவீடிஷ் டாக்டராகிய F. கூகல்பர்க் திருப்பத்தூரில் வைத்தியசாலை ஏற்படுத்தியபின் சுவீடிஷ் சகோதரிகள் பலரும், பின்னால் டாக்டர் இசான்டர், சென்டல், எரிக்ஸ்சன் அம்மையார், வால்டேன் என்பவர்கள் அங்கு நடத்தின வேலையை யாவரும் அறிவோம்.

முதலாம் பெரிய யுத்தம் வந்தபோது ஜர்மன் மிஷன் சேகரங்களை வேறு சபைகளுக்குப் பங்கிடாதபடி சுவீடிஷ் மிஷன் ஜெர்மன் மிஷன் சேகரங்களையெல்லாம் ஒப்புக்கொண்டு அவைகள் சம்பந்தமான செலவுகளையும் பொறுப்புகளையும் நிறைவேற்றிவந்தது.

வேதாகம ஸ்திரீகளுக்குப் பயிற்சியளிப்பதில் சுவீடிஷ் மிஷன் மிக்க பிரயாசை எடுத்துக்கொண்டது. பட்டுக்

கோட்டையில் அமி லாகர்குவிஸ்த் (Amy Lagerquist) மிசியம்மாள் இவ்வகுப்புகளை நடத்தி திருச்சபை சரித்திர சம்பந்தமான புத்தகங்களையும் இயற்றினார்கள். பெரிய யுத்தத்திற்குப்பின் செமினேரி, சுவிசேஷகர் வகுப்புகள் நடத்துவதற்கு சுவீடிஷ் மிஷன் ஏராளமான பணத்தைச் செலவிட்டிருக்கிறது. பெங்களூரில் பிரிக்கொல்ம் ஐயர் நடத்தின குருமார் வகுப்பிற்காகவும், பின்னால் சென்னை கீழ்ப்பாக்கத்தில் J சாந்தகிரேன் ஐயரால் தொடங்கப்பட்டு இந்நாள் வரைக்கும் நடந்துவரும் "குருக்கள்" வகுப்புகளுக்காகவும் சுவீடிஷ் மிஷன் உற்சாகமாகப் பொருளுதவி செய்திருக்கிறது.

கள்ளர்களைச் சீர்திருத்தும் வேலையில் பவுல் சாந்தகிரேன் ஹிம்மல்ஸ்திராண்டு ஐயர்மார்கள் ஈடுபடவும், இந்தியமுறையில் ஓர் புதிய தேவாலயத்தைக் கட்டவும் சுவீடிஷ் மிஷன் எடுத்துக்கொண்ட முயற்சி மறக்கற்பாலதன்று.

மதுரை U. C ஹைஸ்கூல், அரசரடி மாணவர் விடுதி முதலியவற்றை நிர்மாணித்ததற்காக நாம் சுவீடிஷ் மிஷனுக்கு என்றும் கடமைப்பட்டுள்ளோம்.

தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபை சுயாதீன நிலைக்கு வந்திருப்பது ஆண்டவருடைய கிருபையினாலும் சுவீடிஷ் மிஷனுடைய பெருந்தன்மையினாலுந்தான் என்று சொல்வது மிகையாகாது.

இப்போது ஊன்றி வளர்ந்துவரும் கிறிஸ்தவ சிஷ்ய சங்கத்திற்கு அடிகோலிய ஹிம்மல்ஸ்திராண்டு ஐயரை நாம் ஒருபோதும் மறக்கமுடியாது. ஆண்டுதோறும் வேனிற்கால உஷ்ணத்தைப் பொருட்படுத்தாமல் யுவர்களுக்கென மகாநாடுகளை மே மாத விடுமுறை காலத்தில் உற்சாகத்துடன் நடத்தின ஹிம்மல்ஸ்திராண்டு ஐயரின் ஊழியத்தினால் பயன் பெற்ற பலர் இப்போது நமது சபையிலும், கல்வி ஸ்தாபனங்களிலும், சர்க்கார் வேலையிலும் பெயர்பெற்று விளங்குகிறார்கள்.

1926-ஆம் ஆண்டில் நமக்கு மிஷனெரியாக வந்து, யாவரின் அன்பையும் கவர்ந்துகொண்டு, தேவாராதனையைச் சிறப்பாக்கவும், குருமாருக்கென ஒடுக்கக் கூட்டங்களை நடத்தவும், ஆலோசனை சங்க அவயவமாகவும், சிலகாலம் ஆலோசனை சங்கத் தலைவராகவும் திருப்பணி செய்து இவ்வாண்டில்

சீமைக்குத் திரும்பின B.Fr. திலியாண்டர் ஐயர் நமக்கு சுவீடன் தேசம் அளித்த சிறந்த ஈவுகளிலொருவர் என்பதை மறவோம்.

தமிழ்நாட்டில் கடந்த ஆறு ஆண்டுகளாகத் தொடர்ந்திருந்த பஞ்சத்தையும், வறட்சியையும் கண்ணுற்ற சுவீடிஷ் மிஷனெரிமார் இவ்விடர் நீக்கி, கிராம மக்களின் வேட்கை தீர்க்க நிதியொன்றைச் சேர்த்து, பெரும் பொறிகளையும் (Machines) நீர்பாய்ச்சும் இயக்கிகளையும் (Pump set) வாங்கி Y. பிரிக்கொல்ம் ஐயர் மூலமாய்த் தமிழ்நாட்டுக்கு அனுப்பி, வறண்ட நிலங்களில் நீர்ப்பாய்ச்சல் குறைவின்றி கிடைக்க வழிதிறந்த சுவீடன் தேசத்தாருக்கு நாம் எவ்விதம் நன்றி கூறுவோம்.

சுவீடன் சபை த. சு. லு. சுவிசேஷக் குழுவினருக்கு ஈவாக R. அனேர் ஐயர் மூலமாக அனுப்பிய புதிய மோட்டார் வண்டியையும் அதைச் சேர்ந்த தளவாடங்களையும் நாம் பெற்றுக்கொண்டதற்காக நன்றிசெலுத்தி சுவிசேஷப் பிரபல்லிய ஊழியத்தில் புதிய ஊக்கத்துடன் ஈடுபடுவோமாக.

ஐம்பது ஆண்டுகளுக்குமுன் சீமைதேசம் போக வசதி பெருத தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபையின் பிரதிநிதிகள் சுவீடன்தேசம் போகப் பொருளுதவிசெய்து J. D. ஆசீர்வாதம், I. A. அப்பாதுரை, S. W. சவரிமுத்து, ஜேக்கப் குமரேசன் ஐயர்மாரும், சகோதரி லீதியா வேதநாயகம், திரு. S. துரைசாமி, மதுரை யுவபுரி செயலாளர் J. D. ஆசீர்வாதம் முதலியோரும் சுவீடன்தேசம் போனதால் பரஸ்பர அன்பு வளரவும் வாய்ப்பு கிடைத்ததற்காக ஆண்டவருக்கும் சுவீடிஷ் அன்பருக்கும் நன்றிசெலுத்துகிறோம்.

---

## III தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் திருச்சபை பிறந்து வளர்ந்த நவீன சரித்திரம். (1919–1955)

1914-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் தொடங்கிய முதல் மகா யுத்தம் லேப்சிக் மிஷன் வட்டத்திலுள்ள சபைகளைக் கஷ்டத்திற்குள்ளாக்கியது. சில மிஷனெரிகள் காவலுக்குள்ளாக்கப்பட்ட போதிலும் பெரும்பாலோர் சில கட்டளை கட்குட்பட்டு ஏறக்குறைய 1915-ஆம் ஆண்டின் முடிவுவரை தங்கள் தங்கள் இடங்களிலேயே இருப்பதற்குச் சர்க்காரால் அனுமதிக்கப்பட்டார்கள். 1915-ஆம் வருஷம் நவம்பர் மாதத்திலும் 1916-ஆம் வருஷம் மார்ச்சு மாதத்திலும் இந்த மிஷனெரிகள் தாங்கள் வேலை செய்யும் இடங்களிலிருந்து சொந்த நாட்டிற்கு அனுப்பப்பட்டார்கள். சண்டை முடிந்தவுடனே லேப்சிக் மிஷன் இந்தியாவில் மீண்டும் வேலை செய்ய அனுமதிக்கப்படாதென்பது விரைவில் தெரியவந்தது. இதுவரை லேப்சிக் மிஷனுக்கு உள்ளடங்கி ஒரு தனிப்பட்ட மதஸ்தாபனமாக இருந்ததைவிட ஒருபெரும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு முழுச் சபையையும் நடத்துவதற்கு ஸ்வீடிஷ் மிஷன் மிகுந்த நம்பிக்கையுடனும், துணிவுடனும் முன்வந்தது. இவ்விதம் பிரதம அத்தியட்சராகிய நாத்தான் சோடர்ப்ளோம் அவர்களின் தலைமையில் ஸ்வீடன் மிஷன் தாய்ச்சங்கம் முன்வந்தது இந்திய சபைகளுக்குக் கடவுளின் ஆசீர்வாதமாக முடிந்தது.

மதுரை, இராமநாதபுரம் ஜில்லாவில் இருந்த பழைய ஸ்வீடிஷ் ஸ்தாபனங்களில் தொடர்ந்து வேலை செய்வதில் ஸ்வீடிஷ் மிஷனுக்கு எவ்விதக் கஷ்டமும் நேரிடாதபோதிலும் வடக்கு வட்டத்திலிருந்த சொத்துக்களையும், பள்ளிக்கூடங்களையும் பரிபாலனம் செய்ய ஒப்புக்கொள்வதில் சில கஷ்டங்களிருந்தன. அரசாங்கத்தார் 1916-ஆம்ஸு ஜனுவரியில் லேப்சிக் மிஷனைச் சேர்ந்த எல்லாப் பள்ளிக்கூடங்களின் அங்கிகாரத்தையும் ரத்துச் செய்து விடுவதெனத் தீர்மானித்தனர். இந்தக் கஷ்டமான சந்தர்ப்பத்தில் மிஷனெரி கல்வி சங்கத்தாரும், தென்னிந்தியாவிலிருந்த சில முக்கியமான பிரிட்டிஷ் மிஷனெரிகளும் சேர்ந்து செய்த முயற்சியினால் அரசாங்கத்தார் நம் பள்ளிக்கூடங்களுக்குச் செய்து வந்த பணவுதவியைத் தொடர்ந்து செய்துவந்தனர். இதனால் நம் பள்ளிக்கூடங்

களுக்கும், விசேஷமாகக் கிராமச் சபைகளுக்கும் நேரிடவிருந்த போராபத்து நீக்கப்பட்டது. இதற்கென உழைத்தவர்களில் சீர்காழி உயர்தரப் பள்ளிக்கூடத் தலைவராயிருந்த மறைத்திரு. G. E. பிலிப்ஸ் அவர்களும், லெப்சிக் மிஷன் பள்ளிக்கூடங்களின் பரிபாலனச் சங்கச் செயலாளராயிருந்த மறைத்திரு. W. H. ஆர்கேன் அவர்களும், மறைத்திரு. J. H. மக்ளீன் அவர்களும் முக்கியமானவர்கள். இவ்விதமிருந்தபோதிலும் ஸ்வீடிஷ் சங்கத்தில் உழைத்துவந்த இரு ரஷ்ய தேசத்தினரும், சில காலத்துக்குப் பிறகு ஸ்வீடிஷ் மிஷன் செயலாளராயிருந்த மறைத்திரு. D. பெக்சல் அவர்களும் தொடர்ந்து வேலை செய்யக்கூடாதென்று அரசாங்கத்தாரால் தடை செய்யப்பட்டதனால் வடபகுதியைச் சேர்ந்த வேலைகளைச் செய்வதற்காக மறைத்திரு. E. ஹொய்மன் சாஸ்திரியார் (செயலாளர்) மறைத்திரு. H. பிரிக்கொல்ம், மறைத்திரு. N. சாமுவேல் அவர்கள் இம்மூவரைக்கொண்ட ஒரு ஆலோசனைச்சங்கம் 1916–ஆம் ஞு அக்டோபர் மாதத்தில் ஏற்படுத்தப்பட்டது. நமது மிஷனெரிகளுக்குள்ளும் சபையைச் சேர்ந்த அங்கத்தினர்களுக்கும், நம்முடைய தாரங்கம்பாடி மிஷன் வேலை சர்வதேசக் குழப்பங்களால் சிதைவுபடாது நடத்தப்பட வேண்டுமென்ற அபிப்பிராயம் வளர ஆரம்பித்தது. 1917-ஆம் வருஷத்தில் கூடிய சினட் இவ்விஷயத்தைப் பற்றிப் பேசிச் சுயேச்சையான ஒரு லுத்தரன் சபைக்குரிய சட்டதிட்டங்களை ஏற்படுத்தும்படி ஒரு கமிட்டியை நியமித்தது.

சபைக்குரிய விஷயங்களில் ஆலோசனைச் சங்கத்திற்கு உதவி செய்த ஒரு தமிழ்ச் சபைக் கமிட்டியை லெப்சிக் மிஷன் சர்ச் கௌன்ஸில் ஏற்படுத்தியது. இது 1914-ஆம் வருஷத்திய சினட் கூட்டத்திற்கேற்ப அம்மிஷன் செய்த கடைசி நடவடிக்கைகளில் ஒன்றாகும். இந்தக் கமிட்டி 1917-ஆம் வருஷத்து சினட் கூட்டத்திலும் ஏற்படுத்தப்பட்டு 1915-ஆம் ஞு முதல் 1920-ஆம் வருஷம் முடிய சபைக்கு ஒரு புதிய அமைப்புச் சட்டம் ஏற்படுத்தும் விஷயமாக ஏற்பட்ட ஆராய்ச்சிகளிலே விசேஷித்த உதவி செய்தது. மறைத்திரு. N. தேவசகாயம் அவர்கள் தன் வேலையை விட்டு நீங்கும் காலம் வரையும் அந்தக் கமிட்டிக்குத் தலைவராக இருந்தார். அவருக்குப்பின் மறைத்திரு. A. C. செபஸ்தியான் அவர்கள் நியமிக்கப்பட்டார். சபைச் செலவிற்கு வருஷத்திற்குத் தேவையான

தொகை ரூ. 33,000. இத்தொகையில் சபைச் சேர்ப்பினால் வருமானம் ரூ. 12,000. மீதி ரூ. 21,000 மிஷன் சங்கத்தார் சபைக்குக் கொடுக்கும் உதவி. இந்த மிஷன் உதவி நாளடைவில் வருஷத்திற்கு ரூ. 500 வீதம் குறைக்கப்பட்டு 42 வருஷ காலவரைக்குள் முழுவதும் சபை சுயபரிபாலனம் அடையவேண்டும். ஆலோசனைச் சங்கம் 10-10-1916-இல் கூடிய கூட்டத்தில் பேசிய இந்தத் திட்டம் சுயபரிபாலனத்தைப்பற்றி அவர்கள் செய்த முதற் பிரேரபணையாகும். பின் நடந்த சம்பவங்களிலிருந்து தமிழ்ச் சபை அதிலும் பெருத்த உத்தரவாதத்தை எடுத்துக்கொள்ள அவசியமிருக்கிறதென்று தெரியவந்தது. ஆனால் பாசல் (Basel) மிஷன் வட்டத்தைப் பல சங்கத்தார் பங்கிட்டுக்கொண்டதுபோல் நம்முடைய தமிழ் நாட்டிலும் ஏற்பட்டு விடக்கூடாதென்ற உறுதியான எண்ணமிருந்தது. ஆலோசனைச் சங்கத்தாரும், மதுரையில் கூடிய 11-ஆம் சினட் கூட்டத்தால் நியமிக்கப்பட்ட சுயாதீனத் தமிழ் லுத்தரன் சபை அமைப்புக் கமிட்டியாரும் இவ்விஷயத்தைக் குறித்துப் பல ஆராய்ச்சிகள் செய்துவந்தார்கள். 11-11-1918-இல் யுத்தம் முடிந்தது. கவலையும் அதிகரித்தது. ஆகவே, புரசவாக்கம் ஆலயத்தில் மேற்சொன்ன இரு கமிட்டிகளும் 16-12-1918-இல் ஒன்றாய்க் கூட்டப்பட்டுச் சுயேச்சையான ஒரு தமிழ் லுத்தரன் சபை நிறுவப்படுவதைப்பற்றி யோசித்து ஒரு சபை அமைப்புத் திட்டமும் தயாரிக்கப்பட்டது. அதைப்பற்றியும் சொத்து விஷயமாயும் அரசாங்கத்தாருக்கு ஒரு அறிக்கை செய்துகொள்ளுவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. மேலும், இது விஷயமாகச் சபைகளின் அங்கீகாரம் பெறுவதற்காக 1919-ஆம் ௵ ஜனுவரி ௴ 14-ஆம் தேதி தஞ்சாவூரில் ஒரு விசேஷித்த சினட் கூட்டம் கூட்டுவதென்றும் ஆலோசனைச் சங்கத்தால் தீர்மானிக்கப்பட்டது.

---

## தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபை அமைப்பு.

மேற்கூறியவாறு தஞ்சாவூரில் 14-1-1919-இல் கூடிய விசேஷித்த சினட் கூட்டத்தில் 5 மிஷனெரிகளும், 31 இந்திய குருமாரும், 55 சபைப் பிரதிநிதிகளும் கூடியிருந்தனர். லைப்சிக் மிஷன் வட்டத்தின் சொத்துக்களை ஸ்வீடன் மிஷன் சங்கத்

திற்கு மாற்றுவதென்றும், அது முடியாவிட்டால் தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபைக்கு அச்சொத்துக்களைக் கொடுப்பதென்றும் அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொள்ளும்படி கமிட்டி ஒன்று அக்கூட்டத்தாரால் நியமிக்கப்பட்டது.

சில காலம் பொறுத்து இந்தியா பர்மாவிலுள்ள எல்லா ஜெர்மன் மிஷன் சொத்துக்களையும் மேற்பார்வையிட நிர்வாகச் சங்கங்கள் அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்டு எல்லா மிஷன் சொத்துக்களும் கிறிஸ்தவ ஊழியத்திற்காகத் தற்காக்கப்பட்டன. நாளடவில் லேப்சிக் மிஷன் சொத்துக்களெல்லாம் தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபை, ஸ்வீடிஷ் மிஷன் சங்கம், திரும்பிவந்த லேப்சிக் மிஷன் சங்கம் ஆகிய மூன்று சங்கங்களும் ஒன்று சேர்ந்து பிரேரேபித்து ஜாயின்ட் கௌன்சிலால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு திட்டத்தின்படி, இந்திய அரசாங்கக் கட்டளையால் மேற்கண்ட மூன்று சங்கங்களுக்கும் மாற்றப்பட்டன.

அக்காலத்தில் சொத்துக்களின் பரிபாலனவிஷயமாகபலர் மனத்தில் அமைதியின்மை ஏற்பட்டபோதிலும் சபை சுயேச்சை ஆட்சி அடைவதற்குச் செய்த திட்டமே சபை முன்னேறுதற்கு ஏற்பட்ட ஓர் முக்கிய சம்பவம். திருச்சபை அமைப்புத் திட்டம் சினட் கூட்டத்தால் அங்கீகரிக்கப்பட்ட அந்நாளிலிருந்து (14-1-1919) தமிழ்ச் சபை சுயேச்சை ஆட்சியுள்ள ஒரு சபை என்றும், தமிழ்ச் சபையின் காரியங்களை நிர்வகிக்கத் தமிழ்ச் சினட் தமிழ் ஆலோசனைச் சங்கத்தை நியமிக்கும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. அதன்படியே மறைத்திரு. E. ஹெய்மன் சாஸ்திரியாரும் மறைத்திரு. பிரிக்கொல்ம் அவர்களும் சபை ஆலோசனைச் சங்கத்தில் மிஷன் பிரதிநிதிகளாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டார்கள். மறைத்திரு. S. முத்துசாமி அவர்களும் குருவல்லாத மற்றும் இருவரும் சீட்டுக்களின்மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவ்விதமாக இதுவரை மிஷன் சங்கத்தார் நேர்ப்பார்வையில் நடத்தப்பட்டு வந்த சபை வேலை, சுவிசேஷ வேலை, ஆரம்பப் பாடசாலை வேலை முதலியவற்றை நிர்வகிக்கும் பொறுப்பை அந்த நாளிலிருந்து தமிழ்ச் சபை எடுத்துக்கொண்டது. மற்ற வேலைகளையும் நாளடவில் சபைக்கு மாற்றவேண்டும் என்ற எண்ணமுமிருந்து வந்தது. அந்த சினட் கூட்டத்தின் மற்றொரு தீர்மானத்தின்படி இச்சபையானது இந்திய அரசாங்கத்தின் சங்கங்களின்

பதிவுச் சட்டத்தின்படி (Societies Registration Act XXI of 1860), 29-1-1919 இல் பதிவு செய்யப்பெற்றது.

சினட் கூட்டத்தில் தீர்மானித்தபடி லேப்சிக் மிஷன் சொத்துக்களைப்பற்றி அரசாங்கத்திற்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்பட்டது. லேப்சிக் மிஷனின் மத ஊழியங்களைப் பரிபாலிக்க ஓர் சுதேசச் சங்கம் முன்வந்தது அரசாங்கத்தாருக்குத் திருப்திகரமாயிருந்தது. சொத்து விஷயமாயும் அரசாங்கத்தாரோடு ஒரு முடிவுக்கு வருவதில் இந்தியாவிலுள்ள இரு சங்கங்கள் மிகவும் உதவியாயிருந்தன: (1) இப்பொழுது N.C.C. என்று அழைக்கப்படுகிற நேஷனல் கிறிஸ்தவ கௌன்சில், (2) 1918-ஆம் ஞு நாகப்பூரில் கூடிய அகில இந்திய கிறிஸ்தவ மகாநாடு. சொத்துக்களை நிர்வகிக்க அரசாங்கத்தார் சில நிர்வாகச் சங்கங்களை (Boards of Trustees) ஏற்படுத்தினார்கள். 1934-ஆம் வருஷத்தில் எல்லாச் சொத்துக்களும் நமது வட்டாரத்திலுள்ள மூன்று சங்கங்களுக்கும் (T. E. L. C., C. S. M., L. E. L. M.) சர்க்கார் செய்த புதுச் சட்டப்படி மாற்றப்பட்டன.

நமது சபை சுயேச்சை ஆட்சியடைந்தவுடன் பல புதுத் திட்டங்களை ஏற்படுத்த முயன்றது. புது சபைச் சங்கங்கள், வட்ட சங்கங்கள், உயர்தர எலிமெண்டரி பாடசாலைகள் சார்பாய்ச் சில வட்ட போர்டிங் ஸ்தாபனங்கள் ஏற்படுத்தப்பட்டன. மேலும் உயர்தரக்கல்வியும், தொழிற் கல்வியும் நம் வாலிபருக்குள் பரவ, L. H. & T. E. Fund ஸ்தாபனத்தின் மூலமாய் ஒரு பெருமுயற்சி செய்யப்பட்டது. ஊழியருக்குப் புது விதிகள், பழைய பென்ஷன் ஒழுங்கிற்குப் பதிலாக ஊழியருக்குப் பிராவிடண்ட் பண்ட் முதலிய விஷயங்கள் திட்டமாயின.

---

## 3. தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபை ஆரம்ப காலம்.

புதிதாய் ஏற்படுத்தப்பட்ட சபையில் அடியிற்கண்ட பல சிக்கல்கள் ஏற்பட்டன :—

(1) **இரட்டை பொறுப்பு**:- மிஷன் சங்கக் காரியதரிசியே சபையின் தலைவராக சினட் கூட்டத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டபடியால் அவருக்கு ஒரு கஷ்டமான நிலை ஏற்பட்டது

ஒரு பக்கத்தில் அவர் சீமைச் சங்கத்தாருக்கும் மற்றொரு பக்கத்தில் 1919-ஆம் ஹு ஜனவரி மாதம் 29-ஆம் தேதி பதிவு செய்யப்பெற்ற சபைக்கும் உத்திரவாத முள்ளவரானார். அவ் வருஷம் மே மாதம் 22-ஆம் தேதி நடந்த கூட்டத்தில் தான் சீமைச் சங்கத்தார் தமிழ்ச் சபையின் புது அமைப்பை அங்கீ கரித்தார்கள். அதற்குப்பின் ஜூலை மீ 23-ஆம் தேதிதான் பழைய ஆலோசனை சங்கம் சீமைச் சங்கத்தின் தீர்மானப்படி புதிய தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் திருச்சபையின் நிர்வாக சங்கமாகிய தமிழ்ச் சபை ஆலோசனை சங்கமே இனி தன் வேலைக்கு முழுவதும் பொறுப்புள்ளதென்று பதிவு செய்தது. ஆகவே மிஷன் சங்கக் காரியதரிசி ஸ்வீடிஷ் மிஷன், தமிழ்ச் சபை என்ற இரு பிரத்தியேகமான சங்கங்களுக்குத் தலைவ ரானார். ஏனென்றால் தெற்கு வடக்கு வட்டங்களில் இன்னும் சபைக்கு மாற்றப்படாத வேலைகளில் மிஷன் சங்கமே பொறுப்பை வகித்துக் கொண்டிருந்தது. முடிவான இந்த ஒழுங்கு நடைபெறும்வரை தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபை யால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆலோசனை சங்கமும், சீமைச் சங்கத்தாரால் நியமிக்கப்பட்ட பழைய ஆலோசனை சங்கமும் கூடி சபை விஷயங்களை ஆலோசித்து பொதுப் பொறுப்புடன் சகல தீர்மானங்களும் செய்யப்பட வேண்டுமென்று இரு சங்கங்களும் ஒப்புக்கொண்டிருந்தன. இப்படிக் கூடிச்செய்த தீர்மானங்களெல்லாம் தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபைச் சங்க நடபடிகள் Nos. 1-6-லும், ஸ்வீடிஷ் சபைச் சங்க நடபடிகள் Nos. 52-55-லும் தாக்கல் செய்யப்பட்டன. ஜூலை மாதம் 23-ஆம் தேதி கூடிய தமிழ்ச் சுவிசேஷ சபைச் சங்கக் கூட்டத்தில் இரண்டொரு பொது விஷயங்கள் பதிவு செய்யப் பட்டன. இத்தேதியிலிருந்துதான் தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் திருச்சபை சம்பந்தப்பட்ட விஷயங்களை ஷை புது ஆலோசனை சங்கத்தின் கூட்டங்களுக்கே கொண்டுவர மறைத்திரு. E. ஹெய்மன் சாஸ்திரியார் பொறுப்பேற்றார். தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபைச்சங்கம் 9-11-1919-இல் கூடிய அதன் ஏழாவது கூட்டத்தில்தான் சபைக்கடுத்த காரியங்களைத்தானே நிர்வ கிக்க ஏதுவாயிற்று. அக்கூட்டத்தில் காரியதரிசி, பொக்கிஷ தாரி புதிதாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டு தலைவர், காரியதரிசி, பொக்கிஷதாரி முதலியவர்களின் அலுவல்கள் வரையறுக்கப் பட்டன. இவ்விதமாய்ப் புது அமைப்புத் திட்டம் முழுவதும் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. அதன் பிறகு மிஷன்

ஆலோசனைச் சங்க நபர்கள், தமிழ்த் திருச்சபை ஆலோசனை சங்கக் கூட்டங்களுக்கு வராமல் நின்றுவிட்டனர்.

**(2) தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபைப் பண ஒழுங்குகள்.**

மிஷன் கணக்குகளிலிருந்து சபைக் கணக்குகளைப் பிரிக்க மறைத்திரு. E. புருட்சர் அவர்கள் கொடுத்த சில பிரேரேபனைகள் சபை ஆலோசனைச் சங்கத்தின் இரண்டாவது கூட்டத்தில் பரிசீலனை செய்யப்பட்டன. பிறகு சபைச்சங்கப் பொக்கிஷதாரியாகிய திரு. M. D. மாணிக்கம் அவர்கள் மிஷன் சங்கப் பொக்கிஷசாலையோடு சம்பந்தப்பட்ட மிஸ். A. ஹோல்ம் மிசியம்மாளோடும் கலந்து சில ஏற்பாடுகளைச் செய்து முடிக்கச் சபைக்கணக்குகள் மிஷன் கணக்குகளிலிருந்து முழுவதும் பிரிக்கப்பட்டன. மேலும் பென்ஷன் கொடுக்கும் பழைய ஒழுங்கை நிறுத்திவிட்டு அதற்குப் பதிலாக மிஷன், சபை ஊழியர் யாவருக்கும் ஒரு பொதுப் பிராவிடண்ட் பண்ட் ஏற்படுத்துகிறதென்றும் தீர்மானிக்கப்பட்டு அது 1932-இல் அமுலுக்கு வந்தது.

**(3) சபை அமைப்புத் திட்டத்தைப் பற்றிய விவாதங்கள்.**

பல பக்கங்களிலிருந்தும், புது அமைப்புத் திட்டம் குறை கூறப்பட்டது. முதலாவதாக இந்தியர்கள் எண்ணிக்கை அதிகமாயுள்ள ஒரு சங்கம் காரியங்களை நிர்வகிப்பது ஓர் புதுப் பழக்கமாய்த் தோன்றிற்று. அச்சங்கம் இவ்விதப் பெருத்த பொறுப்பை எடுத்துக்கொள்ளத் தனக்கிருக்குந் தகுதியைக் காட்டவேண்டிய கடமை அதன்மேல் விழுந்தது. 1920-ஆம் ஹூ மே மாதம் கூடிய சினட் கூட்டத்தில் பழைய சங்கத்தின் அங்கத்தினர்களே தேர்ந்தெடுக்கப்பட்டமை: இச்சங்கம் முழுச் சபையின் ஆதரவையும் பெற்றிருந்தது என்பதற்கு ஒரு சான்றாகும். இரண்டாவதாக, அமெரிக்கா ஐரோப்பா கண்டங்களிலுள்ள, சுவிசேஷ லுத்தரன் சபைகளிலும் தென்னிந்திய ஆங்கில சபைகளிலும் குருவல்லாதோர் சபையின் உயர் நிர்வாகச் சங்கங்களில் அங்கத்தினராய் உழைத்து வந்த போதிலும், நமது சபையில் குருவல்லாதோரை உயர் நிர்வாகச் சங்கங்களில் புகுத்துவது ஓர் புதுமையாய்த் தோன்றிற்று. மூன்றாவதாக, குருவல்லாதவரைச் சபை வேலையில் சேர்த்துக் கொள்வது உசிதமென்று ஒரு பிரமாணமாகப் பெரும்பாலான குருமார்கள் ஒப்புக்கொண்டபோதிலும், கிராமச் சபைகளின் ஊழியத்தில் கஷ்டங்களேற்படக்கூடுமே என்ற ஒரு பயம், குரு



**The Rt. Rev. E. Heuman, Ph. D.,**

(*First Bishop of Tranguebar from 1921—1926*)

born in Sweden on 9-7-1858, ordained on 12-6-1889, arrived in India on 14-10-1903, consecrated as the first Bishop of Tranquebar on 8-3-1921, and died in India on 25-7-1926.



**The Rt. Rev. D. Bexell,**

(*Second Bishop of Tranquebar from 1928–1933*)

born on 24–8–1861 at Barnarp in Sweden, ordained 1887, arrived in India on 30–8–1887, consecrated as the second Bishop of Tranquebar on 12–2–1928 and died in India on 5-7–1938

மார்களுக்குள் ஏற்பட்டது. ஆயினும் குருவல்லாதோரையும் சேர்த்துத்தான் சபை வேலையின் பொறுப்பைத் தாங்க வேண்டுமென்று உணர்ந்தவர்களாய், குருவல்லாதோரின் ஒத்துழைப்பை ஆவலோடு குருமார் எதிர்நோக்கினார்கள். முடிவாக மிஷன் தரப்பில் இவ்விதப் பெரிய முன்னேற்றத்திற்குச் சபை பக்குவமாயிருக்கின்றதா என்ற ஓர் சந்தேகம் இருந்தது. யுத்த காலத்திலும் யுத்தம் முடிந்த பின்னரும் சபை தன் காரியங்களைப் பார்த்துக்கொள்ள வேண்டும் என்னும் சில முக்கிய அம்சங்களில் சுதேச சபை பெரிய உத்தரவாதத்தை ஏற்றுக்கொள்ளச் செய்ய மிஷனைக் கடவுள் திட்டமாய் வழி நடத்துகிறாரென்று மிஷனெரிமார்கள் ஆவலோடு சபைகளை உற்சாகப்படுத்தினார்களென்பதும் உண்மையே. ஆனால் ஜெர்மன் மிஷன்கள் இந்தியாவிற்கு வர அனுமதிக்கப்படாதென்ற போதிலும், நேஷனல் மிஷனெரி கௌன்சிலால் சிபார்சு செய்யப்பட்ட மிஷன் ஸ்தாபனங்களால் அவ்வேலைகள் நடந்தேற யாதொரு தடையும் இராதென்று தெளிவான போது மிஷன் துரிதமாய்ச் சென்றுவிட்டதென்று சில மிஷனெரிகள் எண்ணினார்கள். ஆனால் அச்சமயம் இவ்வித அமைதியின்மைக் கிடையில் கடவுளின் ஆவியானவர் தமது திருச்சபையை நிறைவுள்ள ஒரு வாழ்க்கைக்கு நடத்துகிறார் என்று உணர்ந்தவர்களாகிப் பெரிதும் நம்பிக்கையும் முன்னோக்கமும் உள்ள மிஷனெரிமார்களால் மிஷன் ஆட்சி நடத்தப்பட்டு வந்தது. புதிய சபைத்திட்டம் முற்றிலும் மக்களாட்சி முறையை அனுசரித்ததாக விருக்கிறதென்ற குறையைத் தாய்ச் சங்கத்தார் திட்டமாக எடுத்துக் கூறித் தலைவர் உத்தியோகமாவது மூன்றாண்டுத் தேர்விலிருந்து விலக்கப்பட வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். இவ்விதமாகச் சீமை சங்கத்தார் புது அமைப்பின் உறுதியின் விஷயமாகக் காட்டிய கரிசனையை 1920-ஆம் ௵ கூடிய சினட் கூட்டம் ஒப்புக்கொண்டு ஆறு வருஷத்திற்கொருமுறை தலைவர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்ற பொது அபிப்பிராயம் இருந்த போதிலும் மறைத்திரு. E. ஹொய்மன் சாஸ்திரியாரை ஜீவியத் தலைவராக ஏற்படுத்தச் சம்மதித்தது.

## (4) அமைப்புத் திட்டத்தை திருத்தி யமைத்தல்

உயர்மிகு மறைத்திரு. டேனேல் அத்தியக்ஷர், கனம் வெஸ்ட்மன் போராசிரியர், மிஷன் டைரக்டராகிய புருண்டின் ஐயரும்

ஸ்வீடனிலிருந்து இருபதாம் வருஷக் கடைசியில் இந்தியாவிற்கு வந்து, எல்லா மிஷன் ஸ்தாபனங்களையும், சபைகளையும் சுற்றிப் பார்த்தார்கள். பிறகு ஏற்கனவே மிஷன் சங்கத்தாரும் சபைச் சங்கத்தாரும் முடிவு செய்து வைத்திருந்து திருத்தப்பட்ட அமைப்பின் நகலை S. C. C. கூட்டத்தாரோடு கலந்து விவாதித்தனர். அதன்படி Doc. A-இல் சபையின் முக்கிய அமைப்பு குறிக்கப்பட்டுள்ளது. Doc. B-இல் சபைக்கும் மிஷனுக்கும் உள்ள ஒப்பந்தம் குறிக்கப்பட்டுள்ளது. Doc. C-இல் சபை, மிஷன் என்ற இரு சங்கங்களின் வேலையைத் தொடர்புப் படுத்தும் ஐக்கிய ஆலோசனைச் சங்க (J. C.) சம்பந்தமாய்க் குறிக்கப்பட்டுள்ளது. இப்புதுத் திட்டம் ஏற்கனவே சபைகளுக்கு அனுப்பப்பட்டு S. C. C. கூட்டத்தாரால் பரிசீலனை செய்யப்பட்டது. நடந்த விவாதத்தில் 1919-ஆம் வருஷம் ஜனவரி மாதம் தஞ்சாவூரில் ஒப்புக்கொள்ளப்பட்ட சாதாரண அமைப்புத் திட்டத்தில் விடப்பட்டதும், தெளிவின்றி இருந்த விஷயங்களும் தெளிவாக வரையறுக்கப்பட்டனவென்பது தெளிவாயிற்று. Doc. A. பன்னிரண்டாவது பிரிவில் தலைவர் ஆறு வருஷங்களுக்காவது அல்லது ஜீவியத்திற்காவது தேர்ந்தெடுக்கப்படுவார் என்று கண்டிருந்தது. மறைத்திரு. E. ஹொய்மன் அவர்களை ஜீவியத் தலைவராக ஏற்றுக்கொள்ளச் சபை ஆயத்தமாகவிருந்த போதிலும் அதை ஒரு பிரமாணமாக ஒப்புக்கொள்ள முடியுமா என்ற ஐயமும் இருந்தது. இச்சந்தர்ப்பத்தில் வட்டத்தின் வேலையில் மிஷனுக்கும் சபைக்கும் பொதுப் பொறுப்பு இருக்கும் காலத்திற்குமட்டும் ஸ்வீடன் தேசத்தில் சபைத் தலைவர் விஷயமாகக் கையாளப்படும் முறையைப் பரீட்சார்த்தமாக இங்கும் அனுசரிப்பது உசிதமாகாதோ என்று ஸ்வீடன் தேசத்திலிருந்து வந்திருந்த மூவரும் அபிப்பிராயம் கொடுத்தார்கள். அவ்வாறே பரீட்சார்த்தமாக அத்தியக்ஷர் ஆட்சியை நமது சபையில் நிறுவ சினட் விரும்பியது. இச்செயலுக்கு ஸ்வீடன் தேசத்திலிருந்து வந்திருந்த பிரதிநிதிகள் கூறிய பலத்த ஆதாரங்கள் திருப்தியளித்தன. 1920-ஆம் வருஷ சினட் கூட்டத் தீர்மானத்தின்படி மறைத்திரு. E. ஹொய்மன் சாஸ்திரியார் அவர்களே சபையின் ஜீவியத் தலைவராக அல்லது அத்தியக்ஷராக நியமனஞ் செய்ய உயர்மிகு. மறைத்திரு. டனேல் பிஷப் அவர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. ஆகையால் எதோவொரு சமயத்தில் பரீட்சார்த்த

மாக அத்தியட்சர் ஆளுகை ஏற்படுத்தப்பட வேண்டுமென்றால் மறைத்திரு. E. ஹொய்மன் சாஸ்திரியாரவர்களையே சபையின் முதல் அத்தியட்சராக அபிஷேகம் செய்வது உசிதமாகும் என்று குருக்களும் ஏனையோரும் அபிப்பிராயப்பட்டார்கள். ஆகவே, ஜீவியத் தலைவருக்கு, அத்தியட்சர் என்ற வேதாகமப் பெயர் சூட்டப்படலாமென்று தீர்மானிக்கப்பட்டது. இதற்குச் சபையில் சிற்சில இடங்களில் எதிர்ப்புமிருந்தது. Doc. B. ஐந்தாவது பிரிவில் ஜீவியத் தலைவர் சபையின் அத்தியட்சராகவும் அபிஷேகம் செய்யப்படுவார் என்ற பகுதி சினட் கூட்டத்தில், இருவர் நடுநிலைமை வகிக்க, மற்றவர்களால் நிறைவேற்றப்பட்ட போதிலும், கூட்டத்திற்குப்பின் நடந்த விவாதம் சபைக்கும் E. ஹொய்மன் அத்தியட்சர் அவர்களுக்கும் மனவருத்தத்தை விளைவித்தது. இருந்தாலும், அத்தியட்சருடைய பக்தியும், உயர்ந்த வாழ்க்கையும், பொறுமையும், சபையும் மிஷனும் அபிப்பிராய பேதமுள்ளவர்களிடத்தில் காட்டிய தயாளமுமே அவர்கள் நிர்ணயித்த ஒழுங்கை நிறைவேற்றுவதற்குச் சாதகமாக அபிப்பிராயங்களை மாற்றக் கூடியனவாக விருந்தன. சிலரோ அத்தியட்சர் ஊழியம் சபையை லுத்தரன் உபதேசத்திற்கு மாறாகப் போய்விடச் செய்யுமோ என்ற பயத்தினால் சபையை விட்டுப்பிரிந்து சிற்சில இடங்களில் மிசூரி சபையைச் சேர்ந்தது வருத்தத்தை உண்டாக்கியது. ஆயினும் சுவிசேஷ அத்தியட்சரின் ஊழியம் நமது தமிழ் லுத்தரன் சபையில் ஆசீர்வாதங்களைக் கொண்டுவந்திருக்கிறது.

---

## 4. தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபையும், லைப்சிக் மிஷனும்.

நேஷனல் கிறிஸ்தவ கௌன்சிலார் முயற்சியாலும் சர்வ தேச மிஷனெரிக் கௌன்சிலார் முயற்சியாலும் ஸ்வீடிஷ் சங்க மிஷனெரிகளாக மறைத்திரு. பிரோலிக் சாஸ்திரியாரும், மறைத்திரு. P. கேப்ளர் அவர்களும் இந்தியாவிற்கு வர 1925-ஆம் வருஷத்தில் அனுமதிக்கப்பட்டனர். லைப்சிக் மிஷன் மறுபடியும் தன் வேலையிடங்களுக்குத் திரும்பும் விஷயமாய் N. C. C. சங்கத்தோடும் அரசாங்கத்தோடும், இங்குள்ள மிஷனோடும், சபையோடும் கலந்து யோசிக்க லைப்சிக் கொல்லேகியத்தின் பிரதிநிதிகளாக மிஷன் டைரக்டர் C. ஈமல்ஸ்

சாஸ்திரியாரும், மறைத்திரு. G. கன்னகீசர் அவர்களும் அனுப்பப்பட்டனர். இவர்கள் S. C. C.-யுடன் கலந்து பேசின பிறகு லேப்சிக் மிஷனுக்கும் தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபைக்கும் அடியிற்கண்ட ஒரு ஒப்பந்தத்தை 9—4—1926-இல் கூடிய S. C. C. கூட்டம் அங்கீகரித்தது.

(1) லேப்சிக் மிஷன் மறுபடியும் தன் வேலை ஸ்தலத்திற்குத் திரும்புவதைத் தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபை சந்தோஷத்தோடு வரவேற்கிறது.

(2) A, B, C பத்திரங்களில் குறித்துள்ள தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபையின் அமைப்புத் திட்டத்தை லேப்சிக் மிஷன் ஒப்புக்கொண்டு அவைகளில் குறிப்பாய் அடங்கியுள்ள பொறுப்புகளை ஸ்வீடிஷ் மிஷன் சங்கத்தோடு சேர்ந்து தானும் ஏற்றுக்கொள்ள ஒப்புக்கொள்ளுகிறது.—குறிப்பு. தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபையின் வேலையில் ஒன்றிற்கு மேற்பட்ட மிஷன்கள் ஒத்துழைத்தாலும் சபையின் ஒற்றுமை, சுயாதீனம், அமைப்புத் திட்டம் முதலியன எவ்விதத்திலும் பாதிக்கப்படாது.

(3) லேப்சிக் மிஷன் திரும்பி வருவதால் A. B. C. பத்திரங்களில் ஏற்படும் மாறுதல்களையும் லேப்சிக் மிஷனுக்கும் தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபைக்கும் உள்ள சட்டப் பிரகாரமான சம்பந்தத்தையும் காட்ட D என்ற ஒரு பத்திரம் ஏற்பட வேண்டும்.

லேப்சிக் மிஷன் திரும்பி வருவதால் ஏற்படும் மாறுதல்கள் அடியிற் குறிக்கப்பட்டுள்ளன.

(1) T. E. L. C. ஆலோசனைச் சங்கத்திற்கு லேப்சிக் கொல்லேகியம் தன் பிரதிநிதி ஒருவரை (குருவை) நியமிக்கும்.

(2) ஐக்கிய ஆலோசனைச் சங்கத்தில் (J. C) இரு மிஷன்களுக்கும் தனித் தனியே குறைந்தது ஒரு பிரதிநிதியாவது இருப்பார்.

லேப்சிக் மிஷன் தன் வட்ட வேலையை 1—1—1927-இல் மறுபடியும் ஒப்புக்கொண்டது. அதுவரையும் திருச்சபை ஆலோசனைச் சங்கத்தில் தலைவர் நீங்கலாக மூன்று குருமாரும், மூன்று குருவல்லாதவரும் அங்கத்தினராக விருந்தனர். லேப்சிக் மிஷன் திரும்பி வந்ததாலும் இந்திய குருமாரின் தொகை குறைக்கப்படக் கூடாது என்ற விருப்பம் ஏற்பட்ட



**The Rt. Rev. J. Sandegren,** M.A., D.D., C.N.O.,
*(The Third Bishop of Tranquebar from 1934–1956)*
born in Madurai on 20–11–1883, ordained on 14–12–1906, arrived in India on 15–11–1907, consecrated as the third Bishop of Tranquebar on 14–1–1934 and retired in 1956.

தாலும் A பத்திரத்தின் 7-வது பகுதி பின்வருமாறு சில காலத்திற்குப் பிறகு திருத்தியமைக்கப்பட்டது.

"தலைவர் நீங்கலாக ஆலோசனைச் சங்கத்தில் குருமார், குருவல்லாதோரின் எண்ணிக்கை சமவீதமாயிருக்கும்."

1926-ஆம் ௵ மே மாதத்தில் சினட் கூட்டத்தார் Doc. D-இல் குறித்துள்ள மேற்படி திட்டத்தை உறுதிப் படுத்தினதுமன்றி, பொருளாதார விஷயமாய் அடியிற்கண்ட ஒப்பந்தம் செய்யப்பட்டது.

சில பிரமாணங்களுக்கேற்ப இரு மிஷன்களும் தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபைக்கு வருஷவாரியாகப் பொருளுதவி செய்ய ஒப்புக்கொள்ளுகிறது. வட்டங்களின் தேவைகளுக்குத் தகுந்தாற்போல் ஆலோசனைச் சங்கம் போடும் திட்டங்களுக்கு வேண்டிய மொத்தத் தொகையை இரு தாய்ச் சங்கங்களும் கலந்து நிர்ணயிப்பார்கள். தெற்கு வட்டத்திலுள்ள தேவை களுக்கு ஸ்வீடிஷ் மிஷன் போர்டாரும் வடக்கு வட்டத்தி லுள்ள தேவைகளுக்கு லைப்சிக் கொல்லேகியமும் கொடுப் பார்கள்.

லைப்சிக் மிஷன் இந்தியாவில் மறுபடியும் வேலை தொடங்கிய ஆரம்ப காலத்தில் சிரேஷ்டர் மைனர் ஐயர் மிஷன் தலைவராகவிருந்தது மிகவும் நன்மையாயிருந்தது. சீக்கிரத்தில் தெற்கு வட்டத்தைவிட வடக்கு வட்டத்தில் குருப்பட்டம் பெற்ற மிஷனெரிகள் அநேகர் வந்தார்கள். அவர் களில் வாலிபரானவர்கள் சபை அமைப்புத் திட்டத்திற்கு அடங்கி வேலை செய்வதில் சில கஷ்டங்கள் ஏற்பட்டன. நமது சபையை மறுபடியும் சந்தித்த கனம். C. ஈமெல்ஸ் சாஸ்திரி யார் அந்த மிஷனெரிமார்களுக்கு சபையின் நோக்கத்தையும் மிஷனெரிமார்களின் நோக்கத்தைச் சபைக்கும் தெளிவாக விளக்கினார். பிற்காலத்தில் மறைத்திரு. P. கேப்ளர் அவர்கள் தலைமையில் மிஷனெரிமாருக்கும் சபைக்கும் நல்ல சம்பந்த மிருந்து வந்தது. சபையும் அதை நன்கு பாராட்டியது. ஜெர்மன் தேசத்திலிருந்து பொருளுதவி வரும் விஷயமாக அரசாங்கத் தடைகள் ஏற்பட்டு 1—10—1934-இல் இருந்து லைப்சிக் மிஷன் சபைக்குக் கொடுக்கவேண்டிய பொருளுதவி நின்றுபோன போதிலும் திருச்சபை ஆலோசனைச் சங்கத் திற்குத் தன் பிரதிநிதியைத் தொடர்ந்து அனுப்பிக்கொண் டிருக்கும்படி சபை விரும்பியது.

இரண்டாம் மகாயுத்தம் ஆரம்பித்தவுடன் லைப்சிக் மிஷன் தலைவர் தன் வட்டத்தின் வேலையை ஒப்புக்கொள்ளும்படி தமிழ் சுவிசேஷ லுத்தரன் தலைவருக்கும், ஸ்வீடிஷ் மிஷன் தலைவருக்கும் எழுதினார். லைப்சிக் மிஷன் வட்டத்தை ஸ்வீடிஷ் மிஷன் கொடுக்கும் பணவுதவியைக் கொண்டு T. E. L. C. நடத்த வேண்டுமென்று ஸ்வீடன் மிஷன் போர்டார்கள் தந்தி வழியாகத் தெரிவித்தனர். பிறகு வடக்கு வட்ட நிர்வாகம் ஐக்கிய ஆலோசனைச் சங்கத்திற்கு (J. C.) ஒப்புவிக்கப்பட்டது. லைப்சிக் மிஷனெரிமார் சிலகாலம் காவலில் வைக்கப்பட்ட பிறகு தத்தம் வேலை ஸ்தலத்திற்குத் திரும்பும்படி அனுமதிக்கப்பட்டனர். வடக்கு வட்டத்தின் வேலையை மேற்பார்க்க மிஷன் கௌன்ஸில் தலைவரையே J. C.-ஆல் ஏற்படுத்தப்பட்ட கமிட்டியின் தலைவராக வைத்த போதிலும் லைப்சிக் மிஷனெரிமார் J. C.-இன் சார்பாக உழைக்க மனமற்றிருந்தனர். ஆகையினால் மிஷன் சங்கத்தின் ஆதரவில் Northern Field Committee என்னும் ஒரு நிர்வாகம் ஏற்படுத்தப்படவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

---

## 5. சபையும் ஸ்வீடிஷ் மிஷனும்.

1919-ஆம் ஆு சபையின் அமைப்புத் திட்டம் ஏற்பட்டு 1921-இல் ஸ்வீடனிலிருந்து வந்த ஸ்தானாதிபதிகளின் சந்திப்பின் பயனாகத் திருத்தியமைக்கப்படும்பொழுது, வேலையின் ஒற்றுமையைத் தற்காக்கும் பொருட்டு சபைத் தலைவரே மிஷன் தலைவராகவுமிருத்தல் அவசியமெனக் கருதப்பட்டது. உயர்மிகு மறைத்திரு. E. ஹெய்மன் அத்தியட்சர் காலத்தில் மிஷன் தலைவர் பதவியை மற்றொருவருக்கு மாற்றவேண்டுமென்ற பிரச்சினை தொடங்கியது. அவர் இறக்கவே புதிய பழக்கம் ஒன்று புகுத்தப்பட்டது. உயர்மிகு மறைத்திரு. பெக்சல் அத்தியட்சர் சபையின் தலைவராயிருக்க மறைத்திரு. J. சாந்தகிரேன் சாஸ்திரியார் மிஷன் தலைவரானார். இதன் பயனாக ஒரு சங்கம் மற்றொரு சங்கத்தை அனுசரிக்காமலே காரியத்தைத் தீர்மானிக்க இடமாயிற்று. அப்படி ஒன்றுக்கொன்று முரண் ஏற்படும்போது மிஷனைவிடச் சபையே அதிகமாகப் பாதிக்கப்பட ஏதுவாயிற்று. இவ்விதப் போக்கு உயர்மிகு மறைத்திரு. பெக்சல் அத்தியட்சர் காலத்திலேயே

ஆரம்பித்தபோதிலும், மறைத்திரு. J. சாந்தகிரேன் சாஸ்திரியார் அத்தியட்சர் ஆன கொஞ்ச காலத்திற்குள் உச்ச நிலையை அடைந்தது. சபையானது வட்ட முழுவதிலும் தன் வேலையைச் செய்துவர வடக்கு, தெற்கு வட்டங்களில் தனித் தனியே இரண்டு வேறுபட்ட மிஷன்களிருந்ததினால் மிஷன் சங்கம் சுயேச்சையாகக் காரியங்களைச் செய்ய அவசியமிருக்கிறதென்று பலமாய் விவாதிக்கப்பட்டது.

லேப்சிக் வட்டத்தில் சபைக்கேற்பட்ட கஷ்டங்களை C. ஈமல்ஸ் சாஸ்திரியார் இரண்டாம் முறை இந்தியாவிற்கு வந்தபோது ஒருவாறு நீக்கிவைத்தார். அதேமாதிரி கஷ்டங்கள் தெற்கு வட்டத்திலும் உண்டாயின. திருச்சபை ஒரு தனி ஸ்தாபனமாக அமைக்கப்பட்ட காலத்திலிருந்து அநேக வருஷங்களாக ஸ்வீடிஷ் மிஷனுடன் சபை பரஸ்பர ஐக்கியத்தை அனுபவித்து வந்ததினால் இது சபைக்கு அதிக வருத்தத்தையுண்டு பண்ணிற்று. 1938-ஆம் ௵ தாம்பரம் மகாநாட்டு சமயத்தில் ஸ்வீடன் தேசத்திலிருந்து ஸ்தானாபதிகள் அனுப்பப்படுகிற வரை நிலைமை மிகவும் மோசமாகிக் கொண்டிருந்தது. என்றாலும் தாம்பரம் மகாநாட்டு சமயத்தில் ஸ்வீடனிலிருந்தும் லேப்சிக்கிலிருந்தும் ஸ்தானாபதிகள் வந்தபோது சபை அமைப்புத் திட்டம் மறுபடியும் கவனத்தோடு பரிசீலனை செய்யப்பட்டது. மூன்று சங்கங்களின் ஐக்கியக் கூட்டத்தில், சீர்மை ஸ்தானாபதிகளும் கலந்ததன் பயனாக மிஷன்களும் சபையும் தனித்தனி ஸ்தாபனங்களாக இருக்கவேண்டுமென்றாலும், மூன்றிற்கும் ஒரே நோக்கமும், மனப்பான்மையும், ஒன்றுக்கொன்று பரஸ்பர ஒத்துழைப்பும் இருக்கவேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. மேலும் J. C. சங்கம் மூன்று சங்கங்களையும் ஒன்று சேர்க்கும் ஸ்தாபனமா யிருக்குமென்றும் மிஷனெரிகளுக்கும், சபை அங்கத்தினர்களுக்கும் வட்டம் முழுவதிலும் நல்ல தொடர்பை வளர்க்க, பகுதி மகாநாடுகள் (Regional Conferences) கூட்டப்படவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டன. இதனால் நல்ல பயன் ஏற்பட்டது.

முடிவான சபை அமைப்புத் திட்டம் (New Document—B) 1950-ஆம் ௵ ஜனுவரி ௴ 14-ஆம் ௳ திருச்சியில் ஒப்புக்கொள்ளப்பட்டது. சுவீடன் மிஷன் சங்கத்தின் சார்பாக அதன் செயலாளர் மறைத்திரு. A. பேவர்பெல்ட் அவர்களும் லேப்சிக் மிஷன் சங்கத்தின் சார்பாக அதன் செயலாளர்

C. ஈமல்ஸ் சாஸ்திரியாரும், தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபையின் சார்பாக அதன் தலைவர் பிஷப் J. சாந்தகிரேன் சாஸ்திரியாரும் அதற்குக் கையொப்பமிட்டார்கள். இதன் படியே பின்குறிப்பிட்ட சில ஸ்தாபனங்கள் தவிர மற்றவை திருச்சபை ஆலோசனை சங்கத்தாரின் நேரான விசாரணைக் குட்பட்டன.

இவ்வாறு விசேஷித்து குறிப்பிட்ட ஸ்தாபனங்கள்:—

1. டிபாக்கோனிமார் ஊழியம்
2. வைத்திய ஊழியம்
3. யுவபுரி கிறிஸ்தவ வாலிபர் சங்கம்
4. கைத்தொழில் ஸ்தாபனம்
5. தரங்கை அச்சகமும் பதிப்பகமும்
6. ஆரம்ப சுவிசேஷப் பணிவட்டம் (Board of Pioneer Evangelism)

---

சபையின் யுவர்கள் நடுவே திருப்பணி நடத்தும் கிறிஸ்தவ சிஷ்ய சங்கத்தின் தலைவர் திரு. J. M. டேவிஸ்

கூட்டுச் செயலாளர் : மறைத்திரு. Y. பிரிக்கொல்ம்
,, A. மினுசோன்

நமது சபையின் புதிய அத்தியக்ஷராயிருக்க மறைத்திரு. R. B. மாணிக்கம் சாஸ்திரியார் நியமனம் பெற்றிருக்கிறார். 1956-ஆம் வருஷம் ஜனுவரி மாதம் 14-ஆம் தேதியில் அவருக்குப் பட்டாபிஷேகம் தரங்கையில் நடக்குமென எதிர் பார்க்கிறோம்.

---

